# பெரியபுராண ஆராய்ச்சி

ஆசிரியர் :

புலவர்-மா. இராசமாணிக்கனார், B. O. L., L. T., M. O. L.,

விவேகானந்தர் கல்லூரி, சென்னை.

மாடல் பப்ளிகேஷன்ஸ்

50, பத்ரையன் தெரு, :: சென்னை.

பதிப்புரிமை] 1948 [விலை ரூபா 5

# அணிந்துரை

கலைகள் பல சிறந்தன. அவற்றுள் ஒன்று வரலாறு அல்லது சரித்திரம். வரலாற்றுக்கலை வாழ்க்கைக்கு இன்றியமையாதது. அது வாழ்க்கையைப் பண்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது.

வரலாறு—தனிமை, குடும்பம், ஊர், நாடு, உலகம், உயிர், கடவுள், சமூகம், ஆட்சி, புரட்சி, போர் முதலியவற்றினின்றும் பரிணமிப்பது. அதனுள் பற்பல நிகழ்ச்சிகளும், விளைவுகளும் நிலவுகின்றன. அவை, கொள்ளத் தக்கன இவை என்பதையும், தள்ளத் தக்கன இவை என்பதையும் உள்ளங்கை நெல்லிக்கனி யென விளங்கச் செய்யும். இவ்விளக்கம் வாழ்க்கைக்குத் துணைபோதல் ஒருதலை. இத்தகைய வரலாற்றுக் கலையை, 'வாழ்க்கை வழிகாட்டி' என்று கூறலா மன்றோ?

நமது நாடு புராணக் கலைக்குப் பேர் பெற்றது. புராணம் புனைந்துரையா? சரித்திரமா? இரண்டுங் கலந்த ஒன்றா? இரண்டுங் கலந்த ஒன்று புராணம் என்று கொள்வது பொருந்தும். இதுபற்றி வின்ஸென்ட் ஸ்மித் உள்ளிட்ட சரித்திர ஆசிரியன்மார் வெளியிட்டுள்ள கருத்துக்கள் சிந்திக்கற்பாலன.

தமிழ் நாட்டில் ஒரு தனிப் புராணம் உலவுகிறது. அது, 'திருத்தொண்டர் புராணம்' என்பது. அதற்குப் 'பெரிய புராணம்' என்றொரு பெயரும் வழங்கப்படுகின்றது. அதைத் 'தமிழ் நாட்டு வரலாற்றுப் புராணம்' என்றுஞ் சாற்றலாம்.

சேக்கிழார் தொண்டுலகு உய்யவந்த தோன்றல்—பெருவாழ்வு—தெய்விகம். அவர்தங் கல்வி, கேள்வி, ஆராய்ச்சி, அன்பொழுக்கம், பணி முதலிய அடைவுகளெல்லாந் திரண்டு தொண்டாய் அவருள் ஒன்றின. அவர் தொண்டராயினர். தொண்டரிடத்திருந்து 'தொண்டர் புராணம்' முகிழ்த்தது.

திருத்தொண்டர் புராணம் அருளப் போந்த ஆசிரியர் அமைச்சுத் தொண்டாற்றியவர். அமைச்சர் நெஞ்சம் வெறுங் கதையை

விலா நின்றிருக்கும்? அவர் நெஞ்சம் வரலாற்றிலும் படிந்தது. சேக்கிழார் தமது புராணக் காப்புக்கு வரலாற்று அரண் கோலினர். அவரது புராணம் தமிழ் நாட்டின் வரலாற்றுக்கு ஓர் ஊற்றாயிற்று. அவ்வூற்றுக்கண்கள் இடைநாளில் தூர்ந்தன. தூர்ந்த கண்கள் இந்நாளில் ஒருவருக்குப் புலப்பட்டன. அவரால் அக்கண்கள் திறக்கப்பட்டன. அவர் எவர்? அவர் புலவர் மா. இராசமாணிக்கம், B.O.L., L.T., M.O.L.

புலவர் இராசமாணிக்கம், சிறந்த ஆராய்ச்சியாளர். அவர் தம் ஆராய்ச்சி சில நூல்களாகப் பயன் படுகிறது. அந்நூல்களுள் ஒன்று 'பெரிய புராண ஆராய்ச்சி' என்னும் இந்நூல்.

பெரிய புராணத்தைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் சில வெளி வந்துள்ளன. அவற்றுள் அறிஞர் இராசமாணிக்கத்தின் ஆராய்ச்சியே விழுமியது—விரிந்தது—பொருள் செறிந்தது—என்று கூற என் மனம் எழுகிறது.

பெரிய புராணம் ஒரு பெருஞ் செழும்புலம்—தமிழ்ப் புலம். அதை உழுவதற்கு வெறுங் கல்வி கேள்வி மட்டும் போதா; வேறு பல பண்பாடுகள் தேவை. புலவர் இராசமாணிக்கம் அஞ்சா நெஞ்சங் கொண்டு பெரிய புராணப் புலத்தில் இறங்கினர்; ஊக்கமும் உறுதியுங் கொண்டு அதை உழுதனர்; அதில் அன்பு விதை விதைத்தனர்; அருள்நீர் பாய்ச்சினர்; கலைக்கதிர் பொழிந்தனர். எழுந்தது ஆராய்ச்சிப் பயிர்; விளைந்தது சரித்திரச் சாலி. அமுதப் பசும் பாவை காட்சி யளிக்கிறது. கண்ணுக்கும் கருத்துக்கும் மூளைக்கும் விருந்து; நல் விருந்து.

'பெரிய புராண ஆராய்ச்சி'யில் பல மணிகள் மிளிர்கின்றன. அவையாவும் அறிவுக்குரிய அணிகள். அவற்றுள் கண்டு எதைத் தொடுவது; எதை விடுவது; தியக்கம் ஏற்படுகிறது. இரண்டொன்றை யாதல் தொட்டு விடுதல் நல்லதென்று தோன்றுகிறது.

'பெரிய புராண ஆராய்ச்சி' காலக் கணக்கின் மீது பெருங்கவலை செலுத்தியிருக்கிறது. காரணம், நமது நாட்டுச் சரித்திரக் காலங்கள் கருக்கொண்டுள்ளமையும், அவை இன்னும் நன்முறையில் உருக்

கொள்ளாமையுமாகும். இந்நூலாசிரியர் கருவை உருவாக்க விண்ணும் மண்ணும் அதிரச் சுழன்று சுழன்று உழைத்த உழைப்பு அதிகம்.

சேக்கிழார், நம்பியாண்டார் நம்பி, சுந்தரர், சம்பந்தர், பல்லவர் முதலியோர் காலங்களைக் காண இந்நூலாசிரியர் முயன்றுள்ளனர். அம்முயற்சியின் அருமைப்பாடு அத்துறையில் ஈடுபட்டவர்க்கே தெரியும். ஆசிரியர் நிகழ்த்தியுள்ள ஆராய்ச்சி, இனி நாட்டில் எழப் போகுஞ் சரித்திர நிலையத்துக்குக் கால்கோளாகியுள்ளது. அது, பின் வருவோர் அறுதியிட்டுக்கும் பெருந்துணை புரிவதாகும்.

பெரிய புராணக் கதைகள் சரித்திர உயிர்ப்பு ஏறப் பெற்றவை. அவ்வுயிர்ப்புக்கு இடைக்காலத்தில் சவலை நேர்ந்தது. அச் சவலையைப் போக்கிய பெருமை இந்நூலாசிரியருடையது. அவர் தம் முயற்சியால் பெரிய புராணம் மீண்டுஞ் சரித்திர புராணமாய் உயிர்த்தெழுந்தது.

சேக்கிழாரின் பல் கலைப் புலமை இந்நூலில் ஓதப்பட்டிருக்கிறது. அதை நோகக நோக்க, இந்நூலாசிரியரின் கலைப் புலமை நெஞ்சில் நிலவுகிறது. சேக்கிழார் ஒரு பல்கலைக் கழகம் என்பது ஆசிரியரால் நிறுவப்பட்டிருக்கிறது.

சேக்கிழார் அன்பை ஒரு காவியமாக வடித்த கவிஞர். அவர் தம் கவிநலம், பல துறைகளில் ஈடுபட்டுக் கருவி கரணங்களோய்ந்து கனிந்து அகமனம் பெற்றவர்க்கே செவ்விதிற் புலனாகும். ஆசிரியர் இராசமாணிக்கம் பெரிய புராணப் புலத்தைப் பன்முறை உழுது உழுது தேர்ச்சியடைந்தவர். அவர்க்குச் சேக்கிழார் பாட்டின் நடை, ஒழுக்கு, மென்மை, எளிமை, பொருண்மை, ஆழம் முதலியன புலனாகியுள்ளன. 'சேக்கிழார் செய்யுட் சிறப்பு' என்னுந் தலைப்பின் கீழ் நூலாசிரியர் எடுத்துக் காட்டியுள்ள பாக்களை உன்னுக; முன்னுக.

நூலின் இறுதியில் ஓர் அரிய சேர்க்கை பொலிதருகிறது. அஃது ஆராய்ச்சியாளர்க்குக் கொழு கொம்பாகும். அது திறம்படத் தொகுக்கப் பெற்றிருக்கிறது.

திருத் தொண்டர் புராணம் இதுகாறும் சமய உலகில் பெரிதும் போற்றப்பட்டு வந்தது. இனி அது வரலாற்று உலகிலும் போற்றப் பெறும். இப் பேற்றை நாட்டுக்கு வழங்கிய புலவர் இராசமாணிக் கத்தை நாடு வாழ்த்துவதாக. இராசமாணிக்கத்தின் ஆராய்ச்சி சேக் கிழார் நூலுக்கு ஒரு விதப் புத்துயிர் அளித்தது என்று கூறல் மிகை யாகாது.

இந்நூலின் உரைநடை எளிமையில் அமைந்துள்ளது. அஃது ஆராய்ச்சிக்கு ஏற்றது. அதில் வெற்றுரையோ சொல்லடுக்கோ பொருளற்ற மொழியோ காணேம். ஆசிரியர் எண்ணம் பெரிதுங் கருத்திலேயே சென்றிருக்கிறது. புலவர் நடை அருமை என்று சொல்லப்படுவது வழக்கம். புலவர் இராசமாணிக்கத்தின் நடை அவ்வழக்கைப் பொய்ப்படுத்திவிட்டது.

தோழர் இராசமாணிக்கத்தின் புலமை ஆராய்ச்சித்துறையை நண்ணியது தமிழ் நாட்டின் திருவேயாகும். தமிழ் நாட்டின் ஆக்கத் துக்கு இன்னும் பல ஆராய்ச்சி நூற்கள் தோழர் வாயிலாக வெளி வருதல் வேண்டும். தமிழ்த் தெய்வம் அவருக்கு நீண்ட நாளையும், நல்ல யாக்கையையும், மற்றும் பல பேறுகளையும் அருள்வதாக. இராசமாணிக்கம் வாழ்க; அவர்தம் முயற்சி வெல்க.

இராயப்பேட்டை,
சென்னை.

திரு. வி. க.

# முகவுரை

## பல்லவர் வரலாறு

நான் பல்லவர் வரலாறு எழுத விரும்பி அதற்குரிய ஆராய்ச்சி நூல்களையும் பல்லவர் காலப் பட்டயங்களையும் கல்வெட்டுகளையும் இலக்கிய நூல்களையும் படித்துவந்த பொழுது, மூவர் திருமுறைகளில் வரும் சில குறிப்புகளும் பெரிய புராணத்தில் வரும் பல குறிப்புகளும் கல் வெட்டு-பட்டயக் குறிப்புகளுடன் ஒன்று படுதலைக் கண்டு வியந்து ஆராயத் தொடங்கினேன்; அவ்வாராய்ச்சியின் பயனாக, பெரிய புராணத்திற் காணப்படும் போர்கள் - பஞ்சங்கள் - ஊராட்சி முறை - நாணய முறை - சமுதாய வாழ்க்கை - சமயநிலை முதலியன பல்லவர் கால உண்மை வரலாற்றை அடிப்படையாகக் கொண்டவை என்பதை அறிந்தேன்; இந்த உண்மைகளுட் சிலவற்றை எனது பல்லவர் வரலாற்றில் ஆங்காங்குக் குறிப்பிட்டுள்ளேன்.

## சோழர் வரலாறு

பெரிய புராணத்துக்கு மூல நூல்களாகக் கூறப்படும் 11 திருமுறைகட்கும் பெரிய புராணத்திற்கும் பல இடங்களில் வேறுபாடுகள் உண்டு; பின்னவற்றிற் காணப்பெறாத பல செய்திகளைச் சேக்கிழார் விரிவாகக் கூறலும், பின்னவற்றிற் குறிப்பாகக் கூறப்பட்டவற்றைச் சேக்கிழார் பல விவரங்களுடன் கூறலும் கவனிக்க, சேக்கிழார் கூற்றுக்குத் தக்க சான்றுகள் அவர் காலத்தில் இருந்திருத்தல் வேண்டும் என்ற எண்ணம் உண்டாயது. அவ்வெண்ணம் சோழர் வரலாறு எழுத விரும்பி ஆராய்ச்சி நிகழ்த்திய பொழுது உறுதிப்பட்டது. விஜயாலயன் மரபினரான சோழப் பேரரசர் காலத்தில் சைவ சமய வளர்ச்சி உச்சநிலையை அடைந்தது; பாடல் பெற்ற கோவில்கள் கற்றளிகளாக மாறின; நாயன்மார்க்குக் கோவில்களிற் பூசையும் விழாவும் நடத்த ஏற்பாடுகள் நடைபெற்றன; நாயன்மார் வரலாற்று நிகழ்ச்சிகள் ஓவிய-சிற்பங்களிற் காட்டப்பட்டன. அக்கால மக்கள் நாயன்மார் பெயர்களைத் தங்கள்

பிள்ளைகட்கு இட்டு வழங்கினர். இத்தகைய பல விவரங்கள் சோழர் காலத்துக் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்தன; மேலும் பெரிய புராணத்திற் கூறப்பட்ட சிற்றரசர் மரபினர் சேக்கிழார் காலத்திலும் சிற்றரசர்களாகவே இருந்து வந்தனர் என்பதையும் கல்வெட்டுகள் மெய்ப்பிக்கின்றன. இத்தகைய பல விவரங்களைக் கொண்டும், சோழப் பெருநாட்டின் முதல் அமைச்சராக இருந்து தாம் பல வழிகளில் அறிந்த பிற செய்திகளைக்கொண்டுமே சேக்கிழார் வரலாற்றுப் பகுதிகளைத் தமது பெரு நூலிற் பாடினர் என்பது விளக்கமாயிற்று.

## அரங்கேற்றம்

இங்ஙனம் யான் அறிந்து வைத்த செய்திகள் பேரறிஞர் முன் அரங்கேற்றம் பெறவேண்டுமல்லவா? 1942-ஏப்ரல் திங்களில் தஞ்சை - மன்னார்குடியில் கோவை - பெரியபுராண விருத்தியுரை ஆசிரியர் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், B. A. அவர்கள் தலைமையிற் பேசினேன்; அதே ஆண்டு நவம்பர் முதல் நான்கு நாட்கள் சென்னையில் தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாண சுந்தரனார் அவர்கள் தலைமையிற் பேசினேன்; 1943 ஏப்ரலில் தஞ்சை-மன்னார்குடியில், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர்-திரு. ரா. பி. சேதுப் பிள்ளை (B. A., B. L.) அவர்கள் முன்னிலையிற் பேசினேன்; அதே ஆண்டு, செப்டெம்பர்த் திங்களில் வேலூர்-நகரப் பெருமண்டபத்தில் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, (B. A., L. T.) அவர்கள் தலைமையில் ஐந்து நாட்கள் சொற்பொழிவாற்றினேன்; அதே ஆண்டு அக்டோபர் மாதம் சேலம்-செவ்வாய்ப் பேட்டையில் நடைபெற்ற சன்மார்க்க சங்க மாநாட்டில் - மறைத்திரு - மறைமலையடிகளார் தலைமையில் இரண்டு நாள் பேசினேன்; 1944 மே மாதம் பழநி-சைவ சித்தாந்த மாநாட்டில் - தமிழ் அறிஞர் - திரு. T. M. நாராயண சாமிப்பிள்ளை (M. A., B. L.) அவர்கள் தலைமையிற் பேசினேன். இப்பெருமக்கள் இவ்வாராய்ச்சிக்கு ஊக்கம் அளித்தனர்.

## எனது விருப்பம்

இந்த ஆராய்ச்சிச் செய்திகளில் சமயத் தொடர்பான-கருத்து வேறுபாடுகட்கு இடமான-செய்திகள் இடம் பெற்றில. அவற்றை ஆராய்வதும் இம் முயற்சியின் நோக்கமன்று. சேக்கிழார் சிறந்த வரலாற்று உணர்ச்சியுடன் தக்க சான்றுகளைக்கொண்டே-சிறப்பாக, நாயன்மார் கால நிலையை உளங் கொண்டே தமது நூலைப் பாடியுள்ளார் என்பதும், பெரிய புராணம் வரலாறு - இலக்கியம் - இலக்கணம்-சமய சாத்திரங்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்டு செய்யப்பட்ட பெருங் காவியம் என்பதும் சாதாரண தமிழ்மக்களும் அறிதல் வேண்டும் என்பது எனது விருப்பம். ஆதலின் இவ்வாராய்ச்சிச் செய்திகளை நூல் வடிவில் வரைய விரும்பினேன்.

## ஆராய்ச்சி நூல்

நூல் ஆங்கிலத்தில் எழுதப் பெறின் எம். ஒ. எல். (M. O. L.) ஆராய்ச்சிப் பட்டத்திற்கு அனுப்பலாம் என்னும் எண்ணம் தோன்றியது. எனது நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராக இருந்த இராவ்சாஹிப் - திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை (B. A., B. L.) அவர்கள் நன்கு பார்வையிட்டு உதவினர்கள். பின்னர் 1945 ஜனவரித் திங்களில் நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத்துக்கு அனுப்பினேன்; அதே ஆண்டு ஜூலைத் திங்கள் எம். ஓ. எல். பட்டம் கிடைத்தது.

ஆங்கிலத்தில் நூலை வெளியிடுவதிலும் தமிழில் வெளியிடல் தமிழர் படிக்க நன்றும் ஆதலின் மிக விரிவான முறையில் தமிழில் எழுதத் தொடங்கினேன்; ஆங்கில நூலில் சுருங்கக் கூறிய பல செய்திகள் இதனில் விரிவாகக் கூறியுள்ளேன்; ஆங்கில நூலில் இடம் பெறாத பிற் சேர்க்கை 1-10 இதனில் இடம்பெற்றுள்ளன.

## காவியச் சிறப்பு

சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய தமிழ் நாட்டுக் காவியங்கட்குப் பல நூற்றாண்டுகட்குப் பிறகு தமிழ் நாட்டு மக்களைப் பற்றி எழுந்த காவியம் பெரியபுராணமே ஆகும். மேலும் இதன்

கண் இடம் பெற்றுள்ள நாயன்மார் துங்கபத்திரையாற்றின் கரையில் உள்ள காம்பீலி நகரம் முதல் கன்னிமுனைவரை உள்ள நாட்டினராவர். அவர் பல மரபினர்; பல்வேறு காலத்தவர். அவர்கள் பழக்க வழக்கங்கள், உள்நாட்டு வாணிகம், கடல் வாணிகம், அக்காலச் சமயநிலை, பல கலை வளர்ச்சி, தென் இந்திய வரலாற்றுச் செய்திகள் முதலியன வேறு எந்தத் தமிழ் நூலைக் கொண்டும் இந்த அளவு அறிய வசதி இல்லை. இந்நூலைக்கொண்டுதான் பல்லவர் காலத் (கி. பி. 300—900) தமிழகத்தை ஒருவாறு அறிய முடியும்; பரந்துபட்ட இக்கால நிலையை விளக்கவும் நூற்றுக்கணக்கான தலங்களைக் குறிக்கவும் சேக்கிழார் தமிழ் நாடு முழுவதும் சுற்றியவர் * என்பது கவனிக்கத் தக்கது. இங்ஙனம் அரும்பாடுபட்டு ஆராய்ச்சி செய்து காவியம் பாடியவர் தமிழில் வேறொருவரே இல்லை. இவற்றால் பெரியபுராணம் தமிழர் வரலாற்றில் 600 வருடகால விவரங்களை ஓரளவு அறிவிக்கும ஆதார நூல் என்னல் தவறாகாது. இத்தகைய வரலாற்று நூலைத் தந்த சோழப் பெருநாட்டின் முதல் அமைச்சராகிய சேக்கிழார் பெருமானுக்கு † நமது நன்றியும் வணக்கமும் உரியவாகுக.

இந்த நூலுக்கு அணிந்துரை அளித்து எனது முயற்சிக்கு ஆசியளித்துள்ள பெரியார் திரு. வி. க. அவர்கட்கு என் நன்றியும் வணக்கமும் உரிய.

மா. இராசமாணிக்கம்
விவேகானந்தர் கல்லூரி, சென்னை.

---

* 'பிரெடரிக் என்னும் பெரியோர்' வரலாறு எழுதத் தாமஸ் கார்லைல் இரண்டுமுறை ஜெர்மன் நாட்டுக்குச் சென்று ஆராய்ச்சி செய்தார் என்பது இங்கு நினைக்கத் தகும்.

† இன்று நமது மாகாண அமைச்சருள் ஒருவராகவுள்ள திரு. M. பக்தவத்சலம் அவர்கள் சேக்கிழார் மரபினர் என்பது அறிந்து மகிழ்தற்குரியது.

# பொருள் அடக்கம்

## சேக்கிழாரும் அவர் மேற்கொண்ட வரலாற்றுச் செய்திகளும் பற்றிய ஆராய்ச்சி

---

# 1. ஆராய்ச்சிக்கு உரிய மூலங்கள்

### கால ஆராய்ச்சி

திருத்தொண்டர் புராணம் எனப்படும் பெரிய புராணத்தை ஆராயப் புகுமுன் அதன் ஆசிரியராகிய சேக்கிழார் வரலாற்றை ஆராய்வது நலம் பயப்பதாகும். அவரது காலம் - அவரது உண்மை வரலாறு ஆகிய இரண்டையும் நன்கு அறிதல், அவர் பாடிய நூலை அறிதற்குப் பெருந்துணை புரிவதாகும். சேக்கிழார் காலத்தை அறிந்த பிறகு, நாயன்மார் பட்டியலாகிய திருத்தொண்டத்தொகை பாடிய சுந்தரரது காலத்தையும், அதனைச் சிறிது விரித்துத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பி காலத்தையும் தக்க சான்றுகள் கொண்டு ஆராய்ந்து முடிவு கட்டுதல் நல்லது. இந்த மூன்று கால ஆராய்சசியாலும் நாம் (1) தொகை பாடிய - காலத்தாற் பிற்பட்ட நாயனாராகிய சுந்தரர் காலத்தையும், (2) தொகையைச் சிறிது விரித்துப் பாடிய நம்பிகள் காலத்தையும், (3) இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு காவியம் பாடிய சேக்கிழார் காலத்தையும் அறிவதுடன், ஒன்றுக்கொன்று இடைப்பட்ட காலவெளியையும் அறிகின்றோம்.

பின்னர் நாம், நாயன்மார் அறுபத்துமூவரது பரந்துபட்ட காலத்தை அறிதல் வேண்டும். அறுபத்திருவரைப்

பாடிய சுந்தரரது காலமே அப்பரந்துபட்ட காலத்தின் கீழ் எல்லையாகும். எனவே, நாம் மேல் எல்லையைக் கண்டறிதல் வேண்டும். சங்க காலம் என்பது 'இன்னது - என்று திட்டமாக வரையறுக்கக் கூடவில்லை. ஆயினும், அதன் கீழ் எல்லை ஏறத்தாழக் கி. பி. 300 என்னலாம் என்பதை ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொண்டுள்ளனர். அந்தக் கால எல்லைக்கு உட்பட்ட (இன்றுள்ள) சங்க நூல்களில நாயன்மார் ஒருவர் பெயரேனும் சுட்டப்படாமையின்,[1] அறுபத்துமூவர் காலத்தின் மேல் எல்லை சங்க இறுதிக்காலமாகிய கி. பி. 300 எனக் கொள்ளுதல் பொருந்தும். இங்ஙனம் நான்கு கால எல்லைகளையும் இலக்கிய - வரலாற்று நூல்களின் துணையைக்கொண்டு ஆராயின், கீழ்வரும் முடிபுகளைப் பெறலாம் :

| | | | |
|---|---|---|---|
| 1. | நாயன்மார் அறுபத்துமூவர் காலம் | | கி. பி 300-865 |
| 2. | சுந்தரர் | ,, | கி. பி. 840-865 |
| 3. | நம்பிகள் | ,, | கி. பி. 985-1014 |
| 4. | சேக்கிழார் | ,, | கி. பி. 1133-1150 |

## வரலாற்று ஆராய்ச்சி : நாயன்மார் காலம்

அடுத்தபடியாக, மேற்கண்ட நான்கு கால நாட்டு நடப்புகளை நன்கறிய வேண்டும்: (1) நாயன்மார் அறுபத்துமூவரும் துங்கபத்திரையாறு முதல் குமரிமுனை வரைப்பட்ட தென் இந்தியர் ஆவர். ஆதலின் அவர்கள் வரலாறுகளை அறிய, அவர்காலத் தென் இந்தியாவின் அரசியல் வரலாறு[2] -சமய வரலாறு[3] -பொருளாதார வரலாறு[4]

---

[1] கோச்செங்கட் சோழர் பெயர் புறநானூற்றிற் காணப்படினும் அவர் சங்ககாலத்தவர் அல்லர் என்பதை இந்நூல் 4-ஆம் பிரிவிற் காண்க.

[2] Political History.

[3] Religious History.

[4] Economic History.

சமூக வரலாறு[5] என்பவற்றை அறிதல் இன்றியமையாத தாகும். இந்த நான்கையும் அறிய அக்கால (கி. பி. 300-835)த் தென் இந்திய வரலாற்றை அறியவேண்டும். அவ்வரலாற்றை உணர்த்துவன யாவை? (a) அக்காலத்துச் செய்யப்பட்டு (அழிந்தன போக) இன்றுள்ள நூல்கள், (b) அக்கால அரசர் செப்புப் பட்டயங்கள், கல்வெட்டு கள் (c) அக்கால அரசர் கட்டிய கோவில்கள், வெளி யிட்ட நாணயங்கள், (d) அக்காலத்தில் தென்னாடு வந்து சென்ற அயல்நாட்டார் எழுதிவைத்த குறிப்புகள் முதலியன.

நாயன்மார் காலத்தில் கிருஷ்ணையாறுமுதல் தெற்கே புதுக்கோட்டைவரை பல்லவர் அரசாண்டனர்; அதற்குத் தெற்கே பாண்டியர் அரசாண்டனர். பல்லவர்க்கும் பாண் டியர்க்கும் இடையே மிகச்சிறிய நிலப்பகுதியைச் சோழர் ஆண்டனர்; மேற்கே சேரரும், அவர்க்கு வடக்கே கங்கர் என்பவரும், அவர்க்கு வடக்கே கதம்பர் என்பவரும், அவர்க்கு வடக்கே சாளுக்கியர் என்பவரும் அரசாண்ட னர். இப் பல திறப்பட்ட அரசர்களைப்பற்றிய வரலாறு களை (போர்கள் - சமயநிலை - பொருளாதார நிலை - சமூக நிலைகளை) நாம் நன்கறிதல் வேண்டும்.

கி. பி. ஆறாம் நூற்றாண்டில் சாளுக்கியர் வாதாபி யைத் தலைநகராகக் கொண்டு வடக்கே விந்தமலைமுதல் தெற்கே கங்கநாடுவரையும் கிழக்கே கிருஷ்ணையாறுவரை யும் ஆளத்தொடங்கினர்; அச்சாளுக்கியர்க்கும் தமிழகத் தையாண்ட பல்லவர்க்கும், சாளுக்கியர்க்கும் பாண்டியர்க் கும் போர்கள் நடைபெற்றன; சாளுக்கியர் படையெடுப்பு களால் பல்லவநாடு பெரிதும் பாதிக்கப்பட்டது; நாட்டில் பல காலங்களில் பல பஞ்சங்கள் தோன்றின. கி. பி. 8-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இராஷ்டிர

---

[5] Social History.

கூடர் என்பவர் சாளுக்கியரை வென்று சாளுக்கியப் பெருநாட்டை ஆளத்தொடங்கினர். அந்த இரட்டருக்கும் பல்லவர்க்கும் நட்பும் பகையும் மாறிமாறி இருந்தன; மணவுறவு ஏற்பட்டது. பல்லவர்க்கும் சேர சோழ பாண்டியர்க்கும் பல போர்கள் நடைபெற்றன.

## சமய நிலை

நாயன்மார் வாழ்ந்த காலத்தில் கங்கநாடு சமணர் நிறைந்த நாடாக இருந்தது. பல்லவர்க்கும் கங்கர்க்கும் ஏற்பட்ட உறவுகாரணமாகத் திகம்பர சமண முனிவர் தமிழ்நாடு முழுவதும் பரவிச் சமயப்பிரசாரம் செய்து வந்தனர்; திருப்பாதிரிப்புலியூரில் புகழ்பெற்ற சமண மடம் ஒன்று இருந்தது. நாட்டின் பல பகுதிகளில் சமண மடங்கள் இருந்து பாலி, வடமொழி, தமிழ் இம்மூன்றிலும் சமயநூல்களை வெளியிட்டன. சமணக் குரத்திமார் (பெண் துறவிகள்) மடங்களைத் தாபித்துப் பெண் உலகிற்குத் தொண்டு செய்துவந்தனர். இங்ஙனமே பௌத்தமும் பரவி இருந்தது. எனினும் சமணமே மேனிலை உற்றிருந்தது. கி. பி. 7-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை சமணம் தமிழகத்தை ஆட்சிபுரிந்ததென்று கூறல் தவறாகாது. பல்லவர்—பாண்டியர் இந்தச் சமணத்தைப் பெரிதும் ஆதரித்துவந்தனர். அதன் பயனாகத் தமிழ்நாட்டுப் பழைய சமயங்களான சைவமும் வைணவமும் பேரளவு கவனிப்பார் அற்றுக் கிடந்தன. அந்தச் சமயத்தில் தோன்றியவர்தாம் திருநாவுக்கரசரும், திருஞான சம்பந்தருமாவர். கி. பி. 7-ஆம் நூற்றாண்டின பிற்பாதி முதல் சைவமும் வைணவமுமே நாடெங்கும் வளர்ச்சி பெறலாயின. இங்ஙனம் உண்டான சமய மறுமலர்ச்சியைத் திருமுறைகள், ஆழ்வார்களின் அருட்பாடல்கள் இவற்றைக்கொண்டும் அக்காலத்துப் பல்லவர் - பாண்டியர் பட்டயங்கள், கல்வெட்டுகள், கோவில்கள், வடமொழி

நூல்கள், அயல்நாட்டார் குறிப்புகள் இவற்றைக்கொண் டும் நன்குணரலாம்.

சைவ மறுமலர்ச்சியில் தலைவர்களாக இருந்தவர் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தருமே யாவர். அவர் காலத்து நாயன்மார், பல்லவ - சோழ - பாண்டிய அரசர் என்பவர் அவர்கட்கு உறுதுணையாக இருந்தனர்; அவர் கட்குப் பிறகு பற்பல நாயன்மார் சைவத்தை வளர்த்த னர். இறுதியில் சுந்தரர் - அவர்காலத்து நாயன்மார், பல்லவ-சோழ-பாண்டிய மன்னர் முதலியோர் சைவத்தை வளர்த்து மறைந்தனர்.

இதுகாறும் கூறியவாறு, பல்லவர்காலத் தென்னாட்டு வரலாற்றை மேற்சொன்ன இலக்கியம் - பட்டயம் - கல்வெட்டு - கோவில்கள் - அயலார் குறிப்புகள் - நாணயங் கள் முதலிய சான்றுகளைக்கொண்டு நன்கு தெளிந்தபிறகு திருமுறைகளைப் படிப்பின், நாயன்மார் வரலாற்றுக் குறிப்புகளைப் பாதியளவு அறியலாம்.

## சுந்தரர்க்கும் நம்பிக்கும் பிற்பட்ட காலம்

ஏறக்குறையக் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பல்லவப் பெருநாடு சோழர் கைக்கு மாறி விட்டது. சோழர் வழிவழிச் சைவர் ஆதலால் அவர்கள் நாயன்மாரால் சிறப்பிக்கப்பெற்ற கோவில்கள் என்றும் அழியாமல் இருக்கவேண்டும் என்று கற்கோவில்களாக மாற்றினர்; மானியங்களைத் தாராளமாகவிட்டுப் பூசை விழா முதலியவை நன்கு நடைபெற ஏற்பாடு செய்தனர்; திருமுறைகளைத் தொகுத்தனர்; நாயன்மார் அறுபத்து மூவர் சிலைகளையும் கோவில்களில் எழுந்தருளச் செய்த னர்; அவற்றுக்குப் பூசை - விழா முதலியன நடை பெறத் தக்க ஏற்பாடுகள் செய்தனர்; அக்கால மக்கள் நாயன்மார் பெயர்களைத் தம் பிள்ளைகட்கு இட்டு மகிழ்ந்த

னர். நாயன்மார் வரலாறுகள் கோவில்களில் சிற்பங் களாகவும் ஓவியங்களாகவும் காட்சி அளிக்கத் தொடங் கின. இந்த முன்னேற்ற ஏற்பாடுகளில் தலை சிறந்தது இராஜராஜன் நம்பிகளைக் கொண்டு முதல் ஏழு திருமுறை களை முறைப்படுத்தியதே ஆகும்.

நம்பிகள் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்த ரர்மீது பல சிறு நூல்களைப் பாடித் தாம் அறிந்த அளவு அவர்களைப்பற்றிய குறிப்புகளைக் குறித்துச் சென்றனர்; தம் காலத்தில் வழங்கிவந்த அறுபத்துமூவருடைய சிறப் புடைச் செயல்களைத் 'திருத்தொண்டர் திருவந்தாதி' என்னும் நூலில் குறித்தனர்.

## நம்பிக்குப் பிறகு

இராசேந்திரன் முதலிய அரசரால் நாயன்மார் வரலாறு கள் செப்புச் சிலைகள்-கற்சிலைகள்-ஓவியங்கள் இவற்றின் வாயிலாகப் பரப்பப்பட்டன. அந்தந்த நாயன்மார் வாழ்ந்த ஊர்க்கோவில்களில் அவர்க்கு விழாக்கள் நடைபெற்றன. அவர்கள் பூசைக்கும் விழாக்கட்கும் நிலதானம் செய்யப் பட்டது. இந்த விவரங்கள் எல்லாம் சோழர் காலக் கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் காணப்படுகின் றன. எனவே, சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடுவதற்கு முன்னரே,

1. நாயன்மார் வரலாறுகளை மக்கள் ஓரளவு அறிந் திருந்தனர்;

2. அவர்களுடைய பெயர்களை மக்கள் வைத்து மகிழ்ந்தனர்;

3. நாயன்மார் வரலாற்று நிகழ்ச்சிகள் ஓவியங்கள், சிற்பங்கள் வாயிலாகக் காட்சி அளித்தன;

4. திருமுறைகள் நாடெங்கும் ஓதப்பட்டு வந்தன

5. நாயன்மார் உருவச்சிலைகட்குப் பூசையும் விழாவும் நடைபெற்றன ;

6. தில்லை உலாப் போன்ற சோழர்கால இலக்கிய நூல்களில் நாயன்மாருடைய செயற்கரிய செயல்கள் பாராட்டப்பட்டன.

இவ்வுண்மைகளை அறியத் துணைபுரிவன யாவும் இவ்வாராய்ச்சிக்கு உரிய மூலங்கள் ஆகும். அவையாவன :

1. பல்லவர் காலத் தென்னாட்டு நிலையை விளக்கும் வரலாற்று நூல்கள், [6]

2. பல்லவர் - பாண்டியர் - சாளுக்கியர் கல்வெட்டுகளும் பட்டயங்களும்,

3. பல்லவர்கால வடமொழி நூல்கள்,

4. பல்லவர் காலத் தமிழ் நூல்கள்,

5. பல்லவர் காலத்துக் கோவில்கள்,

6. சேக்கிழார் காலம்வரை வெளிவந்த சோழர் கல்வெட்டுகள் - பட்டயங்கள்,

7. சோழர்காலத் தமிழ் நூல்கள்,

8. சமண - பௌத்த சமய நூல்கள்,

9. பாடல்பெற்ற கோவில்கள், சிற்பங்கள், ஓவியங்கள், உருவச்சிலைகள்,

10. சோழர் புதியனவாக எடுப்பித்த பெருங்கோவில்கள் - சிற்பங்கள் - ஓவியங்கள் - உருவச் சிலைகள் முதலியன.

இவை அனைத்தையும் சேக்கிழார் எங்ஙனம் தம் பெருங்காவியத்திற்குப் பயன்படுத்தினார் என்பதை இந் நூற்பகுதிகளுள் விரிவாகக் காணலாம்.

---

6 பல்லவர் வரலாறு, பாண்டியர் வரலாறு, சோழர் வரலாறு, கங்கர் வரலாறு, கதம்பர் வரலாறு, சாளுக்கியர் வரலாறு, இராஷ்டிரகூடர் வரலாறு, சேரர் வரலாறு முதலிய வரலாற்று நூல்கள்.

## 2. சேக்கிழாரும் அவர் காலமும்

நாம் ஆராய்ச்சி செய்ய எடுத்துக்கொண்ட பொருள் "சேக்கிழாரும் அவர் மேற்கொண்ட வரலாற்றுச் செய்திகளும் பற்றிய ஆராய்ச்சி" * என்பது. இதற்கு முதற்படியாக வேண்டுவது, 'சேக்கிழார் யார்? அவர் காலம் என்ன?" என்பது. இங்கு இதுபற்றி ஆராய்வோம்:

### சேக்கிழார் புராணம்

சேக்கிழார் வரலாறு, இப்பொழுதுள்ள பெரிய புராணப் பதிப்புகளின் முதலில் அல்லது ஈற்றில் சேர்க்கப்பட்டுள்ள 'திருத்தொண்டர் புராண வரலாறு' அல்லது 'சேக்கிழார் புராணம்' என்பதில் காணப்படுகின்றது. இதுவே சேக்கிழார் வரலாற்றைக் கூறவந்த முதல் நூலாகும். இதனிற் கூறப்படும் சேக்கிழார் வரலாறு இதுவாகும்:

"தொண்டை நாட்டு 24 கோட்டங்களுள் ஒன்றாகிய புலியூர்க்கோட்டத்தில் குன்றை வளநாட்டுக் குன்றத்தூரில் வேளாளர் மரபில் சேக்கிழார் குடியில் அருள்மொழித்தேவர் என்பவர் பிறந்தார். அவர் தம்பி பெயர் பாலறவாயர் என்பது. அருள்மொழித்தேவரது புலமைச் சிறப்பு மிகுதிப்பட, அவர் குடிப்பெயரானே 'சேக்கிழார்' என்று குறிக்கப்பட்டார். அவரது பெரும்புலமையைக் கேள்வியுற்ற 'அநபாய சோழ வேந்தன்' [1] அவரைத் தனது முதல் அமைச்சராகக் கொண்டான்; அவருக்கு 'உத்தம சோழப் பல்லவராயன்' என்ற பட்டம் கொடுத்தான்.

---

*" A critical Study of Sekkilar and his Historical material "

[1] **Thiruthondar Purana Varalaru, S. 98.**

“சேக்கிழார் சோழநாட்டுத் திருநாகேச்சரத்தில் உள்ள சிவபிரானை வழிபட்டு, அக்கோவிலைப் போன்றதொரு கோவிலைத் தமது குன்றத்தூரில் கட்டி, அதற்குத் ‘திருநாகேச்சரம்’ என்ற பெயரிட்டு மகிழ்ந்தார்.

“அக்காலத்தில் அரசன் சமணப் பெருங்காவியமாகிய சீவகசிந்தாமணியைப் படிக்கக்கேட்டு மகிழ்ந்தான்; அதனைப் பலபடப் பாராட்டினான். அது கண்ட சேக்கிழார், இளவரசனை நோக்கி, ‘சமணர் செய்த அப்பொய்ந்நூல் இம்மைக்கும் பயனில்லை; மறுமைக்கும் பயன் இல்லை. சிவகதை ஒன்றே இம்மைமறுமைகட்குப் பயனளிக்க வல்லது’ என்றார் அதுகேட்ட அரசன், ‘அங்ஙனமாயின், அச்சிவகதை ஏது? அது கற்றவர் யார்? அது சீவகசிந்தாமணியைப்போல இடையில் வந்த நவகதையோ? புராணமோ? முன்னூல் உண்டோ? அதனை இவ்வுலகிற் சொன்னவர் யார்? கேட்டவர் யார்? முறையாகக் கூறுக’ என்றான். உடனே சேக்கிழார், ‘தில்லைப்பிரான் அடியெடுத்துத் தரச் சுந்தரர் பதினொரு திருப்பாட்டாக அடியவரைப்பற்றித் தொகை பாடினார். அதனைத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் விளக்கிக்கூற, அவர் அருள்பெற்ற நம்பியாண்டார் நம்பி, ‘திருத்தொண்டர் திரு அந்தாதி’ என்றொரு நூல் பாடினார். அந்நூலைத் திருமுறைகண்ட இராசராச தேவர்[2] முதலியோர் பாராட்டினர்’ என்றார். அதுகேட்ட சோழன் மகிழ்ந்து ‘அவ்வடியார் வரலாற்றைக் கூறுக’ என்றான். சேக்கிழார் அடியார் வரலாறுகளைத் தொகை, வகைகளைக் கொண்டு விளங்கவுரைத்தார். கேட்டு மகிழ்ந்த மன்னன், ‘இவ்வரலாறுகளைப் பெரியதோர் காவியமாக நீரே பாடியருள்க’ என்று, அவருக்கு வேண்டிய ஆள் உதவி-பொருள் உதவி தந்து, தில்லைக்கு அனுப்பினான்.

---

Ibid. S. 24

"தில்லையை அடைந்த சேக்கிழார் கூத்தப்பெருமான் திருமுன் நின்று, 'அடியேன், புகழ்பெற்ற உம் அடியார் சிறப்பை எங்ஙனம் உரைப்பேன்! எனக்கு அடி எடுத்து உதவி அருள்க" என்று வேண்டினார். அவ்வமயம் 'உலகெலாம்' என்ற சொல் சேக்கிழார் செவியிற்பட்டது. அவர் அதனையே புராணத்திற்கு முதலாகக் கொண்டு பாடிப் புராணத்தை முடித்தார். அரசன் தில்லை அடைந்தான். தில்லை ஆயிரக்கால் மண்டபத்தில் பெருஞ்சைவர் கூட்டத்தில் சேக்கிழார் தமது புராணத்தை அரங்கேற்றம் செய்தார்; இறுதியில் அரசனால் பெருஞ்சிறப்புப் பெற்றார்; 'தொண்டர் சீர் பரவுவார்' என்ற பெயரும் பெற்றார்.

"அரசன், சிறந்த பக்திமானாகிய சேக்கிழாரைத் தன் கீழ் வேலையில் வைக்க விரும்பாமல், அவர் தம்பி பாலறாவாயரைத் 'தொண்டைமான்' என்ற பட்டத்துடன் தொண்டைநாட்டை ஆளும்படி விடுத்தான். அவர், 'தொண்டைமண்டலம் நின்றுகாத்த பெருமாள்'[3] எனப் பெயர் பெற்றார்.

"பின்னர்ச் சேக்கிழார் தில்லையில் தங்கிக் கூத்தப் பெருமானைச் சேவித்துக்கொண்டிருந்து முத்தி பெற்றார். சேக்கிழார் மரபினர் இன்றுவரை அரசியல் உயர் அலுவலாளராக இருந்து வருகின்றனர். இனியும் இருப்பர்."

## இவ்வரலாறு பற்றிய ஆராய்ச்சி

இவ்வரலாற்றில் பெரும்பாலும் நம்பத்தக்க செய்திகளே கூறப்பட்டுள்ளன. ஆயின், சில ஆராய்ச்சிக்கு உரியனவாகவும் உள்ளன. ஆதலின், அவற்றை முறையே ஆராய்தல் நமது கடமையாகும்.

---

[3] S. 99.

1. சிந்தாமணியைச் சோழன் படித்துச் சுவைத்ததைக் காணப்பொருத சேக்கிழார் அதனைத் 'திருட்டுச் சமணர் பொய்ந்நூல்' எனக் கூறியதற்கும், சிந்தாமணிக்கு மாருக அவர் பெரியபுராணம் செய்தார் என்று கூறியிருத்தற்கும் இப்பாடல்தவிர வேறு சான்றில்லை. சேக்கிழார் பாடிய பெரிய புராணத்திலும் இந்தச் அகச் சான்று இல்லை. ஆயின், இதற்கு மாருகச் சேக்கிழார் சிந்தாமணியை நன்ருய்ப் படித்தவர் என்பதற்குப் பெரிய புராணத்திலிருந்து பல சான்றுகள் காட்டலாம். இங்ஙனம் அந்நூலை நன்ருய்ப் படித்து அனுபவித்த பெரும் புலவராய சேக்கிழார் அதனை வெறுத்தனர் என்ரே - அதற்கு மாருக அரசனைத் தூண்டிப் பெரிய புராணம் செய்தார் என்ரே கோடல் பொருத்தமன்று. எனவே, சேக்கிழார் புராணக்கூற்று அதனைப் பாடிய ஆசிரியரது மனப்போக்கையே - சமணத்தில் வெறுப்பும் சைவத்தில் அளவுகடந்த பற்றும் கொண்ட மனப்பண்பையே உணர்த்துவதாகும்[4] எனக்கோடலே பொருத்தமாகும்

2. இப்புராண ஆசிரியர் பெரியபுராணத்தை நன்ருகப் படித்தவராகத் தெரியவில்லை. 'நாயன்மாருள் முடி மன்னர் அறுவர்' எனக்கூறி, 'அவருள் இடங்கழியார்' ஒருவர் எனவும், 'குறுநில மன்னர் ஐவர்' எனக்கூறி, 'அவருள் காடவர்கோன் கழற்சிங்கன், ஐயடிகள் காடவர்கோன் என்பவர் இருவர்' எனவும் கூறியிருத்தல் பெருந்தவறு.[5] என்னை? இடங்கழியார் கொடும்பாளூரை ஆண்ட சிற்றரசர்[6] என்றும், பின்னவர் இருவரும் பல்லவப் பேரரசர் என்றும் சேக்கிழார் தமது புராணத்தில்

---

[4] T. V. Kalyanasundara Mudaliar's edition, Int. p. 6.
[5] S. 39 ; Tamil Polil, Vol. 3, p. 209.
[6] Idangaliyar Puranam, S. 2 & 3.

தெளிவாகக் கூறியுள்ளார்[7] ஆதலின் என்க. சுந்தரர், தமது காலத்தவனை கழற்சிங்கனைத் தாம் பாடிய திருத் தொண்டத்தொகையில்,

'கடல்சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும்
அடியேன்'

என்று தெளிவாகக் கூறியுள்ளார். இதனையேனும் இத் திருத்தொண்டர் புராண ஆசிரியர் கவனித்தவராகத் தெரியவில்லை.

63 நாயன்மாருள்.

இயல், இசைத் தமிழ் வல்லோர்—அப்பர், சம்பந்தர், பேயார்;

இசைத் ,, —நந்தனார், ஆனாயர், பாணர்

இயற்றமிழ் வல்லோர்— ஐயடிகள், திருமூலர், காரியார், சேரமான்பெருமாள்

என்று வகுத்துக்கூறும் இந்த ஆசிரியர், சுந்தரரை இப் பிரிவுகளிற் சேர்த்துக்கூறத் தவறிவிட்டார்.[8] சுந்தரர், இயல், இசைத்தமிழ் வல்லோர் அல்லரா? நந்தனார் இசைத்தமிழில் வல்லார் என்பதற்குச் சான்று என்னை? 4. இங்ஙனமே இந்த ஆசிரியர் பாடிய 'திருமுறை கண்ட புராணம்' என்ற நூலிலும் சில தவறுகள் உண்டு. அவற்றுள் குறிக்கத்தக்க பெருந்தவறு ஒன்றுண்டு. அஃதாவது, இராசராசன் (கி. பி. 985-1014) காலத்துத் திருமுறைவகுத்த நம்பியாண்டார் நம்பி, அவன் மகனை இராசேந்திரன் (கி. பி. 1012-1044) புதிதாக உண்டாக்கிய கங்கைகொண்ட சோழபுரத்தில் கட்டப்பெற்ற கங்கை

---

[7] Kalarsingar Puranam, S. 1 & 2; Aiyadigal Puranam, S. 1, 2 & 7.

[8] S. 46.

கொண்ட சோழீச்சுரம்பற்றிக் கருவூர்த்தேவர் பாடிய திருவிசைப்பாவை ஒன்பதாம் திருமுறையில் (இராசராசற்கு எதிரில்) சேர்த்தார் என்பது. மகன் தனது ஆட்சிக் காலத்திற் கட்டிய கோவிலைப் பற்றிய பாடல் ஒன்றை, அம்மகனது தந்தை காலத்துப் புலவர் அத்தந்தை முன்னிலையிலேயே, மற்றத் திருமுறைகளை வகுத்தபொழுதே, தொகுத்தார் என்னல் எங்ஙனம் பொருந்தும்?[9]

இங்ஙனம் இராசராசன் காலத்தவரும் பிற்பட்ட வருமான புலவர் பாக்களை எல்லாம் இராசராசன் காலத்திலேயே நம்பி தொகுத்துமுடித்தார் என்று திருமுறை கண்ட புராண ஆசிரியர் தவறுகக் கூறிவிட்டதால்,[10] ஆராய்ச்சியாளர், 'திருமுறைகள் முதற் குலோத்துங்கன் காலத்தில் தொகுக்கப்பட்டனவாதல் வேண்டும்[11], என்றும், 'நம்பி, திருவிசைப்பாவையும் தொகுத்தார்' என்று புராணம் கூறலால், அவர் இராசராசற்குப் பிற்பட்டவர்,[12] என்றும் கருதலாயினர்.

## இவற்றின் ஆசிரியர் உமாபதிசிவமா?

திருத்தொண்டர் புராண வரலாறும் திருமுறை கண்ட புராணமும் இயற்றியவர் சந்தான ஆசாரியருள் ஒருவரும் சைவசித்தாந்த நூல்கள் பலவற்றின் ஆசிரியருமான கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என்று சில பதிப்புகளிற் காண்கின்றன.[13] அவர் பாடியனவாகத் திருத்தொண்டர் புராணசாரம், திருப்பதிகக்கோவை,

[9] This will be discussed in chap. 2.

[10] V. 26 - 28.

[11] A. R. E. 1918. II. 34.

[12] S. I. I. II. p. 20.

[13] Navalar edition and C. K. S. Mudaliar's edition, Vol. I.

திருப்பதிக்கோவை என்பனவும் காணப்படுகின்றன. இவற்றுள் முன்னது பெரியபுராணத்தைத் தழுவிச் செய்யப்பட்டதாகும். அதனில், (1) 'இடங்கழியார் கொடும்பாளூர் வேளிர்குலத்தரசர்' என்றும், (2) கழற்சிங்கனும் ஐயடிகள் காடவர்கோனும் பேரரசர் என்றும் தெளிவாகக் குறிக்கப்பட்டுள. [14] இதனைப்பாடிய உமாபதிசிவமே இச்செய்திகளையே தவறாகக்கூறும் சேக்கிழார் புராண வரலாற்றையும் பாடினார் என்பது எங்ஙனம் பொருந்தும் ?

'திருத்தொண்டர் புராண வரலாறும் திருமுறை கண்ட புராணமும் உமாபதிசிவம் பாடினார் எனக் கூறுதல் மரபு' [15] என்று சமாஜப் பதிப்புக் குறித்துள்ளது. 'இவற்றை உமாபதிசிவம் பாடினார் என்று கூறும் தனிப்பாட்டுச் சில பிரதிகளில் இல்லை' [16] என்று திரு. வி. கலியாணசுந்தர முதலியார் பதிப்புக் குறித்துள்ளது.

இவற்றை நோக்க, உமாபதி சிவாசாரியார் திருத்தொண்டர் புராணசாரம் முதலிய மூன்று நூல்களைச் செய்தவராகலாம் எனக் கோடல் தவறாகாது. உமாபதிசிவனார் காலம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். [17] ஆயின், திருத்தொண்டர் புராண வரலாறும், திருமுறைகண்ட புராணமும் செய்த ஆசிரியர் இன்னவர் என்பதோ, அவர் காலம் இன்னது என்பதோ திட்டமாகக் கூறுதற்கில்லை. ஆயினும், அவற்றுள் இராசராசன், அநபாயன் என்ற அரசர் பெயர்களும் கல்வெட்டுகளோடு ஒன்றுபடும் சேக்கிழார் பற்றிய குறிப்புகள் சிலவும், தவறின்றிக் கூறப்படலால், அவை, சேக்கிழார்க்

---

14 V. 59, 58 and 52.

15 Vide pp. 644 and 661.

16 Vide pp. 6 and 37.

17 Sen Tamil. Vol. 27, p. 27.

குப் பிற்பட்ட ஒன்றிரண்டு நூற்றாண்டுகளில் செய்யப் பட்டன ஆகலாம் எனக் கோடல் தவறாகாது. மேலும், புகழ்பெற்ற உமாபதிசிவனார் தவறின்றிப் பாடிய திருத்தொண்டர் புராண சாரத்திற்குப் பிறகு, பல தவறுகள்கொண்ட திருத்தொண்டர் புராண வரலாறு பெயர் தெரியாத ஒருவரால் பாடப்பட்டது என்பது பொருத்தமுடையதன்று. ஆதலால், திருத்தொண்டர் புராண வரலாறு, மிகுந்த சைவப்பற்றும் சமணசமய வெறுப்பும் கொண்ட ஒருவரால் உமாபதி சிவாசாரியர்க்கு முன்பே பாடப்பெற்றது; அவராலேயே திருமுறைகண்ட புராணமும் பாடப்பெற்றது எனக் கோடல் பொருத்த மாகும். எனவே, இப்பெயர் தெரியாத ஆசிரியர் கி. பி. 13-ஆம் நூற்றாண்டினர் எனக் கொள்ளலாம். இங்ஙனம் கொள்ளின், சிறந்த புலவரும் சைவசித்தாந்த ஆசிரியரு மாகிய உமாபதிசிவனார்க்கு நிறையுண்டாகுமே அன்றிக் குறை உண்டாகாமை காண்க.

உமாபதி சிவத்தின் மூன்று சிறுநூல்களையும் அவற் றின் தொடர்பான சேக்கிழார் புராண வரலாற்றை யும் திருமுறைகண்ட புராணத்தையும் கண்ட பிற்காலத் தார், பின்னவையும் உமாபதிசிவமே பாடினார் எனக் கொண்டிருத்தல் இயல்பே.[18]

---

18 Prof. K. A. N. Sastry, in a similar context, observes: "In view of the tendency, common in Indian literature of fathering minor works of unknown origin upon celeberated authors and in view of the mediocre and commanplace character of these two works, we have to receive with great suspicion the popular legends on their authorship and the occasions for their composition"—Vide his 'cholas', Vol. II, part I, pp. 527 - 528.

## பொருந்தும் செய்திகள்

இவ்வாறு பொருந்தாச் செய்திகள் சில இருப்பினும், சேக்கிழார் புராணம் சேக்கிழார் வரலாற்றை அறிய உறுகருவி என்பதை மறுத்தற்கில்லை. ஆதலின், அதன் கண் காணப்படும் பெரும்பாலும் நம்பத்தக்க செய்திகளாவன :—

1. சேக்கிழார் குன்றை நாட்டுக் குன்றத்தூரினர்; வேளாளர் மரபினர்; அவர் தம்பி பாலறாவாயர்.

குன்றத்தூரில் சேக்கிழார் கோவில் இன்றும் இருக்கின்றது. அதற்கு அண்மையில் பாலறாவாயர் குளம் இருக்கின்றது. சேக்கிழார் மரபினர் அங்கு வாழ்கின்றனர்.

2 சேக்கிழாரை ஆதரித்த அரசன் ‘அநபாயன்’ என்பதைச் சிறப்புப் பெயராகக் கொண்டவன்.

3. சேக்கிழார் சோழ அரசியலில் தலைமை அமைச்சராக இருந்தவர். அங்ஙனம் இருந்து, ‘உத்தம சோழப் பல்லவராயன்’ என்ற பட்டம் பெற்றனர். அங்ஙனம் அரசற்கு அடுத்த உத்தியோகத்தில் இருந்தமையாற்றான் அவருடைய சைவப்பற்றும் அவர் அறிந்த நாயன்மார் வரலாற்றுச் செய்திகளும் நிறைந்த தமிழ்ப்புலமையும் அரசனும் இளவரசனும் அறிய வாய்ப்புண்டானது எனக் கோடல் பெரிதும் பொருத்தமே ஆகும்.

4. அவர் சோணாட்டுத் திருநாகேச்சரத்தில் ஈடுபட்டவர், அந்நினைவுகொண்டு தமதூரில் அப்பெயரால் கோவில் கட்டினவராகலாம். குன்றத்தூரில் இப்பெயரால் ஒரு கோவில் இருக்கின்றது.

5. சேக்கிழார் பெரிய புராணம் பாடியவர்.

இனி, ‘அநபாயன்’ யாவன் என்பதைக் காண்போம்; பின்னர்க் கல்வெட்டுச் செய்திகளையும் மேற்சொன்ன சேக்கிழார் வரலாற்றுச் செய்திகளையும் ஆராய்ந்து பொருந்துவன காண்போம்.

# அநபாயன் யாவன்?

சேக்கிழார் காலத்தைத் தத்தமக்குக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு ஆராய்ந்து முடிபுகட்டிக் கூறினோர் பலராவர். அவர் முடிபுகளைக் கீழே காண்க.

1. சேக்கிழார் - இராசேந்திரன் I (கி. பி.1012-1044) காலத்தவர். [19]
2. சேக்கிழார் - முதற்குலோத்துங்கன் (கி. பி. 1070-1120) காலத்தவர். [20]
3. சேக்கிழார் - இரண்டாம் குலோத்துங்கன் (கி.பி. 1113-1150) காலத்தவர். [21]
4. சேக்கிழார் - மூன்றாம் குலோத்துங்கன் (கி. பி 1178-1218) காலத்தவர். [22]

இவற்றுள் முன் இரண்டு முடிபுகளும் பொருந்துவன அல்லவென்று முன்பே அறிஞர் விளக்கிவிட்டனர். [23] ஆதலின், அவைபற்றி நாம் பேசவேண்டுவதில்லை.

---

[19] Sentamil, Vol. II, pp. 273, 386.

[20] R. Gopinatha Rao's 'Chola Vamsa Charitra Surukkam'.

[21] C. M. Ramachandra Chettiar's article in 'Sentamil Selvi, Vol. 10, pp. 132 - 141; M. Raghava Iyengar's 'Sasana Tamil Kavi Saritham', pp. 70—78; A, R. E. 1912, II. 27; A. R. E. 1918, p. 150., K. A. N. Sastry's 'cholas' Vol. II, Part I, p. 76.

[22] V. S. Vandaiyar's article in Tamil Polil, Vol. 13, pp. 462 - 467. My esteemed friend Mr. T. V. S. Pandarathar also is of the same view.

[23] C. M. Ramachandra Chettiar's valuable article in Sentamil Selvi, Vol. 10, pp. 132-141 and M. Raghava Iyengar's 'Sasana Tamil Kavi charitam', pp. 70 - 78.

சேக்கிழார் மூன்றும் குலோத்துங்கன் காலத்தவர் என்பார் கூற்றுப் புதியது. ஆதலின், அவர் கூறும் காரணங்களை ஆராய்ந்து முடிபு காணல் நமது கடமை யாகும். அவர் கூறும் காரணங்களாவன :—

1 "இரண்டாம் குலோத்துங்கனை உலாவிற் பாடிய அவனது ஆசிரியரான ஒட்டக்கூத்தர், அவ்வுலாவில் (வரிகள் 75-116) அவன் பேரம்பலம் பொன் வேய்ந்ததைக் குறிக்கவில்லை. ஆதலின், அவன் பேரம்பலம் பொன் வேய்ந்தவன் ஆகான்.

2. "இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் சேக்கிழார் பெரிய புராணம் பாடியிருப்பின், ஒட்டக்கூத்தர் அதனை உலாவிற் கூறுதிரார்.

3. "இரண்டாம் குலோத்துங்கற்கு ஆசிரியர் ஒட்டக்கூத்தர், அவர் சிறந்த சிவபக்தர்; அரசன் அவரைக் கொண்டு பெரியபுராணம் பாடச்செய்யாது, சேக்கிழாரைக் கொண்டு பாடச்செய்தான் என்பது பொருத்த மற்றது.

4. 'திருப்புறம்பயத்துக் கல்வெட்டுகளில் 'பேரம்பலம் பொன்வேய்ந்த சோழன்' என்பதைக் குறிப்பிடும் கல்வெட்டுக்குமேல் உள்ள கல்வெட்டு மூன்றும் இராசராசனுடையது எனக் கல்வெட்டாளர் கொண்டனர். இரண்டாங் குலோத்துங்கற்கு மூன்று தலைமுறைக்குப் பிந்தியவன் மூன்றும் இராசராசன். எனவே, மூன்று தலைமுறைக்குப் பிந்தியவன் கல்வெட்டு மேலும், முந்தியவன் கல்வெட்டுக் கீழும் அமையுமாறு எங்ஙனம்? முந்தியவனது மேலும், பிந்தியவனது கீழும் அமைவதன்றோ இயலும். ஆகவே, கல்வெட்டுத் துறையாளர் கொண்ட கருத்துத் தவறுடையதாகும். உண்மை யாதெனில், மேற்கூறிய கல்வெட்டுகளிற் கண்ட இராசராசன் இரண்டாம் இராசராசனே, குலோத்துங்கன் மூன்றும் குலோத்துங்

கனே. இவ்வாறு கொள்ளின், யாம் மேலே கிளப்பிய ஐயத்திற்கு இடமிராது.''

## இக்காரணங்கள் பொருந்துவனவா ?

1. இரண்டாம் குலோத்துங்கன் உலாவில் (வரிகள் 75-116) 'பேரம்பலம்' என்ற சொல் காணப்படுகின்றது. ஆனால், அதற்கடுத்த இராசராசன் உலாவில், இராசராசன் இன்னவன் மகன் என்று குறிப்பிடும் இடத்தில் அவன் பேரம்பலம் முதலியவற்றைத் தூய செம்பொன்னிற் குயிற்றினுற்கு மகன் என்பது தெளிவாக உள்ளது. [24] ஆதலின், 'இரண்டாம் குலோத்துங்கன் பேரம்பலம் பொன்வேய்ந்ததைக் கூத்தர் குறிக்கவில்லை' என்ற முதற்காரணம் பொருந்தாமை காண்க.

2. இஃது ஒரு சிறந்த காரணமகாது. முதல் இராசராசன் நம்பியாண்டார் நம்பியைக்கொண்டு திருமுறைகளை வகுத்தான் என்பதும், உலகம் போற்றும் இராசராசேச்சரத்தைக் கட்டினுன் என்பதும், சைவத்தைப் பெரிதும் வளர்த்தான் என்பதும் பாராட்டத்தக்க-குறிக்கத்தக்க செயல்கள் அல்லவா? அவன் மகன் புதிதாக நியமித்த கங்கைகொண்ட சோழபுரம், அதன்கண் எடுப்பித்த பெரிய கற்றளி, அவன் செய்த சைவ சமயத் தொண்டு இவை குறிக்கத்தக்க செயல்கள் அல்லவா ? இவற்றுள் ஒன்றையேனும் அவர்களைப்பற்றிக் கூறிய இடங்களிற் கூத்தர் குறித்தாரில்லை. கூத்தர் விக்கிரம சோழன் காலத்தவர்; அவன் செய்த திருப்பணிகள் யாவும் நேரிற் கண்டவர். அவன் சிதம்பரம் கோவிலிற் பல திருப்பணிகள் செய்தான் என்று கல்வெட்டுகள் குறிக்கின்றன. [25] இவற்றுள் ஒன்றையேனும் கூத்தர்

---

[24] Vide Rajarajan Ula, lines 59 - 65.

[25] S. I. I. III, p. 185 ff ; Ep. Ind. Vol. 7, p. 5; K. A. N. Sastry's 'Cholas', Vol. II, Part I, pp. 65 - 66.

குறிப்பிட்டார் இல்லை. ஏன் குறிக்கவில்லை என்று யார் தாம் காரணம் கூறக்கூடும்? இவற்றையெல்லாம் நோக்க, இவ்விரண்டாம் காரணம் வலியுடைத்தாகாமை கண்டு கொள்க.

3. ஒட்டக்கூத்தர் குலோத்துங்கன் ஆசிரியர் என்பதும் அவர் சிறந்த சிவபக்தர் என்பதும் உண்மையே. ஆயின், அவர் சேக்கிழாரைப்போலத் திருத்தொண்டர் புராணச் செய்திகளில் நிறைந்த புலமையுடையவர் என்பதற்குச் சான்றென்னை? சான்றின்மையின், திருத்தொண்டர் புராணச் செய்திகளை முற்றவுணர்ந்த சேக்கிழாருடைய உணர்ச்சியையும் தகுதியையும் நன்குணர்ந்த அரசன் அவரைப் பெரியபுராணம் பாடச் செய்தான் என்று கோடலில் எவ்விதத் தவறும் இல்லை. அரசன் சேக்கிழாரைக்கொண்டு பெரியபுராணம் பாடுவித்தமையால் ஒட்டக்கூத்தர் பெருமை குறைந்துவிடாதன்றோ?

4. இக்காரணமும் பொருத்தமுடையதாகாது. என்னை? எல்லாக் கோவில்களிலும் அரசர் காலமுறைப்படி அவரவர் காலத்துக் கல்வெட்டுகளை மேலிருந்து கீழ் நோக்கி வெட்டி வந்தனர் என்பது கூறக்கூடவில்லை. அங்ஙனம் வெட்டவும் முடியாது; கல்வெட்டுச் செய்தியின் அளவு, அது வெட்டத்தக்க வசதியான இடம் இவற்றை நோக்கி வெட்டலே இயல்பாதலின் என்க. மேலும், திருப்புறம்பயத்துக் கோவில் சோழர் கால முதல் இன்றுவரை புதுப்பிக்கப்படவில்லை என்று திட்டமாகக் கூறத்தக்க சான்றில்லை. திருவொற்றியூர், எண்ணாயிரம், திருக்கடம்பூர், காஞட்டு முள்ளூர் முதலாய கோவிற் கல்வெட்டுகளில் முறைபிறழ்ந்தும் தலைதடுமாறியும் உள்ள கல்வெட்டுகள் பலவுண்டு. சிறப்பாக எண்கண் என்ற இடத்தில் உள்ள பழுதுபட்ட சிவன்கோவிற்

கல்வெட்டுகளும் காஞட்டு முள்ளூர்ச் சிவன்கோவிற் கல்வெட்டுகளும் காணத்தக்கவை.[26]

## மூன்றும் குலோத்துங்கன் பேரம்பலம் பொன் வேய்ந்தவன் அல்லன்.

மூன்ரும் குலோத்துங்கன் கட்டிய திரிபுவன வீரேச்சுரம் என்ற சிறப்புடைக் கோவிலில் உள்ள வடமொழிச் சுலோகங்கள் அம்மன்னன் செய்தனவாகக் கூறுவன காண்க :—

(1) அவனுடைய சோழ-ஈழ-சேரநாட்டுவெற்றிகள்.

(2) அவன் தில்லையில் முகமண்டபம், கோபுரம், அம்மன் திருச்சுற்று இவற்றைப் பொன்மயமாக்கினன்.

(3) ஈடும் எடுப்பும் அற்ற சிவபக்தன்.

(4) காஞ்சி ஏகாம்பரர் கோவில், மதுரைச் சிவன் கோவில், திருவிடைமருதூர்க் கோவில், தாராபுரத்தில் உள்ள இராசராசேச்சரம், திரு ஆரூர்ப் பெருங்கோவில் இவற்றைப் பொன்மயமாக்கினன்.[27]

இக்கல்வெட்டில் மூன்ரும் குலோத்துங்கஞன திரிபுவன வீரதேவன் பேரம்பலம் பொன்வேய்ந்தான் என்பது குறிக்கப்படாமை காண்க. அவன் தில்லையில் முகமண்டபம், கோபுரம், அம்மன் திருச்சுற்று இவற்றையே சிறப்புறச் செய்தான் என்று இக்கல்வெட்டுக் கூறுகின்றது. கூறவே, மூன்ரும் குலோத்துங்கன் பேரம்பலம் பொன்வேய்ந்தவன் அல்லன் என்பது பெறப்பட்டதன்ரு ?

மேலும், சேக்கிழார் காலத்தரசன் 'அநபாயன்' என்ற சிறப்புப்பெயர் பெற்றவன் என்பது குறிப்பிடத்

---

[26] I have visited all these places in April 1943.

[27] 190 of 1907. See also Prof. K. A. N. Sastry's article in the 'Acharya Pushpanjali', pp. 5 - 7.

தக்கதாகும். அச்சிறப்புப்பெயர் மூன்றாம் குலோத்துங் கற்கு உண்டு என்று கூறச் சான்றின்மை காண்க.

இன்ன பிற காரணங்களால், மூன்றாம் குலோத் துங்கன் சேக்கிழார் காலத்தவன் ஆகான் என்பது அறி யப்படும்.

## 'அநபாயன்' இரண்டாம் குலோத்துங்கனே

சேக்கிழார் புராண ஆசிரியர், சேக்கிழார் காலத்து அரசனை 'அபயன்'[28] எனவும், 'அநபாயன்'[29] எனவும் குறித்துள்ளார் என்பன முன்பே கூறினோம் அல்லவா? சேக்கிழார் பத்து இடங்களில் தம் காலத்தரசனைக் குறித்துள்ளார்: அப்பத்து இடங்களிலும் 'அநபாயன்' என்பதையே சிறப்பாகக் குறிக்கின்றார்; இரண்டு இடங் களில் 'அபயன்' என்பதைக் குறித்துள்ளார். இனி இம்மன்னனைப்பற்றிப் பெரியபுராணம் கூறுவனவும் கூத்தர் பாடிய உலா, பிள்ளைத்தமிழ், தக்கயாகபரணி ஆகிய மூன்றும் கூறுவனவும் முறையே காண்போம்.

---

28 S. 59. 29 S. 98.

| | பெரியபுராணம் கூறுவன :— | உலாவும், பிள்ளைத்தமிழும் தக்கயாக பரணியும் கூறுவன:— |
|---|---|---|
| 1. | பேரம்பலம் பொன் வேய்ந்தமை. [1] | பேரம்பலம் பொன்வேய்ந்தமை. [1] |
| 2. | சிறந்த சிவபக்தன். [2] | சிறந்த சிவபக்தன். [2] |
| 3. | செங்கோல் அரசன். [3] | பட்டம்பெற்றவுடன் பகைவேந்தரை விடுதலை செய்தான்; செங்கோல் அரசன். [3] |
| 4. | தில்லைத் திரு எல்லை பொன்னின் மயமாக்கினான். [4] | சிற்றம்பலம், பல பல மண்டபம், அம்மன் கோவில், எழுநிலைக் கோபுரம், திருச்சுற்று மாளிகை, தெரு இவற்றைப் பொன்மயம் ஆக்கினான். [4] |
| 5. | தில்லைநகர் மணி வீதி அணிவிளக்கும் சென்னி நீடு அநபாயன். [5] | நான்கு திருவீதிகளையும் அமராவதியில் உள்ள பெருவீதிகள் நாணப் பெருக்கினான். [5] |

1 Periyapuranam, p. 2, S. 8.
2 Ibid. p. 5. S. 12.
3 Ibid. p. 13, S. 35 ; p.409, S. 847.
4 Ibid. p. 182, S. 8.
5 Ibid. p. 589, S. 8.

1 Muvar Ula, pp. 31 and 58.
2 Ibid.
3 Ibid. p. 30 ; K. Pillai Tamil (Tamil Polil Vol. 4. pp. 365 - S. 2 and 366.S. 10.]
4 Ibid. p. 58 and Takkayagaparani, vv. 777, 808 - 810.
5 Ibid. p. 32 and Ibid.

| பெரியபுராணம் கூறுவன :— | உலாவும், பிள்ளைத்தமிழும் தக்கயாக பரணியும் கூறுவன:— |
|---|---|
| 6. அம்புயமலராள் மார்பன்.[6] | இலக்குமியை மார்பில் தரித்தவன்.[6] |
| 7. சிறந்த கொடையாளி.[7] | மறையவர்க்குத் தானம் செய்தான்.[7] |
| இவனைக் குறிக்கும் சொற்கள் : | இவனைக் குறிக்கும் சொற்கள்: |
| (1) அநபாயன் —10 இடங்களில் வருகின்றன.[8] | அநபாயன் —3 இடங்களில் வருகின்றன.[8] |
| (2) அபயன் —2 ,, [9] | அபயன் —2 ,, [9] |
| (3) சென்னி —3 ,, [10] | சென்னி —2 ,, [10] |
| (4) செம்பியன் —1 ,, [11] | |
| (5) குலோத்துங்கன் —1 ,, [12] | குலோத்துங்கன் —4 ,, [11] |

6 Ibid. p. 409, S. 847.
7 Ibid. p. 631, S. 14.
8 Ibid. pp. 2, 5, 13. 15, 62, 84, 182, 409, 589, 631,
9 Ibid. pp. 5, 182.
10 Ibid. pp. 62, 182, 589.
11 Ibid. p. 409.
12 Ibid p. 182.

6 Ibid. p. 51, lines 661-664.
7 Ibid. p. 33.
8 Ibid. pp. 39. 50, 55.
9 Ibid. pp. 39, 46,
10 Ibid. pp. 52, 58.
11 Ibid. pp. 30. 37, 40, 42.

இங்ஙனம் சேக்கிழாரும் ஒட்டக்கூத்தரும் குறிப்பிட்ட கருத்துகள் ஒன்றுபடுதலைக் காணின், சேக்கிழார் குறித்த அநபாயன் இரண்டாம் குலோத்துங்கனே என்பது ஐயமற விளங்குகிறதன்றோ? தண்டியலங்கார மேற்கோள் பாக்களில் எட்டுப்பாடல்கள் அநபாயனைப் பற்றியே வருகின்றன.[30] அவை அவனுடைய வள்ளற்றன்மை, செங்கோன்மை, பேரரசுத்தன்மை ஆகிய மூன்றையும் பெரிய புராணத்தைப் போலவும் உலா, பிள்ளைத் தமிழ், பரணி போலவும் விளக்கமாகக் கூறுகின்றன. அப்பாடல்களுள் இறுதிப்பாடல் அநபாயனை வாழ்த்துவதாக முடிவதால், தண்டியலங்கார மூலமும் உரையுமோ அல்லது உரைமட்டுமோ இவ்விரண்டாம் குலோத்துங்கன் காலத்தது எனக் கூறலாம். இங்குப் பெரிய புராணம் குறிக்கும் பத்து இடங்களிலும் சிறப்புச் சொல்லாக 'அநபாயன்' என்பதே ஆளப்பட்டிருத்தலும், தண்டியலங்காரம் குறிக்கும் மேற்கோட் செய்யுட்கள் எட்டிலும் 'அநபாயன்' என்ற சொல் ஒன்றே ஆளப்பட்டிருத்தலும் காணச் 'சேக்கிழார் காலத்தரசன்' 'அநபாயன்' என்ற பெயர் ஒன்றையே தனது சிறப்புப் பெயராகக் கொண்டவன் என்பது நன்கு தெரிகின்றது. இங்ஙனம் கொண்டவன் கூத்தரால் புகழப்பெற்ற இரண்டாங் குலோத்துங்கனே என்பது மேற்காட்டிய ஒற்றுமையால் நன்கு விளக்கமாதல் காண்க.

இனி, இவ்விருபுலவரும் குறித்த செய்திகள் அனைத்திற்கும் இக்குலோத்துங்கன் கல்வெட்டுகள் சான்று பகர்ந்து நிற்கும் அருமைபாட்டைக் கீழே காண்க:—

---

[30] kumarasamy pulavar edition (1926), pp. 1, 28, 81, 81, 93, 115, 152 and 184.

| அநபாயனைப் பற்றிய இலக்கியச் செய்திகள். | அநபாயனைப்பற்றிய கல்வெட்டுச் சான்றுகள்:— |
|---|---|
| 1. பேரம்பலம் பொன்வேய்ந்தமை. | திருமாணிக்குழி, திருப்புறம்பயம், திருக்கோகரணம் கல்வெட்டுகள் இதனைக் குறிக்கின்றன. [1] |
| 2. இவன் ஆட்சியில் போரைப் பற்றிய குறிப்பே இல்லை. | இவன் கல்வெட்டுகளிலும் இப்பேச்சில்லை; அமைதியான அரசாட்சி நடந்தது. [2] |
| 3. இவனது கோப்பெருந்தேவி புவனமுழுதுடையாள். [3] | இவளையே திருமழபாடிக் கல்வெட்டும் கூறுகின்றது. [4] |
| 4. இவன் சிறந்த சிவபக்தன். | 'அநபாயன் தில்லை நடராசர் திருவடித் தாமரையில் ஈப்போன்றவன்' என்று திருவாரூர் வட மொழிக் கல்வெட்டுக் கூறுகிறது. [5] |
| 5. இவன் தில்லை-கோவிந்தராசர் சிலையை அப்புறப்படுத்தியவன். [6] | இதனையே திரு ஆவடுதுறைக் கல்வெட்டுக் கூறுகின்றது. [7] |

1 157 of 1902, S. I. I. Vol. 7 No. 782; 350 of 1927, ARE. 1927 - II. 24; 411 of 1902, S. I. I. Vol. 7, No. 1044.

2 K. A. N. Sastry's 'Cholas', Vol. II, part I, p. 75.

3 K. Ula, pp. 30-32, lines 70-74.

4 85 of 1895.

5 73 of 1890; S. I. I. IV. 397.

6 K. Ula, p. 31, lines 77 - 78.

7 363 of 1907; K. A. N. Sastry's 'Cholas Vol. II, part I, p. 74 (foot note) and p. 75.

| | |
|---|---|
| 6. இவனது சிறப்புப் பெயர் 'அநபாயன்'[8] | இவனை 'அநபாயன்' என்றே திருவாரூர் வடமொழிக் கல்வெட்டுக் கூறுகிறது.[9]<br>(1) இவனது அரசியல் செயலாளன், 'அநபாய மூவேந்த வேளான்' எனப்பட்டான்.[10]<br>(2) இவன் காலத்தில் கோவில்கட்கு விடப்பட்ட நிலங்கள்:—<br>அநபாய நல்லூர்[11], அநபாய மங்கலம்[12] எனப் பெயர் பெற்றன.<br>(3) சிற்றரசன் ஒருவன் 'அநபாய காடவராயன்' எனப்பட்டான்,[13]. |



8 Periyapuranam and Dandi Alangaram.

9 73 of 1890 : S. I. I. IV 397.

10 346 of 1911.

11 271 of 1915, 533 of 1921, 157 of 1918, S. I. I. vii. 485, 64 of 1925.

12 108 of 1937.

13 181 of 1906.

## பிற சான்றுகள்

### திரு ஆனைக்காக் கல்வெட்டு

இதுகாறும் கூறிப்போந்த இலக்கியச் சான்றுகளாலும் கல்வெட்டுச் சான்றுகளாலும் அநபாயன் இரண்டாம் குலோத்துங்கனே என்பது ஐயமற விளங்கும். அம்முடிவை நன்கு வலியுறுத்தும் மற்றொரு கல்வெட்டுச் செய்தியை இங்குக் காண்க: இரண்டாம் இராசராசன் காலத்துத் திருவானைக்காக் கல்வெட்டில், விக்கிரம சோழ நல்லூரிலும் அநபாய மங்கலத்திலும் இருந்த சில நிலங்கள் ஆனைக்காவுடைய மகாதேவர்க்கு விற்கப்பட்டன, என்ற செய்தி காணப்படுகிறது.[31] விக்கிரம சோழற்கு மகன், இரண்டாம் குலோத்துங்கன்; இக்குலோத்துங்கற்கு மகன் இரண்டாம் இராசராசன். எனவே, கல்வெட்டு குறித்த 'விக்கிரம சோழ நல்லூர்' என்பது விக்கிரம சோழன் பெயர் கொண்டது; அதற்குப் பிற் கூறப்பட்ட அநபாய மங்கலம்' என்பது அவ்விக்கிரமற்குப் பின் பட்டம் பெற்ற இரண்டாம் குலோத்துங்கன் பெயர் கொண்டது என்பன மிகவும் தெளிவாகத் தெரிகின்றன. தெரியவே 'அநபாயன்' என்பது இரண்டாம் குலோத்துங்கனது சிறப்புப் பெயரே என்பது அங்கைக் கனியென விளங்குதல் காண்க.

### இராசராசேச்சுவரத்துச் சிற்பங்கள்

மேற்சொன்ன இரண்டாம் இராசராசன் (கி. பி. 1146-1173) இராசராசபுரத்தில் (தாராசுரத்தில்) சிவன் கோவில் ஒன்றைக் கட்டினான். அங்கு அவன், அவன் கோப்பெருந்தேவி ஆகிய இருவர் உருவச்சிலைகளும் இருக்கின்

[31] 108 of 1937.

றன.[32] அக்கோவிலில் சிவனார் இறை அகத்தைச் சுற்றி யுள்ள வெளிப்புறப் பட்டியற் பகுதிகளில் பெரியபுராண நாயன்மார் வாழ்க்கையிற் சிறப்புடைய ஒவ்வொரு நிகழ்ச்சி குறித்த உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன; அவற்றின்மேல் அந்நிகழ்ச்சியை விளக்கும் சொற்கள் காண்கின்றன.[33] நாயன்மார் அனைவர் வரலாற்றுக் குறிப்புகளும் இவ்வளவு தெளிவாக இவ்வரசற்கு முன் காட்டப்பட்டன என்று கொள்ள எவ்விதச் சான்றும் இல்லை. ஆதலின், இவன் காலத்தில் நாயன்மார் வரலாற்று விவரங்கள் மக்கள் எல்லோர்க்கும் விளங்கக்கூடிய முறை யில் வெளிப்பட்டிருத்தல்வேண்டும் என்பதுதெளிவாகிறது அங்ஙனம் வெளியாதற்கு உறுதுணையாக இருந்திருக்கக் கூடிய நூல், இவனது தந்தை காலத்தில் பாடப்பெற்ற சேக்கிழார் திருத்தொண்டர் புராணமே ஆதல் வேண்டும் என்பது பொருத்தமன்றோ?

சேக்கிழார் பெரிய புராணம் பாடுவதற்கு முன் இவனிடமே நாயன்மார் வரலாற்றைக் கூறியுள்ளார்;

---

[32] J. M. Somasundaram Pillai's 'Cholar koirpanigal', p. 50.

இக்கோவில் 'இராசராசேச்சரம்' என்ற பெயர்கொண்டு இருப்பதும், இங்குள்ள கல்வெட்டுகளிற் பழையன இரண்டாம் இராசராசனுடையனவாக இருப்பதும் காண, இக்கோவில் இரண் டாம் இராசராசன் கட்டினான் எனல் பொருந்தும். இங்ஙனம் இருப்பக் கல்வெட்டறிஞர், 'இது மூன்றாம் குலோத்துங்கனால் கட் டப்பட்டது' என்று குறிப்பிட்டது பொருந்தாது.

—ARE. 1908. II. 65 & 66.

இக்கூற்றை உண்மை எனக் கொண்டு மற்றொரு கல்வெட்டறி ஞரும் அங்ஙனமே குறித்திருத்தல் வியப்புக்குரியதே.

—ARE. 1920, p. 102.

[33] A. R. E. 1920. II. Plates I to VI.

அதன்பிறகே அரசன் அதனை அறிந்து அவரைப் புராணம் பாடச் செய்தான் என்று திருத்தொண்டர் புராண வரலாறு கூறல் முன்னரே கண்டோம் அன்றோ? அது கொள்ளத் தக்கதாயின், இரண்டாம் இராசராசன் தன் இளவரசுக் காலத்திலிருந்தே சேக்கிழாரை நன்கு அறிந்தவன்; நெருங்கிப் பழகியவன்; நாயன்மார் வரலாறுகளை அவர் வாயிலாகவும் பின்னர் அவர் செய்த பெரியபுராண வாயிலாகவும் தெளிவாக அறிந்தவன் என்பன உணரலாம். அவன் அரசனான பின்னர்த் தன் பெயர்கொண்டு கட்டிய பெருங்கோவிலில் சிவபிரான் இறையிடத்துப் புறச்சுவரில், அவ்விறைவனையே பாடித் தொழுது முத்தி அடைந்த நாயன்மார் வரலாற்றுக் குறுப்புகளைச் சிற்பங்கள் வாயிலாக உலகத்திற்கு உணர்த்தினான் என்பது பெரிதும் பாராட்டத் தக்கதாகும். இச்சிறப்புடையச் செயலை நோக்கப் பெரிய புராணம் இரண்டாம் இராசராசன் காலத்திற்றானே மக்களிடம் பரவத் தொடங்கியதென்று ஒருவாறு நம்பலாம்.[34].

ஒற்றியூர்க் கல்வெட்டு

மேற்சொன்ன முடிபை அரண்செய்வதுபோலத் திருவொற்றியூர்க் கல்வெட்டு ஒன்று காண்கிறது. அஃது இரண்டாம் இராசராசற்குப் பின்வந்த இரண்டாம் இராசாதிராசனது (கி. பி. 1166-1182) ஒன்பதாம் ஆட்சியாண்டில் (ஏறத் தாழக் கி. பி. 1174-ல்), வெளியிடப் பெற்றதாகும். அதனில், "திருப்பங்குனி உத்தரத்து ஆறுந் திருநாளான புதன் கிழமையும் ஏகாதசியும் கூடிய ஆயில்யத்தினன்று, மடத்துத் தலைவரான சதுரானன

[34] "The Periyapuranam has influenced the lives and thought of the Tamil Saiva population almost incessantly from the date of its composition."

—K. A. N. Sastry's 'Cholas', Vol. II, part I, p. 533.

பண்டிதர், காபாலிகரது சோமசித்தாந்தத்தை விரித்த வாகீசப்பண்டிதர், இரண்டாம் இராசாதிராசன் முதலியவர் கட்குமுன் படம்பக்க நாயக தேவர் திருமகிழின்கீழ்த் திருவோலக்கம் செய்து எழுந்தருளியிருந்து ஆளுடைய நம்பி ஸ்ரீ புராணம் கேட்டருளா நிற்க......”[35] என்னும் அரிய செய்தி காணப்படுகிறது.

‘ஆளுடைய நம்பி’ என்பது சுந்தரர் பெயர். எனவே, அவரைப்பற்றிய புராணமே கோவிலில் படிக்கப்பட்டது என்பது தெரிகிறது. மக்கள் கேட்கத்தக்க நிலையிலும் கோவிலில் விளக்கமாக வாசிக்கத்தக்க முறையிலும் சுந்தரர் வரலாற்றைக் கூறுவது பெரிய புராணம் ஒன்றேயாகும். மேலும் சுந்தரர் வரலாறு கூறும் வடமொழி நூலோ வேறு தமிழ் நூலோ சேக்கிழார்க்கு முன் இருந்தது என்று கூறச் சான்றில்லை யாதலின் திருவொற்றியூர்க் கோயிலில் படிக்கப்பட்டது சேக்கிழார் செய்த பெரிய புராணத்துள் அடங்கிய சுந்தரர் புராணமாகவே இருத்தல் வேண்டுமெனக் கோடல் பொருத்தமாகும்.

---

[35] S. I. I. V. 1358.

**கல்வெட்டுகளில் கண்ட 'சேக்கிழார்' என்போர் :**—இனிப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளனரா என்பதைக் காண்போம். இதுகாறும் கிடைத்துள்ள கல்வெட்டுகளை ஆராயின் 'சேக்கிழார்' என்ற குடிப்பெயருடன் பலர் இருந்தமை வெளியாகும். அவர்களைப்பற்றிய விவரங்களைக் கால முறைப்படி கீழே காண்க:—

| அரசன் பெயரும் ஆட்சிக் காலமும் | கல்வெட்டுள்ள இடம் | கல்வெட்டின் காலம் | செயல் |
|---|---|---|---|
| 1. கண்டராதித்தர் (கி. பி. 949—957) | உடையார்குடி | கி. பி. 954 | சேக்கிழான் அரையன் சங்கரநாராயணன் என்ற மணவிற் கோட்டத்து மேலப்பழூர்ச் சோழ முத்தரையன் நிலதானம் செய்தான். 585 of 1920 |
| 2. பரகேசரி வர்மன் | திருச்சோற்றுத் துறை | மூன்றும் ஆண்டு | சேக்கிழான் சத்தி மலையன் என்ற மேலூர்க் கோட்டத்துக் காவனூர் - சோழ முத்தரையன் விளக்குத் தானம் செய்தான். 1830 f 1931 |
| 3. குலோத்துங்கன்-I (கி.பி. 1070-1120) | திருக்கழுகுன்றம் | கி. பி. 1092 | புரவுவரித் திணைக் களம் சேக்கிழார் ஆணைப்படி திருக்கழுக்குன்றத்திற்கு எல்லைகள் வகுக்கப் பட்டன. 180 of 1894 |
| 4. இராசராசன்-II[1] (கி.பி. 1146-1173) | திருமழபாடி | கி. பி. 1162 | சயங்கொண்ட சோழ மண்டலத்துக் குலோத்துங்கச் சோழ வளநாடான புலியூர்க் கோட்டத்துக் குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனை உத்தம சோழப் |

| | | | |
|---|---|---|---|
| | | | பல்லவராயன் திருமழபாடி மாகாதேவர் விளக்கு வைக்க 90 ஆடுகள் தந்தான். 95 of 1920 |
| 5. | குலோத்துங் கன்-III[2] திருஅரத்துறை | கி. பி. 1164 | திருவரத்துறையிலிருந்து மாசி, வைகாசி விழாக் காலங்களில் ஆளுடைய பிள்ளையார் திருமேனியைத் திருமாறன்பாடிக்கு எடுத்துச் செல்கையில் பூசை முதலியவற்றுக்காகச் சேக்கிழான் பாலறுவாயன் களப்பாளராயன் வரியிலியாக நிலதானம் செய்தான். 221 of 1929 |
| 6. | குலோத்துங் கன்-III[3] (கி.பி. 1178-1218) கோட்டூர் | கி. பி. 1179 | குன்றத்தூர்ச் சேக்கிழான் பாலறுவாயன் களப்பாளராயன் விளக்கு எரிக்கப் பணம் தந்தான். 445 of 1912 |
| 7. | ,, திருக்கடையூர் | கி. பி. 11௦1 | குன்றத்தூர்ச் சேக்கிழான் அம்மையப்பன் பராந்தக தேவனான கரிகால சோழப் பல்லவராயன் நிலதானம் செய்தான். 39 of 1906 |
| 8. | ,, குன்றத்தூர் | ,, | சேக்கிழான் புவனப் பெருமாள் என்ற துண்டக நாடு உடையான் மனைவி திருநாகேச்சரம் கோவில் சபையாரிடம் விளக்கெரிக்கப் பணம் தந்தான். 230 of 1930 |

| அரசன் பெயரும் ஆட்சிக் காலமும் | கல்வெட்டுள்ள இடம் | கல்வெட்டின் காலம் | செயல் |
|---|---|---|---|
| 9. இராசராசன்-III (கி.பி. 1216-1246) | திருப்பாலைவனம் | கி. பி. 1225 | குன்றத்தூர்ச் சேக்கிழான் பட்டிய தேவன் ஆட்கொண்டான் விளக்கு எரிக்க ஆடுகள் தானம் செய்தான். 314 of 1929 |
| 10. ,, | திருப்பாசூர் | கி. பி. 1226 | குன்றத்தூர்ச் சேக்கிழான் அரையன் ஆட்கொண்ட தேவன் என்ற முனையதரையன் விளக்கு எரிக்கப் பசுக்கள் அளித்தான். 136 of 1930 |
| 11. ,, | குன்றத்தூர் | கி. பி. 1249 | குன்றத்தூர்ச் சேக்கிழான் வரந்தரு பெருமாள் என்ற திருவூரகப் பெருமாள் திருநாகேச்சரம் கோவிலில் விளக்கு வைக்கப் பணம் தந்தான். 218 of 1930 |
| 12. மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1270-1305) | குன்றத்தூர் | கி. பி. 1300 | குன்றத்தூர்ச் சேக்கிழான் ஆடவல்லான் என்பவன் திருநாகேச்சரர்க்கு நிலதானம் செய்தான். 208 of 1930 |

அந்தந்த அரசரையே சிறப்பாகக் குறிக்கும் தொடக்கத் தொடர்கள் மேற்காட்டிய கல்வெட்டுகள் பலவற்றில் இன்மை வருந்தற்குரியது. குலோத்துங்கர் 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என்ற விருதுடன் மூவர் இருந்தனர்; அங்ஙனம் அதே விருதுடன் இராசராசர் இருவர் இருந்தனர். இன்ன கல்வெட்டு இன்ன குலோத்துங்கரைத்தான் குறிக்கின்றது என்று சிறப்புத் தொடர்கள் இல்லாத கல்வெட்டுகள் கொண்டு திட்டமாகக் கூறற்கில்லை. ஆதலின், ஐயப்படத்தக்கவற்றுள்,

1, 2, 3 இராவ்சாகிப் மு. இராகவையங்கார் கொண்ட முடிபை ஏற்றுக் குறிக்கப்பெற்றன.

Vide his 'Sasana Tamil Kavi Charitam'. pp. 71—77

மற்றவை பேராசிரியர் க. அ. நீலகண்ட சாத்திரியார் கொண்ட முடிபின்படி குறிக்கப் பெற்றன.

—Vide his 'Cholas'. Vol. II, part II

சேக்கிழார் மரபினர்

இக்கல்வெட்டுச் செய்திகளால் அறியப்படுவன:—

1. சேக்கிழார் குடியினர் தொண்டை மண்டலத்து மணவிற் கோட்டம், மேலூர்க் கோட்டம், புலியூர்க் கோட்டங்களில் வாழ்ந்துவந்தனர்.

2. அக்குடியினர் 'சோழ முத்தரையன், உத்தம சோழப் பல்லவராயன், களப்பாளராயன், கரிகால சோழப்பல்லவராயன், முனையதரையன் என்ற பட்டங்கள் பெற்றுச் சோழர் அரசியலில் சிறந்த பங்குகொண்டிருந்தனர்.

3 அங்ஙனம் அரசியலிற் பங்கு கொண்டவருள் குன்றத்தூர்ச் சேக்கிழார் மரபினரே பலர் ஆவர்.

4. இம்மரபினர், திருத்தொண்டர் புராண வரலாறுடையார் குறித்தபடி, சோழராட்சி முடியுமளவும் அதற்குப் பிறகும் அரசியற் பதவிகள் தாங்கி யிருந்தனர்.

5. இம்மரபினர் சைவப் பற்றுடையவராய்ப் பல தளிகட்குத் தானம் செய்த பெருமக்களாவர்.

இவருட் பெரிய புராணம் பாடியவர் யாவர்?

மேற்காட்டிய பட்டியலில் குன்றத்தூர்ச் சேககிழார் மரபினர் இரண்டாம் குலோத்துங்கன் கால முதற்றான் சோழர் அரசியலில் சிறப்புப் பெறலாயினர் என்பது தெளிவாகத் தெரிகிறது. இரண்டாம் இராசாதிராசனது 19-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டிற் காணப் பெறும் சேக்கிழார் பாலறவாயரும் மூன்றும் குலோத்துங்கனது 2-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிற் காணப் பெறும் சேக்கிழார் பாலருவாயரும் ஒருவரே எனக் கோடல் தவறுகாது. இரண்டாம் இராசராசனது 17-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டிற் காணப் பெறும் சேக்கிழான்



சேக்கிழார் உருவச்சிலை

மாதேவடிகள் ராமதேவனான உத்தமசோழப் பல்லவராயன் *என்பவர் மேற்சொன்ன பாலறாவாயர் தமையனாரும் பெரிய புராணம் பாடியவருமாகிய சேக்கிழாராக இருக்கலாம் என்று கோடலும் தவறாகாது. என்னை? சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவரே என்பது மேலே பல சான்றுகள் கொண்டு விளக்கப்பட்டதாலும் இப்பட்டியற்படி இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலும் அவன் மகனான இரண்டாம் இராசராசன் காலத்திலும் வெளிப்பட்ட கல்வெட்டுகளில் சேக்கிழார் புராண ஆசிரியர் குறித்த 'சேக்கிழார் உத்தம சோழப் பல்லவராயர்', 'சேக்கிழார் பாலறாவாயர்' என்பவர் பெயர்கள் காணப்படலாலும் என்க.

## சேக்கிழான் மாதேவடிகள்

'மாதேவடிகள்' என்பது சேக்கிழாரது பக்திச் சிறப்பு நோக்கி வந்த பெயராகலாம். இதற்கேற்பச் சேக்கிழார் புராண ஆசிரியர் அவரைக் 'குன்றைமுனி சேக்கிழார்'[36] எனவும் 'அண்டவாணர் அடியார்கள் தம்முடன் அருந்தவந்தனில் இருந்தவர்'[37] எனவும் கூறியிருத்தல் கருதற்பாலது. ஆதலின் சேக்கிழார்க்கு 'மாதேவடிகள்' என்ற பெயர் அவர் பெரிய புராணம் பாடிய பிறகு உண்டானதென்று கோடல் பொருத்தமாகும்.[38].

## இராமதேவன்

இப்பெயர் சேக்கிழார் புராண ஆசிரியர் கூறாததாகும். இது சேக்கிழாரது இயற்பெயர் என்னலாம். சிறந்த

---

[36] S. 84.

[37] S. 100.

[38] இதே முடிபினை இராவ்சாகிப் மு. இராகவையங்கார் அவர்களும் கொண்டுள்ளனர்.

—Vide his 'Sasana Tamil kavi charitam', pp. 71—77.

* இப்பெயர் 'மாதேவடிகளார் மாதேவனான உத்தம சோழப் பல்லவராயன்' என்று கருதவும் இடமுண்டு (?)

சைவ மரபிலே பிறந்த சேக்கிழார்க்கு 'இராமதேவன்' என்ற வைணவப் பெயர் அமையுமோ? எனின், அமையும் என்னலாம் 63 நாயன்மாருள் ஒருவராகிய முனையதரை யர் 'நரசிங்கர்' என்ற வைணவப் பெயரையும், ஒன்பதாம் திருமுறையில் இரண்டு பதிகங்கள் பாடியுள்ள சிவனடி யார் ஒருவர் புருடோத்தம நம்பி என்ற வைணவப் பெய ரையும் கொண்டிருந்தனர் என்பதை அறிய, சிறந்த சிவ பக்தனை முதற் குலோத்துங்கன் மனைவியருள் ஒருத்தி பெயர் 'நம் பிராட்டியார் ஸ்ரீராமன் அருமொழி நங்கை என்ற ஏழுலகம் உடையார்' [39] என்பதையும் நோக்க, பெரிய புராண ஆசிரியரும் சிறந்த சிவனடியாரும் ஆகிய சேக்கிழார் 'இராமதேவன்' என்ற பெயர் பெற்றிருந்ததில் வியப்பில்லை என்க. மேலும், இச்சேக்கிழார் மரபில் வந்த ஒருவன் குன்றத்தூர்ச் சேக்கிழான் வரந்தருபெரு மாள் என்ற திருவூரகப்பெருமாள்' [40] என்ற பெயர்கொண்டு மூன்றும் இராசராசன் காலத்தில் இருந்தான் என்பது நோக்கத்தக்கது. 'திருவூரகப்பெருமாள்' என்ற பெயர் குன்றத் தூரில் கோவில்கொண்டுள்ள விஷ்ணுவின் பெயராகும் [41] என்பது இங்கு அறியத்தக்கது. இத்துடன், குன்றத்தூர்ச் சேக்கிழார் மரபினருள் சிலர் இன்றும் வைணவராக இருப் பதும் கவனிக்கத் தக்கது. [42].

## அருண்மொழித்தேவர்

இப்பெயர் சேக்கிழார் இயற்பெயர் என்று கொள் ளத்தக்க முறையில் சேக்கிழார் புராண ஆசிரியர் குறித்

---

[39] 304 of 1907.

[40] 218 of 1930.

[41] Vide Ins. 177 to 179 of 1930.

[42] I have visited Kunrattur (the present Nattam and Tirunagesvaram).

துள்ளார். இப்பெயர் சோழர்காலத்திற் பெருவழக்குடையது. முதல் இராசராச சோழனுக்கு இப்பெயர் இருந்தது.[43] அருள்மொழி நங்கை என்று சோழமாதேவியார்க்குப் பெயர் இருந்தது[44]. குடிமக்களும் இப்பெயர் பெற்றிருந்தனர்[45] என்பது பல கல் வெட்டுகளைக்கொண்டு அறியலாம்.



சேக்கிழார் கோவில்

ஆதலின் இப்பெயர் சேக்கிழாரது இயற்பெயராகக் கொள்ளலாம்; இன்றேல் பெரிய புராணப் பாடற்சிறப்பு நோக்கி இவரை இங்ஙனம் அறிஞர் அழைப்பாராயினர் எனக் கோடலும் பொருந்தும்.

---

[43] K. A. N. Sastry's 'cholas', Vol. I, p. 224; Vol. II, part I, p. 459.

[44] 482 of 1925, 304 of 1907.

[45] 96 of 1911, 81 of 1900, 671 of 1919.

## உத்தம சோழப் பல்லவராயர்

இப்பட்டம் சேக்கிழார்க்கு அரசன் தந்தான் என்று சேக்கிழார் புராண ஆசிரியர் குறித்தனர்.

சோழர் அரசியில் பலவகைத் துறைகளிலும் தலைவர்களாக இருந்தவர்—படைத்தலைவர், நாட்டுத் தலைவர், நாட்டை அளக்குந் தலைவர், திருமந்திர வோலைநாயகம், உடன்கூட்டத்து அதிகாரிகள் முதலியவர் "மூவேந்த வேளான், காலிங்கராயன், கேரளராசன், தொண்டைமான், வாணகோவரையன், பல்லவராயன், இளங்கோவேது, காடவராயன், கச்சிராயன், சேதிராயன், விழுப்பரையன்" முதலிய பட்டங்கள் அரசரால் வழங்கப் பெற்றனர்[46]. பெறவே சேக்கிழார் அமைச்சுத்துறையில் முதன்மையாக இருந்தமையால் 'உத்தம சோழப் பல்லவராயர்' என்ற பட்டத்தைப் பெற்றனர் எனக் கோடல் பெரிதும் பொருத்தமேயாகும்.

## சோழநாட்டுத் திருநாகேச்சரம்

சோழநாட்டுத் திருநாகேசச்சரத்தில் சேக்கிழார், அவர் தம்பி பாலவறுவாயர், அவர் தாயார் ஆகிய மூவர் உருவச்சிலைகள் இன்றும் இருக்கின்றன. அவை, சேக்கிழார் அமைச்சராக இருந்தபொழுது அத்திருநாகேச்சரத்திற் பேரன்பு கொண்டிருந்தார் என்று சேக்கிழார் புராணம் செப்புகின்றதை உறுதிப்படுத்துகின்றன என்று கோடல் தவறாகாது.

## குன்றத்தூர்த் திருநாகேச்சரம்

சேக்கிழார், சோழநாட்டுத் திருநாகேச்சரத்தைப் போன்றதொரு கோவிலைத் தம் குன்றத்தூரில் கட்டி,

[46] T. V. S. Pandarathar's 'Kulottunga I', p. 82.

அதற்கு அப்பெயரிட்டார் என்று சேக்கிழார் புராணம் கூறுகின்றது. குன்றத்தூர்த் திருநாகேச்சரம் என்ற கோவிலில் உள்ள 44 கல்வெட்டுகளைக் காணின் [47] அவற்றில் பழமையானவை இரண்டாம் குலோத்துங்கன் காலத்தனவேயாகும் என்பதை அறியலாம். அக்கோவிலில் சேக்கிழார்க்குத் தனிக் கோவில் இருக்கின்றது. சேக்கிழார் விழா ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. அக்கோவிலுக்குச் சிறப்பாகச் சேக்கிழார் மரபினரே தானங்கள் செய்தனர் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. இவை அனைத்தையும் நோக்கச் சேக்கிழார், சோணாட்டுத் திருநாகேச்சரத்தை நினைவிற் கொண்டு தம் ஊரில் இக்கோவிலைக் கட்டியிருக்கலாம் என்று கோடல் பொருத்தமே ஆகும்.

## சேக்கிழார் மரபினர்

சேக்கிழார் புராண ஆசிரியர், 'சேக்கிழார் காலமுதல் இன்றுவரை அம்மரபினர் அரசர்பால் சிறப்புற்று வருகின்றனர்' என்று கூறியுள்ளார். [48] அவர் கூற்று மெய் என்பதை நாம் முன்பு காட்டிய சேக்கிழார்-பெயர்ப்பட்டியல் உறுதிப்படுத்தலைக் காணலாம். (1) இதுகாறும் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் குன்றத்தூர்ச் சேக்கிழார் மரபினரைக் குறிக்கும் கல்வெட்டுகள் சேக்கிழார் காலத்தவனான இரண்டாம் குலோத்துங்கன் கால முதலே காணக் கிடைக்கின்றன. (2) அவருக்குப் பின்னும் அம்மரபினர் சோழப் பேரரசில் சிறப்புற்றிருந்தனர் என்பது மேற்சொன்ன பட்டியலைக் கொண்டே பாங்ுற உணரலாம்.

---

47 Ins. 187 to 230 of 1929-'30.

48 194, 198, 199, 222 of 1929-'30.

49 S. 102.

## முடிவுரை

இதுகாறும் நடத்திய ஆராய்ச்சியாற் போந்த செய்திகளாவன :—

1. சேக்கிழார் தொண்டைமண்டலம் - புலியூர்க் கோட்டம்-குன்றத்தூர் வளநாட்டுக் குன்றத்தூரினர்; வேளாளர்; சேக்கிழார் குடியினர். அவரது இயற்பெயர் 'இராமதேவன்' என்பதாகலாம். அவர் தம்பி பாலறுவாயர்.

2. சேக்கிழார் காலத்து அரசன் 'அநாபயன்' என்ற சிறப்புப் பெயர்கொண்ட இரண்டாம் குலோத்துங்கன். சேக்கிழார் அவனுடைய முதல் அமைச்சர் ஆகலாம். அவர் 'உத்தம சோழப் பல்லவராயர்' என்ற பட்டம் பெற்றவர், இளவரசனை இரண்டாம் இராசராசனிடம் நெருங்கிப் பழகியவர் ஆகலாம்.

3. சேக்கிழார் சோழநாட்டுத் திருநாகேச்சரத்தில் மிகுந்த பக்தி பூண்டவர். ஆதலால், அவர், அதற்கு அறிகுறியாகத் தமதூரில் 'திருநாகேச்சரம்' என்ற பெயராற் கோவில் எடுப்பித்திருக்கலாம்.

4. சேக்கிழாருடைய சைவ சமயப்பற்றும் நாயன்மார் வரலாற்று அறிவும் சிறந்த தமிழ்ப் புலமையும் கண்ட அநாபயன் அவரைப் பெரிய புராணம் பாடச் செய்திருக்கலாம்; அல்லது, இவற்றை இளவரசனை இராசராசன் வாயிலாக உணர்ந்து அநபாயன் சேக்கிழாரைப் பெரியபுராணம் பாடச் செய்து சிறப்பளித்திருக்கலாம். சீவகசிந்தாமணிபற்றி எழுந்தது பெரிய புராணம் என்ற கூற்றுப் பொருத்தமற்றது.

5. சேக்கிழாருக்குப் பின் அவர் தம்பி பாலறுவாயர் சோழர் அரசியலில் உயர்வடைந்திருக்கலாம். சேக்கிழார்

இரண்டாம் இராசராசன் காலத்திலும் (கி. பி. 1162) உயிருடன் இருந்தவராவர்.

6. பெரிய புராணத்திற் பற்றுக்கொண்ட இரண்டாம் இராசராசன், தான் கட்டிய இராசராசேச்சரம் மூலத் தானப் புறச்சுவர்களில் நாயன்மார் வரலாற்று நிகழ்ச்சிகளைச் சிற்பங்களாகச்செதுக்குவித்தான்போலும்!

7. சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணமே இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் (ஏறத்தாழக் கி. பி. 1174-ல்) திருவொற்றியூர்க் கோவிலில் நடந்த பங்குனி உத்தர விழாவிற் படிக்கப்பட்டதாகலாம்.

8. சேக்கிழார் புராண ஆசிரியர் சைவ சமய ஆசாரியராகிய புகழ்பெற்ற உமாபதி சிவாசாரியர் என்னல் பொருந்தாது. அதனை எழுதியவர் இவரின் வேறானவர்: ஆயினும் அவர் கூறும் சேக்கிழார்பற்றிய செய்திகள் பெரும்பாலும் கல்வெட்டாராய்ச்சிக்குப் பொருந்துவனவாக இருத்தலால், அவர், சேக்கிழார் வரலாறு நாட்டில் நன்றாய்ப் பரவி இருந்த காலத்தவர்; உமாபதி சிவத்திற்கு முற்பட்டவர் என்னலாம்.

---

# III. சுந்தரர் காலம்

பெரிய புராணத்திற்குச் சிறப்புடை முன்னூல்கள் இரண்டு. அவை (1) சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை, (2) நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திரு அந்தாதி என்பன. இவற்றுள் சுந்தரர் தொகையே காலத்தால் முற்பட்டது என்பதை அனைவரும் அறிவர். அத்தொகையுள் 63 நாயன்மார் பெயர்களும் குறிப்பிடப் பெற்றமையாலும் அவருள் சுந்தரரும் ஒருவர் ஆதலாலும் அவர் காலத்தைக் கண்டறிவோமாயின், 63 நாயன்மாரது இறுதிக்கால எல்லையை அறிந்தவர் ஆவோம்.

## இரு விதக் கருத்துகள்

ஆராய்ச்சியாளர் பலர் சுந்தரர் காலத்தை அறிய முயன்றுள்ளனர். அவர்கள் முடிபுகள் இருவகைப்படும். அவையாவன:—

1. சுந்தரர் காலத்து அரசன் 'கழற்சிங்கன்' என்ற பல்லவன் என்பது தொகையிற்குறிக்கப்பட்டுள்ளது. 'கழற்சிங்கன்' என்ற தொடரில் 'கழல்' என்பது அடைமொழி. 'சிங்கன்' என்பது இயற் பெயர். 'சிங்கன்' என்ற இறுதிச் சொல்லுடன் இருவர் பல்லவ மன்னராக இருந்தனர்: ஒருவன் நரசிங்கன் 1 (கி. பி. 630-668); மற்றவன் நரசிங்கன் II எனப்பட்ட இராச சிங்கன் (கி. பி. 685-720). இவருள் முதல்வன் காலத்தில் அப்பர்-சம்பந்தர் வாழ்ந்தனர். எனவே சுந்தரர் இராசசிங்கன் காலத்தவராகவே இருத்தல் வேண்டும்.[1]

---

[1] T. V. S. Pandarattar, Tamil Polil, Vol. 3, pp. 205-209, K. Somasundaram, Ibid, Vol. 8, pp. 414-418; M. Raghava Iyengar's 'Alwargal Kalanilai', pp. 135, 136.

2. பல்லவருள் 'கோப்பெருஞ்சிங்கன்' முதலாகச் 'சிங்கன்' இறுதி பெற்ற பெயர்கள் உண்டு. 'கோப்பெருஞ்சிங்கன்' என்பவன் பிற்காலத்தில் ஆண்டவன். (கி. பி. 7,8,9-ஆம் நூற்றாண்டுகளில் இவ்விதச் சிங்கப் பெயரும் 'கழல்' என்ற தூய தமிழ்ப்பெயரும் கொண்ட பல்லவப் பெயர்கள் கிடையா. ஆகவே, 'கழற்சிங்கன்' என்பது காரணப்பெயராக இருத்தல்வேண்டும். இங்ஙனம் கொண்டு சுந்தரர் குறித்த பல்லவனைப்பற்றிய குறிப்புகளை ஆராயின், அக்குறிப்புகள் பொருந்தப் பெற்ற பல்லவன் மூன்றாம் நந்திவர்மன் (கி. பி. 840-865) என்று கூறலாம் [2].

[2] Rao Bahadur C. M. Ramachandra chettiar, Sentamil Selvi, Vol. 9, pp. 201-205 ; Dr. C. Minakshi. 'Administration & Social life under the Pallavas', pp. 299-304.

இச்சந்தர்ப்பத்தில், சிம்ம விஷ்ணுவிக்குப்பின் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பல்லவப் பெருநாட்டையாண்ட அரசர் பெயர்களை அறிதல் நலமாகுமாதலால், அவற்றைக் காலமுறைப்படி தருகின்றோம்.

| அரசர் பெயர் | காலம் | சமயம் | இருந்திருக்கக்கூடிய அடியார் |
|---|---|---|---|
| 1. மகேந்திரவர்மன் I | 615—630[3] | முதலில் சமணம்; பிறகு சைவம் | அப்பர் |
| 2. நரசிம்மவர்மன் I | 630—668[4] | வைணவம் | சிறுத்தொண்டரும் சம்பந்தரும் |
| 3. மகேந்திரன் II | 668—670 | | |
| 4. பரமேசுவரவர்மன் I | 670—685 | சைவம் | |
| 5. நரசிம்மவர்மன் II என்ற இராசசிங்கன் | 685—720[5] | சைவம் | பூசலார் (?)[5a] சுந்தரர் (?) |
| 6. பரமேசுவரவர்மன் II | 720—725 | சைவம் | |

[3] Dr. N. V. Ramanayya's article on 'Mahandravarman & Pulikesin II'.

[4] Same scholar's article on 'Durvinita & Vikramaditya I' (Triveni).

[5] Dr. C. Minakshi's 'Administration and social life under the Pallavas,' p. 117.

[5a] R. Gopalan's 'Pallavas of Kanchi' p. 109.

| | அரசர் பெயர் | காலம் | சமயம் | இருந்திருக்கக்கூடிய அடியார் |
|---|---|---|---|---|
| 7. | நந்திவர்மன் II | 725—790[6] | வைணவம் | திருமங்கையாழ்வார் |
| 8. | தந்திவர்மன் | 790—840 | வைணவம் | |
| 9. | நந்திவர்மன் III | 840—865[7] | சைவம் | சுந்தரர் (?) |
| 10. | நிருபதுங்கவர்மன் | 865—890 | வைணவன் | |

இப்பட்டியலிற் கண்ட இராசசிங்கனுக்குப் பிறகு பலஆண்டுகள் ஆண்ட பல்லவ அரசர் இருவரும் சிறந்த வைணவர் ஆவர். நந்திவர்வன் III ஒருவனே சிறந்த சிவபக்தனுகப் பட்டயங்களிற் குறிக்கப்படுபவன். எனவே, இந்த இருவருள் ஒருவர் காலத்தவராகத்தான் சுந்தரர் இருத்தல் கூடும். ஆதலின், சுந்தரர் குறித்த கழற்சிங்கனைப் பற்றியும் அவர்கால நிலைமையைப்பற்றியும் வரும் தேவாரக் குறிப்புகளை முதற்கண் கண்டு, அவற்றுக்கு எந்த அளவு இவ்விருவர் கல்வெட்டுக் குறிப்புகள் ஒத்து வருகின்றன என்பதைக் காண்போம்.

6 Dr. N. V. Ramanayya's article, 'The Date of Pallava Malla', (J. O. R.)

7 Dr. C. Minakshi's 'Ad. & S. Life under the Pallavas', p. 300.

சுந்தரர் கூறுவன

1 'கடல் சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்!' [8]

2. "மண்ணுலகம் காவல் பூண்ட உரிமையால் பல்லவர்க்குத் திறைகொடா மன்னவரை மறுக்கஞ் செய்யும் பெருமையார் புலியூர்ச்சிற்றம்பலத்தெம் பெருமானைப் பெற்றும் அன்றே." [9]

இவற்றால் அறியப்படுவன

1. கழற்சிங்கன் பேரரசன், 2. அவன் 'கழற்சிங்கன்' என்றதால் சிறந்த போர்வீரன், 3. சிறந்த சிவபக்தன், 4. அவனுக்குத் திறை கட்டா (அடங்காத) மன்னர் (போரில்-சிவனருளால்) தண்டிக்கப்பட்டனர்.

இராச சிங்கன்

(கி. பி. 685-720)

இனி இக்குறிப்புகள் இராச சிங்கனைப்பற்றிய குறிப்புகளோடு ஒன்றுபடுகின்றனவா என்பதைக் காண்போம்:

1. இவன் பேரரசன் என்பது சீனத்துடன் கொண்டிருந்த வாணிபத்தொடர்பினால் நன்கு விளங்குகிறது. [10]

2. இவன் "நரசிம்ம அவதாரத்தை ஒத்தவன்; போரில் சிங்கம் போன்றவன்; போரில் மிகக் கொடியவன்; தன்பகைவரை அழிப்பவன்; பகைவர்க்கு இடியேறு போன்றவன்;

---

[8] Tiruthondattokai, S. 9.

[9] Tillai Padigam, S. 4.

[10] Dr. C.Minakshi's 'Ad. & S. Life under the Pallavas' pp. 68 & 90.

கொடிய பேரரசுகளை ஒழிப்பவன்; பல இடங்களை வென்றவன்; போரில் மனவுறுதி உடையவன்; போரில் களைப்படையாதவன்; செருக்கரை அடக்குபவன்......"[11] என்று இவன் கட்டிய கயிலாசநாதர் கோவிற் கல்வெட்டுகள் இவனைப் பாராட்டியுள்ளன. ஆதலின், இவன் சிறந்த போர் வீரன் என்பது தெற்றெனத் தெரிகிறது. இவன் சாளுக்கிய விநயாதித்தனையும் கங்க அரசனான முதலாம் சிவமாறனையும் தாக்கிப் போரிட்டான் என்று கருதப்படுகிறது.[12]

3. இவன், 'ரிஷபாஞ்சனன், ஸ்ரீ சங்கரபக்தன், சிவ சூடாமணி, என்று கல்வெட்டுகளிற் புகழப்படுபவன்; உலகப் புகழ்பெற்ற காஞ்சிக் கயிலாசநாதர் கோவில் கட்டியவன்; சைவசித்தாந்தத்திற் பேரறிவுடையவன்; கலியுகத்தில் வான்ஒலி (அசரீரி) கேட்ட பேறுடையவன்"[13]. இக்குறிப்புகளால் இவன் சிறந்த சிவபக்தன் என்று துணிந்து கூறலாம்.

4. இவன் காலத்தில் பல்லவர்க்கும் தமிழ் அரசர்க்கும் போர் நடந்ததாகத் தெரியவில்லை. அதற்குப் பதிலாகப் பாண்டிய அரசனான கோச்சடையன் இரணதீரன் இவன் மருமகனாகவும், அவன் மகனான தேர்மாறன் இராசசிம்மன் இவன் பெயரனாகவும் கருதப்படுகிறான்.[14] கோச்சடையன் இரணதீரன், நெடுமாறன் மகன் ஆதலின், தாய்வழியிற் சோழனுமாவன். இவன் உதவியின்றிச் சோழர் பல்லவனை எதிர்க்க வழியில்லை. எனவே, இராச

---

[11] S. I. I. 1. Nos. 24, 25 etc.

[12] M. K. Rao's 'Gangas of Talakad', pp. 49-50; Vide the Author's 'Pallavas' (Tamil) pp. 135—139.

[13] S. I. I. 1. p. 20.

[14] Dubreuil—Pallavas, p. 68; Dr. Minakshi's Ad .... Pallavas', p. 90.

சிங்கன் காலத்திற் 'பல்லவர்க்குத் திறைகட்டா மன்ன வர்' என்று சுந்தரராற் குறிக்கப்பட்ட பகைவர் வலிமையும் சிறப்பும் பெற்றவராதல் — அப்பகைவர் இன்னவர் என்பதாதல் இவன் வரலாற்றில் தெரியக்கூட வில்லை. இந்த ஒன்று தவிர, சுந்தரர் குறித்த கழற்சிங் கன் குறிப்புகட்கும் மேற்சொன்ன இராச சிங்கன் குறிப்புகட்கும் நிறைந்த ஒற்றுமை காணப்படுகின்றது.

இனி, மூன்றாம் நந்திவர்மனைப் பற்றிய குறிப்புகளைக் காண்போம். இவன் வரலாற்றை அறிய, இவனைப்பற் றிய கல்வெட்டுகளும் இவன் மகனது பாகூர்ப் பட்டயமும் இவன்மீது பாடப்பெற்ற நந்திக்கலம்பகமும் துணைபுரி கின்றன.

## நந்திவர்மன் III
(கி. பி. 840-865)

1. இவன் வடபுலத்தில் வாகை சூடியவன்; தமிழர சர் மூவரையும் தெள்ளாற்றில் முறியடித்து 'தெள்ளாறு எறிந்த நந்திவர்மன்' எனப் பெயர்பெற்றவன். இவன் காலத்தில் கடல்வாணிகம் நன்கு நடைபெற்றது; சீகாழிக் கடுத்த நாங்கூரிலிருந்து சென்ற பெருமகன் ஒருவன் இப் பல்லவன் பெயரால் சையாமில் குளம் ஒன்று தொட்டான் எனின். இப்பல்லவனது புகழ் கடல் கடந்த நாடுகளிலும் பரவி இருந்ததென்னலாம். இவன் சிறந்த கடற்படை யுடையவன் என்று கலம்பகம் கூறுகிறது. இவற்றால் இவன் பேரரசன் என்பது எளிதில் விளங்கும்.

2. இவன் சிறந்த போர்வீரன் என்பது மேற்சொன்ன இரு போர்களால் விளக்கமாகும். இவன், "அறைகழல் முடித்த அவனி நாரணன்", எனவும், "குரைகழல்வீரநந்தி" எனவும் பல்லவர்கோன் அரி (பல்லவருட் சிங்கன்) எனவும் கலம்பகத் திற் பாராட்டப்பெற்றவன். இத்தொடர்கள், சுந்தரர் குறித்த 'கழற்சிங்கன்' என்ற பெயரை மெய்ப்பித்தல் காண்க

3. இவன் "சிவனை முழுதும் மறவாத சிந்தையன்" என்று கலம்பகம் குறிக்கிறது. இவன் சிறந்த சிவபக்தன் என்பதை வேலூர்ப் பாளையப் பட்டயத்தாலும் அறியலாம்.

4. நந்திவர்மன் தெள்ளாற்றுப் போரில் தமிழரசர் மூவரையும் நன்கு முறியடித்தான் என்பது கலம்பகத்தாலும் கல்வெட்டுகளாலும் வெளியாகின்றது. இதனைத் தான் சுந்தரரது தில்லைப்பதிகமும் குறித்ததாதல் வேண்டும். நந்திக்குத் தமிழரசர் திறைகட்டினவர் (அடங்கியவர்) என்பது கலம்பகத்தால் தெரிகிறது. [15]

சுந்தரர் குறித்த குறிப்புகள் அனைத்தும் நந்திவர்மனைப் பற்றிய குறிப்புகளோடு ஒன்றுபடல் காணத்தக்கது. அவற்றில் சிறப்பாகப் 'பல்லவர்க்குத் திறைகொடா மன்னவர்' (தெள்ளாற்றில் முறியடிக்கப்பட்ட) தமிழ் மூவேந்தராக இருக்கலாம் என்று நினைக்க இடமுண்டாதல் காண்க. இங்ஙனம் நினைக்கக்கூட இராச சிங்கன் வரலாற்றில் இடமின்மை முன்பே காட்டப்பட்டது.

இனிச் சேக்கிழார், சுந்தரர் குறியாத சில செய்திகளைக் கழற்சிங்கர் புராணத்திற் கூறியுள்ளார். அவற்றைக் கண்டு, பின் அவற்றுக்கும் மேற்சொன்ன இருவர் பற்றிய குறிப்புகட்கும் உள்ள ஒற்றுமை-வேற்றுமைகளைக் காண்போம்.

சேக்கிழார் கூறுவன

கழற்சிங்கர்

1. சிவனைத் தவிர வேறுதெய்வத்தை வணங்காதவர்.

2. வடநாட்டுப் போரில் வெற்றி கொண்டவர்.

[15] Dr. C. Minakshi— 'Ad. . . . .Pallavas', pp. 299-304.

3. நாடு அறநெறியில் வைக நன்னெறி வளர்த்தவர்.

4. பல கோவில்கட்குத் தொண்டு செய்தவர்.

5. இவரது பட்டத்தரசி உரைசிறந்து உயர்ந்தவள்.

6. அரசர் திருவாரூரில் இறைவனை வணங்குகையில், இவ்வரசி பிராகாரத்தைச் சுற்றிக்கொண்டே கோவிலின் அழகைக் கவனித்துவந்தாள்; வந்தவள், பூத்தொடுக்கும் மண்டபத்தண்டை விழுந்திருந்த புதுப்பூ ஒன்றை எடுத்து மோந்தாள்; (அத்தவற்றுக்காகச் செருத்துணை நாயனாரால் மூக்கு அரியப்பட்டாள்).

இவற்றுள் 1, 2, 3, 5 இராச சிங்கற்கும் நந்திவர்மற்கும் ஒற்றுமையுடைய குறிப்புகளே ஆகும். இராச சிங்கனிடம் (அவனைப்பற்றிய இன்றுள்ள சான்றுகள்கொண்டு) இருந்தவை என்று காட்ட முடியாத நிலையில் 4-ம், 6-ம் காண்கின்றன. ஆதலின், அவற்றை இங்கு விளக்கல் நலமாகும்.

4-ஆம் குறிப்பு

இராச சிங்கன் கயிலாசநாதர் கோவில், ஐராவதேசுவரர் கோவில், மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோவில் போன்ற பல கோவில்களைக் கட்டினவன்; ஆயின் வேறு பல கோவில்கட்குத் 'தொண்டு' (திருப்பணி) செய்தனன் என்று கூறத்தக்க சான்றில்லை. பாடல்பெற்ற கோவில்களில் ஒன்றிலேனும் இராச சிம்மன் கல்வெட்டு இருந்ததாகத் தெரியவில்லை.*

ஆயின், நந்திவர்மன் செய்த சிவத் தொண்டுகள் பலவாகும்: (1) இவன் பட்டம் பெற்ற 6-ஆம் ஆண்டில் பொன்னேரிக்கடுத்த திருக்காட்டுப்பள்ளியில் புதிதாய்க் கட்டப்பட்ட சிவன் கோயிலுக்கு அச்சிற்றூரையே தேவ

* Pallava Ins. Vol. 12.

*தானமாக விட்டான்[16] இதனைக் கூற எழுந்ததே வேலூர்ப் பாளையப் பட்டயம்.*

*2. இவன் திருவதிகை வீரட்டானேசர்முன் விளக்கெரிக்க 100 கழஞ்சு பொன் அளித்தான்;[17]*

*(3) 'குமார மார்த்தாண்டன்' என்ற தன் பெயர் கொண்ட விளக்கு ஒன்றைத் திருவிடைமருதூர்ச் சிவனார்க்களித்தான்;[18] திருவொற்றியூர்ச் சிவன் கோவிலில் விளக்கு வைக்கப் பொன் தந்தான்[19]; திருத்தவத்துறை மகாதேவர் கோவிலில் விளக்கெரிக்கப் பொன் அளித்தான்[20]; திருக்கடை முடி மகாதேவர்க்கு நிலதானம் செய்தான்.[21] திருப்பதிகம் கோவில்களில் ஓதப்பெற்றது என்பதை முதன் முதல் அறிவிக்கும் திருவல்லம் கல்வெட்டு[22] இப்பெருமகன் காலத்தில் எழுந்ததே ஆகும்.*

## 6-ஆம் குறிப்பு

*சேக்கிழார் கூற்றிலிருந்து கழற்சிங்கனது பட்டத்தரசி செய்த தவறுகள் இரண்டு என்பது புலனாகும். அவை யாவன: (1) கணவன் பூங்கோயிற் பெருமானை வணங்கும் பொழுது உடன் இருந்து வணங்காமை. கோவிலுக்குச் செல்லும் கணவனும் மனைவியும் சேர்ந்தே வணங்குதல் யாண்டும் எக்காலத்தும் உள்ள முறைமையன்றோ? இவ்வியற்கைக்கு மாறுபட்ட செயல் இவ்வரசியிடம் காணப்படல் நோக்கத்தக்கது.*

---

16 S. I. I. 2. 98.
17 S. I. I. 8—309.
18 197 of 1907.
19 162 of 1938.
20 27 of 1931.
21 11 of 1899.
22 S. I. I. 3 - 92

(2) பூமாலை கட்டும் மண்டபத்தின் பக்கத்தில்இருந்த புதுமலர் இறைவனுக்கு மாலை கட்டற்குரியது என்பதனையோ கோவிலில் உள்ள மலரை மோத்தல் ஆகாது என்பதனையோ அறியாமல் இவள் மலரை மோந்தமை பெருங்குற்றமாகும்.

இவ்விரு குற்றங்களையும் செய்தவள் இராசசிங்கன் பட்டத்தரசியாக இருத்தல் கூடுமா? நந்திவர்மன் பட்டத்தரசியாக இருத்தல் கூடுமா? என்பது இங்கு ஆராய வேண்டுவதாகும்.

1. இராச சிங்கன் பட்டத்தரசி ரங்கபதாகை என்பவள். அவள் சிவனுக்கு அமைந்த பார்வதிபோல இராச சிம்மனுக்கமைந்த பத்தினி. அவள் கைலாச நாதர் கோவிலில் உள்ள பல சிறு கோவில்களில் ஒன்றைக் கட்டியவள்.[23] எனவே, இவள் சிறந்த சைவப் பெண்மணி என்பது நன்கு விளங்கும்.

2. நந்திவர்மன் பட்டத்தரசி சங்கா என்பவள். இவள் பேரழகி; கலைகளில் வல்லவள்; குடிகட்குத் தாய்போன்றவள்; அரசனது நற்பேறே உருவெடுத்தாற் போன்றவள். இவள் இராஷ்டிரகூட அரசமரபினள்; இவள் மகன் 'நிருபதுங்கன்' எனப்பட்டவன்[24] ஆதலின், இவள் இரட்டப் பேரரசனை அமோகவர்ஷ நிருபதுங்கன் I மகள் என்பது கருதப்படுகிறது[25]. அந்த இரட்ட அரசன் காலம் கி. பி. 814-880.[26] அவன் சிறந்த சமணபக்தன்; சமணசமய நூல்செய்தவன்; [27] 'ஸ்யாத்வாத'(Syadvada)

---

[23] S. I. I. 1. p. 23.

[24] Bahur plates of Nirupatunga, Sentamil, Vol. 17, pp. 1—5; Ep. Ind. Vol. 18, pp. 5—15.

[25] M. K. Rao's 'Gangas of Talkad', p. 79.

[26] Altekar's 'Rashtrakutas & thier times', p. 90.

[27] Ibid. p. 89.

சமணத்தைப் பின்பற்றியவன்; திகம்பர சமணரை ஆதரித்தவன்; 'ஜினசேனர்' என்ற சிறந்த சமணகுருவின் ஆசி பெற்றவன்;[28] எனவே, 'சங்கா' சிறந்த சமண பக்தன் மகள் என்பது பெறப்பட்டது; அவள் அக்கை கணவனை நீதிமார்க்கன் என்ற கங்க அரசனும் சிறந்த சமணபக்தன்[28a]. இங்ஙனம் சமண குடும்பத்திற் பிறந்தவள் ஆதலின், சங்கா, தன் கணவனை செய்தாற்போலச் சிவன் கோவில்கட்டுத் தருமம் செய்திலள் போலும்! ஆயின் நந்திவர்மனது மற்றொரு மனைவியான அடிகள் கண்டன் மாறம்பாவை என்பவள் சிறந்த சைவப்பற்றுடையவள்; பல கோவில்கட்கும் பொன் அளித்தவள்.[29] இக்கூறியவாற்றால், சங்கா என்ற சமணப் பெண்மணிதான் பட்டத்தரசியாதலின், அரசனுடன் சிவத்தலங்களைக் காணச் சென்றாள்; அரசன் சிவபக்தியில் ஈடுபட்டவன்; இவள் சிவன் கோவில் அழகில் ஈடுபட்டவள். அதனாற்றான். அரசன் ஆரூர்ப்பெருமானை வணங்கிக் கொண்டிருந்த பொழுது, இவள் கோவில் அழகினைக் கவனித்து வந்தாள் என்பன எண்ண வேண்டுவனவாக வுள்ளன.

சிறந்த சிவபக்தனை நந்திவர்மன் சமண அரசன் மகளை மணந்தது; என்னை? எனின், அஃது அரசியல் தந்திரம் என்க. இங்ஙனமே தமது நாட்டைக் கவர்ந்த பல்லவர்க்கு அஞ்சிச் சைவனை சோழன் சிறந்த சைவப்பற்றுடைய மங்கையர்க்கரசியாரைச் சமணச் சார்புடைய நெடுமாறனுக்கு மணம் செய்வித்ததும் அரசியல் தந்திரம் என்க.

இங்ஙனம் சுந்தரர் கூற்றுகளைக் கொண்டு ஆராயினும், சேக்கிழார் கூற்றுகளைக் கொண்டு ஆராயினும்

---

28 Bombay Gazetteer, Vol. 1, Part 2. pp. 199—201.

28a. M. K. Rao's 'Gangas of Talkad' p. 78.

29 300, 303 of 1901; 16 of 1899.

மிகவும் பொருத்தமாகக் கழற்சிங்கன் என்று கருதத் தக்க நிலையில் இருப்பவன் மூன்றாம் நந்திவர்மன் என்பது புலனாகும். இவனது காலமே ஏறத்தாழச் சுந்தரர் கால மாகலாம் என்பதற்குப் பின்வரும் செய்திகளும் துணைபுரி யக் காணலாம்.

இராச சிம்மனைப்பற்றிய சீனக் குறிப்புகளைக் கொண்டு அவன் ஆட்சி இறுதிக் காலம் கி. பி 720 எனக் கொள்ளப் படுகிறது. மகாவம்சம் கொடுத்துள்ள காலக் கணக்கு கள் தென் இந்தியக் கல்வெட்டுக் கணக்குகளைவிட ஏறத் தாழ 25 ஆண்டுகள் மிகுதிப்படுகின்றன.[30] அது போலச் சீனர் குறித்துள்ள தேதிகட்கும் பல்லவ அரசர் தேதிகட்கும் உள்ள வேறுபாடு இதுகாறும் கண்டறியப் படவில்லை. ஆதலின், நந்திவர்மன் காலம் திட்டமாகக் கி. பி. 840-865 என்று கூறமுடியாது என்பது நினைவில் இருத்துதல் நலம். இந்நினைவுடன் கீழ்வரும் செய்திகளைக் கருத்தூன்றிக் கவனிப்பது நல்லது.

1. சேரமான் பெருமாள் ஆட்சிவிட்டுச் சென்ற காலம் கி. பி. 825 என்பது சேரநாட்டில் கூறப்படும் வழக் காகும்.[31] இவ்வாண்டு தவிர வேறு ஆண்டு குறிப்பிடப் படாமையும் நோக்கத்தக்கது. இவ்வாண்டு கொல்லம் ஆண்டின் தொடக்கமாகும். கொல்லம் ஆண்டிற்கு வேறு காரணம் கூறப்படினும், நெடுநாள் வழக்காகிய இதுவும் ஒரு காரணமாகலாம் என்று கொள்வதில் இழுக்கொன் றும் இல்லை. இவ்வழக்கு உண்மை எனக் கொள்ளின், சேரமான் காலம் ஏறத்தாழக் கி. பி. 825-க்கு அண்மை யது என்னலாம். எனவே, 'சேரமான் தோழர்' ஆகிய சுந்தரர் காலமும் அதுவேயாம். இக்காலம் ஏறத்தாழ நமது நந்திவர்மன் காலத்தோடு ஒத்துவருதல் காண்க.

---

[30] Sen Tamil, Vol. 17, p. 32.

[31] Travancore State Manual.

2. சுந்தரர் தமது வடதிருமுல்லைவாயிற் பதிகத்தில், சிவபிரான் தொண்டைமான்[32] களிற்றை முல்லைக் கொடியாற் கட்டிட்டு, அச்செயலால் தொண்டைமாற்கு எல்லையில்லாத இன்பம் உண்டாக்கினான்[33] என்றொரு நிகழ்ச்சியைக் குறித்துள்ளார். இந்நிகழ்ச்சி இரண்டாம் நந்திவர்மனுடைய (கி. பி. 727-790) பட்டவர்த்தனம் என்ற மதம் பிடித்த யானையைப்பற்றியதாகலாம் என்று கல்வெட்டறிஞர் கருதுகின்றனர்.[34] இஃது உண்மையாயின், இதனைக் குறிக்கும் சுந்தரர் காலம் மூன்றாம் நந்திவர்மன் காலமாகவே இருத்தல் வேண்டும். என்னை? இரண்டாம் நந்திவர்மனை அடுத்துப் பட்டம் பெற்ற சைவன் மூன்றாம் நந்திவர்மனே ஆதலாலும் என்க.

3. சேரமான் சிறந்த கொடைவள்ளல் என்பது 'கார் கொண்ட கொடை' என்று சுந்தரர் குறித்ததலால் அறியப்படும். அச்சேரமானிடம் மதுரைப் பாணபத்திரர் இறைவனது பாசுரத்தைக் காட்டிப் பொருள் பெற்றார். அப்பொழுது மதுரை மன்னனாக இருந்தவன் வரகுணன் என்று திருவிளையாடல் குறிக்கிறது. கல்வெட்டுகளில் இரண்டு வரகுணர் காண்கின்றனர். ஒருவன் காலம் கி.பி. 800-830: மற்றவன் காலம் கி. பி. 862-880. பின்னவனே திருப்புறம்பயத்தில் அபராசித பல்லவனுடன் போரிட்டுத் திருவிடை மருதூரில் தங்கிச் சிவபிரானிடம் அளவிறந்த பக்தி செலுத்தியவன். இவனது பக்திச் சிறப்பை மாணிக்கவாசகர், பட்டினத்தார் முதலியோர்

---

32 'தொண்டைமான், தொண்டை வேந்தன், தொண்டையர் கோன்' என்ற பெயர்கள் பல்லவர் ஆட்சிக் காலத்தில் பல்லவரையே குறித்தன. - நந்திக் கலம்பகம், S. 5, 45, 68.

33 S. 10.

34 S. I. I. 2. 99, V. 7 and foot-note 6.

பாராட்டி யுள்ளனர். இச்சிறிய சிவத்தொண்டனைச் சுந்தரர் பாடாததால், அவர் இவனுக்கு முற்பட்டவராகலாம். ஆகவே, சுந்தரர் ஏறத்தாழ முதல் வரகுணன் (கி. பி. 800-830) காலத்தவராதல் வேண்டும். [35] இக்காலமும் ஏறக்குறைய நந்திவர்மன் காலத்தோடு ஒத்துவருதல் காண்க.

4. அப்பர் 81 ஆண்டுகள் வாழ்ந்தவர் எனக்கொள்வதாலும், அவர் பல ஆண்டுகள் சமணசமயத்தில் ஈடுபட்டிருந்து பிறகே சைவரானார் என்பதனாலும், சம்பந்தர் அவரது முதுமை நோக்கி 'அப்பரே' என அழைத்தமையாலும், அவரது காலம் ஏறத்தாழக் கி. பி. 580-660 எனக் கொள்ளலாம். இக்கால எல்லைக்குள், (1) மகேந்திரன் ஆட்சி (கி. பி. 615-630), (2) நரசிம்மன் ஆட்சியின் பெரும்பகுதி (கி.பி. 630-668), (3) வாதாபிப் படையெடுப்பு (கி. பி. 642), (4) நெடுமாறன் ஆட்சிக்காலத்தின் முற்பகுதி (கி. பி. 640-680) என்பன அடங்கிவிடுகின்றன. வாதாபிப் போருக்குப் பிறகு சிறுத்தொண்டர் செங்காட்டங்குடியிற் குடியேறிச் சிவத் தொண்டில் ஈடுபட்டவர். சம்பந்தர் வயது-16 என்ற கர்ணபரம்பரைக் கூற்றை நம்பினால், சிறுதொண்டரைச் சம்பந்தர் சந்திக்கையில் ஏறத்தாழ 10-வயதுடையராகலாம்; அதன்பிறகே சம்பந்தர் மதுரை சென்று நெடுமாறனைச் சைவனாக்கி மீண்டார். ஆகவே உத்தேசமாகச் சம்பந்தர் சிறுத்தொண்டரைச் சந்தித்த காலம் கி. பி. 650எனக்கொள்ளலாம். கொள்ளின், சம்பந்தர் பிறப்பு ஏறத் தாழக் கி. பி. 640 எனவும், முக்தியடைந்த ஆண்டு ஏறத்தாழக் கி. பி. 656 என்றும் ஆகும். ஆகவே, சம்பந்தர் காலமும் (கி. பி.

---

[35] C. M. R. Chettiar, Sentamil Selvi, Vol. 9, p. 202.

640-656)[36] முற்சொன்ன அப்பர் காலத்துள் அடங்குதல் காண்க.

இராச சிங்கன் (கி. பி. 685-720) காலத்தவர் சுந்தரர் எனக் கொள்ளின், அப்பர் இறுதிக் காலத்திற்கும் (கி.பி. 660) சுந்தரர் காலத்திற்கும் (கி. பி. 685-720) இடையில் ஏறக்குறைய 25 அல்லது 30 ஆண்டுகளே என்னலாம். இது மிகக் குறுகிய இடைக்காலம் என்பது அறியப்படும். சுந்தரர் காலத்தில் பௌத்த-சமண வாதங்கள் நாட்டில் இல்லை; ஏறத்தாழச் சமய உலகில் அமைதியும் சைவசமய வளர்ச்சியும் இருந்தகாலம் அவரது காலம் என்பது அவர் பாக்களால் அறியலாம். இத்தகைய நிலைமை அப்பருக்குப் பின் 30 ஆண்டுகட்குள் உண்டாகிவிட்டதென்று எண்ணுதல் இயற்கை நடைமுறைக்கு மாறுபட்டதாகும்.

5. இராச சிங்கனே கச்சியில் முதன்முதல் கற்றளி எடுத்த பல்லவன். அவன் அசரீரி கேட்டான் என்று கயிலாசநாதர் கோவில் கல்வெட்டு அவனைப் பாராட்டுகின்றது. அதனையே சேக்கிழார் பூசலார் புராணத்திற் குறிப்பிட்டனராகலாமென்று அறிஞர் கருதுகின்றனர்.[37] அஃது உண்மையாயின், இராச சிங்கன் பூசலார் காலத்தவன் ஆகின்றான் அக்காலத்திலே சுந்தரரும் இருந்தனர் எனின், மனக் கோவில் கட்டிய இப்பெரியவரைப் பற்றிச் சுந்தரர் பாடியிருப்பாரன்றோ? இராச சிங்கனைப் புகழ்ந்த சுந்தரர், அவனோடு தொடர்பு கொண்ட அல்லது அவன் காலத்து வாழ்ந்த வியத்தகு அடியாரான பூசலாரை விடுத்துப் பாடாமைக்குக் காரணம் என்ன? மேலும், இராச சிங்கன் கட்டிய கயிலாசநாதர் கோவிற்கு எதிரில்

---

[36] வாதாபிப்போர் நடந்த ஆண்டைக் கொண்டே சம்பந்தர் காலம் உத்தேசமாக இங்ஙனம் கூறவேண்டுவதாக இருக்கிறது என்பது நினைவில் இருத்தத் தக்கது.

[37] R. Gopalan's 'Pallavas of Kanchi', p. 109.

மிக அண்மையில் இருப்பது 'அநேகதங்காவதம்' என்ற சிவன் கோவில். சுந்தரர் அதனைப் பாடியுள்ளார்; ஆயின், அதற்கடுத்துள்ள கயிலாசநாதர் கோவிலைப் பாடியதாகத் தெரியவில்லை. சுந்தரர் இராச சிங்கனைக் 'கழற்சிங்கன்' என்று பாராட்டி யிருப்பாராயின், அவன் கட்டிய வியத்தகு கோவிலைப் பாடாமல் இருந்திருப்பாரோ? இது நன்கு கவனிக்கத் தக்க செய்தியாகும்.

முடிவுரை

இங்ஙனம் பலவகையாக ஆராய்ந்து காணின்.

(1) சுந்தரரும் சேக்கிழாரும் கழற்சிங்கனைப் பற்றிக் கூறிய குறிப்புகள் அனைத்திற்கும் நந்திவர்மனைப் பற்றிய குறிப்புகள் பொருத்தமாகக் காணப்படுகின்றன.

(2) மலையாளக் கூற்றுக் குறிக்கும் காலமும் (கி. பி. 825) தொண்டைமான் யானைபற்றிய செய்தி நிகழ்ந்த காலமும் ஏறத்தாழ நந்திவர்மன் காலத்திற்கு ஒத்து வருகின்றன.

(3) சுந்தரர் இராச சிங்கன் காலத்தவராகக் கொள்ளற்கு அப்பர்க்கும் இராசசிங்கற்கும் உள்ள குறுகிய கால இடையீடும், சுந்தரர் கயிலாசநாதர் கோவிலைப் பாடாமையும் தடைகளாகக் கருதப்படலாம்.

இவை அனைத்தையும் நோக்க, 'இராச சிங்கனே கழற் சிங்கன்' என்ற முடிவுக்குரிய தக்க சான்றுகள் கிடைக்கும் வரை, சுந்தரர் குறித்த கழற்சிங்கரை மூன்றாம் நந்திவர்மன் எனக்கொள்ளலாம்.[38].

---

[38] இந்நூலுள் இம்முடிபே பிற இடங்களிலும் கையாளப் பெறும்.

# IV. நம்பியாண்டார் நம்பி காலமும் திருமுறைத் தொகுப்பும்

## திருமுறைத் தொகுப்பு

### திருமுறை கண்ட புராணம்

இதில் பல பொருந்தாக் கூற்றுகள்,[1] உண்டென்று முதற் பகுதியில் நன்கு விளக்கப்பட்டது. ஆதலின், இங்கு இப்புராணச் செய்திகள் அனைத்தும் கூறாமல், நமது ஆராய்ச்சிக்கு வேண்டும் செய்திகள்மட்டும் எடுத்துக் கொண்டு ஆராய்வோம்.

1. நம்பி இராச ராசன் காலத்தவர்.

2. இராச ராச சோழனிடம் வந்த சிவனடியார்; ஒவ்வொருவரும் தேவாரத்துள் ஒரு பதிகம் ஓதிச்சென்றனர்; (ஒருவரே இரண்டு அல்லது மூன்று தலங்களின் பதிகங்கள் சொல்லக் கூடவில்லை.)

3. இராசராசன், திருமுறைகள் கூத்தப்பிரான்கோவிலில் இருப்பதை நம்பியாண்டார் நம்பி வாயிலாக அறிந்தான்; அவற்றை வெளிப்படுத்தி, நம்பியைக் கொண்டு முறைப்படுத்தினான்.

4. சில ஏடுகள் அழிந்து ஒழிந்தன.

5. நம்பி 11-திருமுறைகளைத் தொகுத்து முடித்தார்.

---

[1] "TheTirumurai-kanda- puranam is necessarily less authentic in its details relating to a much earliar time" K. A. N. Sastry's 'Cholas', Vol. 2, Part 1, p. 531.

## 1. நம்பி இராசராசன் காலத்தவர்

திருமுறை கண்ட புராண ஆசிரியர், 'இராச ராசனே நம்பி காலத்தவன்' என்று தெளிவாகக் கூறி யுள்ளார்.[2] எனினும், நம்பி தாம் பாடிய பல நூல்களில் ஓரிடத்திலேனும் இவனைக் குறிப்பிட்டிருப்பின், இக் கூற்றை உண்மை என்று நம்பலாம். நம்பி, தாம் பாடிய திருத் தொண்டர் திருவந்தாதியில், புகழ்ச்சோழர்,

* * சிங்கள நாடு பொடிபடுத்த

குலமன்னிய புகழ்க் கோகன நாதன் குலமுதலோன்'[3] என்று கூறுதல் நோக்கத்தக்கது. இதனில் வந்துள்ள 'சிங்கள நாடு பொடிபடுத்தவன்' எவனோ அவனே நம்பி காலத்தவன் ஆவன். புலவர் இங்ஙனம் தம் பாக்களில் தம் காலத்தரசனை வைத்துப் பாடுதல் மரபு என்பதை அதே புகழ்ச் சோழர் புராணத்தைப் பாடிய சேக்கிழா ரும், "புகழ்ச் சோழர்,

சென்னிநீ டநபாயன் திருக்குலத்து வழிமுதலோர்"

என்று கூறுவதனாற் கண்டு கொள்க.

இனிச் சிங்களநாடு பொடிபடுத்தியவன் இராச ராசனே என்பது வரலாற்று முடிபு. வழிவழியாக ஈழ நாட்டின் தலைநகரமாக இருந்த அநுராதபுரத்தை இராச ராசன் படைகள் அழித்துவிட்டன, அதற்குப் பதிலா கப் போலநருவா தலைநகரமாக்கப்பட்டது. இராசராசன் மாதோட்டத்தில்[5] பெரிய சிவன் கோவிலைக் கட்டி

---

2 S. I and 6; Tirutthondar Purana Varalaru, S. 24.

3 S. 50.

4 S. 8.

5 மாதோட்ட நன்னகரில் பாலாவியின் கரைமேல் திருக் கேதீச்சரம் - சுந்தரர் பதிகம்.

அதற்குத் தன் பெயர் இட்டான்; மாதோட்டத்திற்கு இராசராசபுரம் என்ற பெயரிட்டான்; ஈழத்தை முழுமடி சோழ மண்டலம் என்றழைத்தான்; தஞ்சை இராச ராசேச் சரத்திற்கு ஈழத்திலிருந்து பணமும் இலுப்பைப் பாலும் கொண்டுவர ஏற்பாடு செய்தான்[6]

நம்பி இராசராசன் காலத்தவன் என்று திருமுறை கண்ட புராணமும் திருத்தொண்டர் புராண வரலாறும் கூறுதற்கு ஏற்பவே, நம்பியும். தம் காலத்தரசன் இராச ராசனே என்பதை அவனது சிங்களநாட்டு வெற்றியைக் குறிப்பிடுமுகத்தாற் புலப்படுத்தும் அருமைப்பாடு கண்டு உணரற்பாலது. எனவே நம்பி இராசராசன் காலத்தவரோ (கி.பி.985-1014) எனக் கோடல் ஏற்புடையதே ஆகும்.[7]

2. இராச ராசனிடம் வந்த சிவனடியார் ஒவ்வொருவரும் ஒரு பதிகமே பாடினர் என்பது உண்மையே.என்னை? ஒருவர் அவர் ஊர்க்கோவிற் பதிகம் ஒன்றையே அறிந் திருந்தனர் ஆதலின் என்க. அக்காலம் திருமுறைகள் தொகுக்கப் பெறாத காலம். அப்பர், சம்பந்தர், சுந்தரர் தம் பாடல் பெற்ற தலங்களில் இருந்து இராச ராசன் அவைக்கு வந்தவர், தம் தலத்தில் அந்நாயன்மார் பாடிய ஒவ்வொரு பதிகமே வழிவழியாகக் கேட்டுப் பாடம் செய் திருத்தல் இயல்பே. அவர் மற்றொரு தலத்துப் பதிகங் களைப் பாட வழியில்லாதிருந்தது போலும்!

---

6 K. A. N. Sastry's 'Cholas', Vol. 1. pp. 206-207; L. Ulaganatha Pillai's 'Rajaraja Chola' p. 35. and also 120 of 1905.

7 இராசராசனுக்கு 'அபயகுல சேகரன்' என்ற பெயர் உண்டு என்று திருமுறைகண்ட புராணம் (செ. 1) கூறுகிறது. அவனது நாணயத்தில் 'இராச ராசன், ......சேகரன்' என்பன காணப்படுகின்றன.

—Vide K. A. N. Sastry's 'Cholas'.

# திருமுறைத் தொகுப்பு

## திருமுறைகள் தொகுத்தவர் நம்பியே

**1.** இராச ராசன் நம்பியைக்கொண்டு திருமுறை வகுத்தான் என்று மேற்சொன்ன இரண்டு புராணங்களும் குறிக்கின்றன. (2) இராச ராசனுக்கு முற்பட்ட சோழர் காலங்களில் திருவல்லம், அல்லூர், திருப்பழுவூர், திருஎறும்பியூர், திருத்தவத்துறை, திருஆவடுதுறை போன்ற சில இடங்களிலேயே திருப்பதிகம் ஓதப்பெற்றது என்பது கல்வெட்டுகளால் தெரிகின்றது.[8] ஆயின், இராசராசற்குப் பின்னும் சேக்கிழார்க்கும் முன்னும் உண்டான கல்வெட்டுகளை ஆராயின் பல கோவில்களில் திருப்பதிகம் பாடப் புதிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன என்பது வெளியாகின்றது. (3) மேலும் இராச ராசன் தான் கட்டிய இராசராசேச்சரத்தில் தேவாரம் பாடிய மூவர் திருமேனிகளையும் வைத்துப் பூசித்தமையும்,[9] முறையாக நாள்தோறும் தேவாரம் ஓத 48 ஓதுவாரை வைத்தமையும்[10] சிந்தித்துப் பார்ப்பின் இராசராசன் காலத்தில் திருமுறைகள் சிறப்புப் பெற்றன என்பது ஐயமற விளங்கும் செய்தியாகும்.

(4) இராச ராசன் காலத்தவரான நம்பி 63 நாயன்மார் வரலாறுகளையும் சுருக்கமாகத் தமது திருத்தொண்டர் திருவந்தாதி[11]யிற் பாடியுள்ளார்; சம்பந்தரைப்பற்றி 6 தனிச் சிறுநூல்கள் பாடியுள்ளார், அவற்றில் சம்பந்தரைப் பற்றிய எல்லாக் குறிப்புகளையும் விளக்கமாகக் குறித்து

---

[8] S. I. I. 3. p. 93, 373 of 1903, 349 of 1918, 129 of 1914, 99 of 1929, 139 of 1925.

[9] S. I. I. 2. 38.

[10] Ibid. 65.

[11] கல்வெட்டறிஞர் இதனைத் 'திருத்தொண்டத் தொகை' எனக் கூறியிருத்தல் தவறாகும். Vide A R E. 1913, p. 99.

விட்டார். அவர் திருநாவுக்கரசரைப் பற்றியும் ஒரு சிறு நூல் பாடியுள்ளார்; அதனில் அப்பர் வாழ்க்கைக் குறிப்புகள் யாவும் தந்துள்ளார். அவர் தம் அந்தாதியில் சுந்தரர் வரலாற்றை 18 இடங்களிற் சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார். இவ்வரலாற்றுக் குறிப்புகளுட் பெரும்பாலன திருமுறைகளைக் கொண்டே கூறத்தக்கவை. ஆதலின், நம்பி திருமுறைகள் ஏழனையும் நன்கு முறைப்படுத்தி ஆராய்ந்தவராதல் வேண்டும். இங்ஙனம் திருமுறைகளை முறைப்படுத்தி ஆராய்ந்த பிறகே - அக்காலத்தில் வழங்கிய நாயன்மார் வரலாற்றுக் குறிப்புகளையும் நன்கு தொகுத்த பிறகே - சேக்கிழாரும் பாராட்டத்தக்க திருத்தொண்டர் திருவந்தாதியைப்[12] பாடி முடித்தாராதல் வேண்டும். இம் முடிபையே திருமுறை கண்ட புராணமும் ஆதரித்தல் காண்க.[13] இவை அனைத்தையும் நோக்க, நம்பி திருமுறைகள் தொகுத்தவர் எனக் கோடல் பொருத்தமேயாகும்.

## திருமுறைகள் தில்லையில் இருந்தனவா?

நம்பி மூவர் திருமுறைகளையும் முறைப்படுத்தினர்; எனின், அவை அவருக்கு எங்ஙனம் கிடைத்தன? என்பது அடுத்த கேள்வியாகும். திருமுறை பாடிய மூவரும் தாம் தாம் சென்ற பதிதோறும் பாடிய பதிகங்களைத் தொகுத்திருப்பார் என்பதில் ஐயமில்லை; பாடல் பெற்ற தலத்தில் அத்தலத்துக்குரிய பதிகம் அல்லது பதிகங்கள் வழக்கில் இருந்திருத்தல் கூடும். ஆயின் எல்லாப் பதிகங்களும் ஓர் இடத்தில் இருப்பதெனின் அவ்விடம் அம்மூவராலும் ஏனைய தளிகள் யாவற்றினும் சிறந்ததெனக் கொண்டாடப் பெற்றதாக இருத்தல் வேண்டும். அம் மூவர் காலத்திலும் அத்தகைய சிறப்புற்ற இடமாகக் கருதப்பெற்றது தில்லையில் உள்ள 'கோயில்' என்ற தனிச்சிறப்புப் பெற்ற கூத்தப் பெருமான்கோவிலே

---

[12] Tiruthondar purana Varalaru, S. 24.

[13] S. 29.

ஆகும். அச்சிறப்பு நோக்கியே முதற்பராந்தகன் தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்து சிறப்பித்தான்.[14] கோச்செங்கணான் முதல் பிற்காலச் சோழர் அனைவருமே கூத்தப் பிரானைத் தம் குலநாயகன்[15] என்று பாராட்டி, கோவிலைப் பொன்மயமாக்கினமைக்கு இலக்கியங்களும் பட்டயங்களும் கல்வெட்டுச் சான்றுகளும் பலவாகும். ஆகவே, திருமுறைகள் தில்லையிற் பாதுகாக்கப் பெற்றன என்று கோடல் பொருத்தமே என்னலாம். ஆயின், அத் திருமுறைகள் யாரால்-எப்பொழுது தில்லையிற் சேர்க்கப்பட்டன என்பது கண்டறியக்கூடவில்லை. எந்தப்பழைய நூலும் இச்செய்தியைக் குறிக்காது விட்டது வியப்பேயாகும்.

### சில பதிகங்கள் அழிந்திருக்கலாம்

'நம்பி திருமுறைகளைப் பரிசோதித்த பொழுது பல ஏடுகள் அழிந்திருந்ததைக் கண்டார். அரசனும் மனம் கவன்றான்' என்று திருமுறைகண்ட புராண ஆசிரியர் கூறியுள்ளார். இன்று கிடைத்துள்ள திருப்பதிகங்களிற் பல அறைகுறையாக இருத்தலே இதற்குப் போதியசான் றாகும்.[16] மேலும், இதனைக் கல்வெட்டுச் சான்று கொண்

---

[14] Vide Tiruvalangadu plates and the Layden grant; See also Kandaradittar's Thiruvisaippa on Koil; Vikrama Cholan Ula, lines 31-32.

[15] Rajarajan Ula, lines 57-58; S. I. I. 2. part 2, pp. 153—154.

[16] *Sambandar Devaram*—(1) 39 Padigams below 11 Standzos each; (2) 10 Padigams below 10 Standzos each; (3) 3 Padigams each of which has no last Standza.

*Appar Devaram*—(1) 15 Padigams have 10 Standzos each; (2) 26 Padigams have less than 9 Standzos in each.

*Sundarar Devaram*—3 Padigams have less than 10 Standzos each. On the whole nearly 96 Padigams are note complete ones.

டும் மெய்ப்பிக்கலாம். திருமுறைகண்ட புராண ஆசிரியர் காலத்தில் சம்பந்தர் பதிகங்களின் தொகை 384 என்பது தெரிகிறது.[17] ஆனால் ஏடுகளிற் காணப்பட்டவை 383. கல்வெட்டு அறிஞர் 1918-ல் திருவிடைவாய் என்ற பாடல் பெற்ற தலத்துக் கோவிலை ஆராய்ந்தபொழுது 11-பாக்களைக் கொண்ட அத்தலத்துப் பதிகம் கல்வெட்டிற் காணப்பட்டது அது சம்பந்தர் பாடல் என்று முடிவு செய்யப்பட்டது.[18] இப்பொழுது அப்பதிகம் சம்பந்தர் தேவாரத்தில் இடம்பெற்று விட்டது.[19] இங்ஙனம் இலக்கியச் சான்றும் கல்வெட்டுச் சான்றும் ஒன்றுபடுதலைக் காண, நம்பி தொகுப்பதற்கு முன் சில பதிகங்களேனும் அழிந்திருத்தல் கூடும் என்று நம்ப இடமுண்டதால் காண்க. இம்மட்டோ?

## சேக்கிழார்க்குப்பின் அழிந்த பதிகங்கள்

சேக்கிழாரால் தமது புராணத்தில், பதிகம் பாடியதாகக் குறிக்கப்பட்டு, இப்பொழுது தேவாரத்தில் இல்லாத பதிகங்கள் சிலவாகும்.[20] இதனைக்காண, சேக்கிழார்க்குப்பின்னும் திருமுறைகண்ட புராண ஆசிரியர்க்கு முன்னும் அழிந்த பதிகங்கள் சில என்னல் தெரியவரும்.

## நம்பி தொகுத்த திருமுறைகள்

நம்பி தொகுத்த திருமுறைகள் எத்தனை? என்பது அடுத்து ஆராயவேண்டும் செய்தியாகும். "இராச ராசன் மூவர் திருமுறைகளையே தேடி அலைந்தான்; அவை தில்லையில் இருப்பதை அறிந்தான்; தில்லைவாழ் அந்தணரைக்

---

17 S. 25.

18 8 of 1918; Sen Tamil, Vol. 17, pp. 169—172.

19 Samajam edition, pp. 625—626.

20 Appar Devaram, Samajam edition, Int. p. 33.

கேட்டான்; அவர்கள் 'தமிழ் வைத்த மூவர் வந்தால் அறை திறக்கும்' என்றனர். அரசன் மூவர் திருவுருவங்களையும் எழுந்தருளச் செய்து அறைமுன் நிறுத்தினான். கதவு திறக்கப்பட்டது. நம்பி, அழிந்தவைபோக எஞ்சி இருந்த ஏடுகளைத் தட்டி முறைப்படுத்தி ஏழு திருமுறைகளாக வகுத்தார்" எனவரும் திருமுறைகண்ட புராணக்கூற்றுப் பொருத்தமாகத் தெரிகிறது. இவை ஏழுமே 'அடங்கல் முறை' எனப்படும். இவற்றைப்பாடிய மூவர் திருமேனிகளையே இராசராசன் தான் கட்டிய பெரிய கோவிலில் எடுப்பித்துப் பூசை செய்தான்.

## எட்டாம் திருமுறை

நம்பி தமது கோவில் திருப்பண்ணியர் விருத்தத்தில்[21] திருவாசகத்தைக் குறிப்பாகவும் திருக்கோவையை வெளிப்படையாகவும் குறித்துள்ளார். 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது பழமொழி. சம்பந்தரைப்பற்றி 6-தனி நூல்களும், அப்பரைப்பற்றி ஒருதனி நூலும் பாடிச் சுந்தரரை 18-பாக்களிற் குறித்த நம்பி, திருவாசகப் புலவரை இவ்வளவு எளிதாகக் குறித்துச் சென்ற காரணம் என்ன? நம்பி மாணிக்கவாசகரைப் பற்றிய கதைகளை நன்கு அறிந்திருப்பாராயின், அவரது திருவாசகத்தை நன்கு படித்திருப்பாராயின், அவரது உள்ளம் உருகியிருக்கும். அவரைப்பற்றி ஒரு சிறு நூலேனும் நம்பி விளக்கமாகப் பாடியிருப்பார். இது நிற்க.

நம்பி திருக்கோவையாரையும் திருவாசகத்தையும் எட்டாந் திருமுறையாகச் சேர்த்திருப்பாராயின். சிவநெறிச் செல்வனான இராசராசன் திருவாசகத்திற்கு உருகாதிருத்தல் இயலுமோ? அவன் மாணிக்கவாசகரது திருவுருவம் எடுப்பித்து வழிபட்டிருப்பான் அல்லனோ? அவனது ஆட்சியிலும் பிற்பட்டு 50 ஆண்டுகள் வரையிலும்

---

21 S. 58.

வெளிப்பட்ட கல்வெட்டுகளில் மாணிக்கவாசகர் பெயரோ, திருவாசகப் பாடல்களோ குறிக்கப்படவில்லை. வீரராசேந்திரன் (கி. பி. 1063-1069) காலமுதலே, திருவெம்பாவை, திருச்சாழல் என்பன சில கோவில்களில் ஓதப்பெற்றன என்பது தெரிகிறது. அவர் திருவுருவமும் பிற்பட்ட காலத்தேதான் எடுப்பிக்கப்பெற்றது.[22] இவை அனைத்தையும் நோக்கத் திருவாசகத்தின் சிறப்பு இராசராசன் காலத்தில் வெளிப்படவில்லை என்பது வெள்ளிடைமலைபோல் விளக்கமாகும். இதுவும் நிற்க.

சுந்தரர் குறித்த தொகையில் திருமூலர் பெயர் உண்டு; மாணிக்க வாசகர் பெயர் இல்லை. ஆதலின், அவர் காலத்தார் பிற்பட்டவர் என்பது நம்பி அறிந்திருத்தல் கூடியதே. அங்ஙனம் இருப்ப, தொகையுள் குறிக்கப்பட்ட திருமூலரது திருமந்திரம், தொகையிற் குறிக்கப்பெறாத திருவாசகத்திற்குப்பின் வைக்கப்பட்டதெனின், அது திருமுறைகளை வகுக்கும் பேராற்றலும் சிவநெறிப்பண்பும் உடைய நம்பியார் பெருந்தகைமைக்கு ஏற்றதாகாது. எனவே, எட்டு முதலிய திருமுறைகள் நம்பியால் தொகுக்கப்பட்டனவா என்பது ஐயப்படவேண்டும் செய்தியே ஆகும். இவ்வையம் மேற்கூறிய கல்வெட்டுச் செய்திகளால் பலப்படல் காண்க.

## ஒன்பதாம் திருமுறை

இதனில் உள்ளவை 9-பேர் பாடிய பதிகங்கள் என்பது கூறப்படுகிறது. அவ்வொன்பதின்மர் காலத்தையும் முறையே ஆராய்வோம்.

### திருமாளிகைத்தேவர்

திருமாளிகைத் தேவர் என்ற ஐயந்தன் (சேந்தனார்) இராச ராசன் காலத்தில் திருவீழிமிழலைக் கோவிலில்

[22] 12 of 1905, 165 of 1906, 421 of 1912 etc.; C. M. R's article, Sen Tamil Selvi, Vol. 9, pp. 317 & 350.

விளக்கு வைத்தார் என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. சேந்தனார் திருவீழிமிழலை, திரு ஆவடுதுறை, திருவிடைக் கழி, தில்லை என்ற நான்கு தலங்களைப் பற்றிப் பாடியுள் ளார். திருமாளிகைத் தேவர் தில்லை ஒன்றைப்பற்றியே நான்கு பாக்கள் பாடியுள்ளார். பின்னவரது நான்காம் பாவில் அவரது பெயர் இல்லை. ஆனால் சேந்தனார் பாட்டின் இறுதியில் 'சேந்தன்' என்ற பெயர் இருக்கின்றது. கருவூர்த் தேவர்போன்ற பிறருடைய பாக்களில் எல்லாம் அவர்கள் பெயர்கள் ஈற்றில் அமைந்துள்ளன. இவற்றை நன்கு நோக்கத் திருமாளிகைத்தேவர் என்றவரும் சேந்த னார் என்றவரும் கல்வெட்டிற் கண்டவாறு ஒருவராகவே இருத்தல் கூடியதே என்று எண்ண இடமுண்டாகின்றது. இக்கருத்தை அறிஞரும்[23] ஆதரித்தல் காண்க. இது பொருந் துமாயின், கல்வெட்டிற் கண்ட அறிஞரே திருவிசைப்பா வில் 8 பாக்களைப் பாடியவராகக் கருதலாம். அவர் இராச ராசன் காலத்தவர் ஆவர்.

## கருவூர்த்தேவர்

இவர் இராச ராசன் தஞ்சையிற் கட்டிய பெரிய கோவில்மீது பாட்டுப்பாடியுள்ளார்; அதன் பிறகு இரா சேந்திரன் புதிதாக உண்டாக்கிய கங்கைகொண்ட சோழ புரத்தில் எடுப்பித்த கங்கை கொண்ட சோழீச்சரத்தின் மீதும் பாடியுள்ளார். எனவே, இவர் இராசராசன்- இராசேந்திரன் காலத்தவராவர். நம்பி திருமுறைகள் வகுத்துப்பின் திருத்தொண்டர் திருவந்தாதி பாடி முடித் தமை இராசராசன் காலத்தில் என்பது திருமுறை கண்ட புராணக் கூற்றாகும்.[24] அந்நிகழ்ச்சிக்குப் பிறகு- இராசராசற்குப் பிறகு-இராசேந்திரன் தன் வடநாட்டு

---

[23] M. Raghava Iyengar's 'Sasana Tamil Kavi charitam', pp. 35-36.

[24] S. 29.

வெற்றிக்குப் பிறகு கங்கை கொண்ட சோழீச்சரம் அமைத்தான். அதன் பிறகே அதன்மீது கருவூர்த்தேவர் பதிகம் பாடினார். எனவே, நம்பி திருமுறைகள் தொகுத்துச் சில ஆண்டுகள் கழிந்த பின்னரே இப்பாடல் பாடப்பட்டது என்பது தெளிவுறப் புலனாகிறதன்றோ? புலனாகவே நம்பி இராசராசன் காலத்திற்றானே இப்பாடலைத் திருமுறையில் சேர்த்திருத்தல் இயலாதன்றோ? [25]

## பூந்துருத்தி-நம்பி காட நம்பி

முதலாம் இராசாதிராசனது 32-ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1050) வெட்டப்பட்ட திருவையாற்றுக் கல்வெட்டு ஒன்றில், 'ஆத்ரேய கோத்திரத்து நம்பி காடநம்பி' என்ற அர்ச்சகர் பெயர் காண்கிறது. இவரைக் குறிக்கும் கல்வெட்டுத் திருப்பூந்துருத்தியை அடுத்த திருவையாற்றிற் காணப்படலால் இவரே திருவிசைப்பா ஆசிரியராகலாம் என்று நினைக்க இடமுண்டு [26] அங்ஙனம் கொள்ளின், இவரது காலம் நம்பிக்குப் பிற்காலம் (ஏறத்தாழ 40 ஆண்டுகள்) பிற்பட்டதாகலாம். இவர், 'சுந்தரரும் சேரமானும் வெள்ளானைமீது மனிதவுடம்புடன் சென்றனர்' என்று பாடியுள்ளார். [26a] ஆயின், நம்பி,சுந்தரர் வெள்ளானைமீதும் சேரமான் குதிரைமீதும் சென்றதாக 3 இடங்களிற் பாடியுள்ளார். [26b] இப்பிற் கூறப்பட்டதே தஞ்சைப் பெரிய கோவில் கர்ப்ப

[25] திருமுறைகண்ட புராணக்கூற்றை அப்படியே நம்பி, நாம் சுட்டிய தவற்றைக் கண்டறியாமல், 'நம்பி இராசராசற்குப் பிற்பட்டவர்' என்றனர் கல்வெட்டறிஞர். —S. I. I. 2. Int. p. 20.

[26] K. A. N. Sastry's 'Cholas' Vol. 2. part 1, pp. 537—538; S. I. I. 2. Int. p. 20.

[26a] His Tiruvisaippa on 'Koyil', S. 5.

[26b] His Andadi, S. 45 & 85, his 'Koyil Tiruppanniyar Virutham' S. 31.

இல்லின் புறச்சுவரில் ஓவியமாகக் காண்கிறது.[26c] ஆயின் முன்சொன்னது இரண்டாம் இராசராசன் கட்டிய தாராசுரத்துக் கோவில்[26d] கர்ப்ப இல்லின் புறச்சுவரில் சிற்பமாகக் காண்கிறது.[26e] இதுவேறு எந்த நூலுள்ளும் கூறப்படவும் இல்லை. இதனால், இக்காடநம்பி இரண்டாம் இராசராசன் (கி. பி. 1146-1173) காலத்தவர் அல்லது பிற்பட்டவர் ஆகலாம். இங்ஙனம் கொள்ளின், இவர் சேக்கிழார்க்கும் பிற்பட்டவர் ஆவர்.

## கண்டராதித்தர்

இவர் முதற்பராந்தக சோழனது மகனார் ஆவர்; கோவில் திருப்பணிகளிற் சிறந்த செம்பியன் மாதேவியார்க்கு மனமொத்த கணவர். இவர் ஆட்சிக் காலம் கி. பி. 949-957.[27]

## வேணாட்டடிகள்

வேணாடு (வேள் + நாடு) என்பது தென்திருவாங்கூர்ச் சீமை. அதனை ஆண்ட அரசர் சிலர் 'வேணாட்டு அடிகள்' எனக் கி. பி. 12-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிற்றாம் முதன் முறை குறிக்கப்படுகின்றனர்.[28] எனவே நம் சைவப்புலவராய 'வேணாட்டடிகள்' அவருள் ஒருவராக இருக்கலாம் என்று நினைத்தல் தவறாகாது. இது கோடற் பாலதாயின், இவர் நம்பிக்கும் பல ஆண்டுகள் பிற்பட்டவராவர்.

## திருவாலி அமுதனார்

இவர் காலம் அறியக்கூடவில்லை.

## புருடோத்தம நம்பி

இவர் காலமும் தெரிய வழியில்லை.

---

26c The Journal of the Annamalai University, Vol. 2, No. 1.

26d J. M. S. Pillai's 'Cholar Koyirpanigal', p. 50.

26e A R E. 1919—'20, Plate V, No. 41.

27 Vol. I, pp. 180, 182 & 183. K. A. N. Sastry's 'Cholas'

28 M. Raghava Iyengar's 'Sasana Tamil Kavi Charitam' p. 37.

## சேதிராயர்

'சேதிராயர்' என்போர் தென் ஆர்க்காட்டுக் கோட்டத்து வடமேற்குப் பகுதியை ஆண்டவர். இவர்தம் தலைநகரம் 'கிளியூர்' என்பது. இவர்கள் 'மலையமான்கள்' எனவும் பட்டனர். இவர்கள் முதற்குலோத்துங்கன் கால முதலே 'சேதிராயர்' என்ற புதிய பட்டத்துடன் கல்வெட்டுகளிற் காண்கின்றனர். குறுநிலமன்னர் பலர் தத்தம் மரபுக்குப் புராண மரபைக்கொள்ள முயன்ற பொழுது இம்மலையமான்கள் தங்களைச் சேதிநாட்டு 'ஹெய்ஹயர்' மரபினர் என்று கூற விரும்பிச் 'சேதிராயர்' என்று கூறிக்கொள்ள முனைந்தனர்.[29] இச்சேதிராயர் என்ற மலையமான்கள் 'சேதிராயர்' என்ற பட்டத்துடன் குலோத்துங்கற்கு முற்பட்ட கல்வெட்டுகளிற் குறிக்கப் பட்டிலர்; ஆயின், முதற்குலோத்துங்கன் காலமுதல் பிற்பட்ட ஒவ்வொரு சோழ அரசன் காலத்துக் கல்வெட்டுகளிலும் தவறாது 'சேதிராயர்' என்று குறிக்கப்பட்டுளர். இதனைக் காண, நம் சிவனடியாரான 'சேதிராயர்' முதற் குலோத்துங்கன் காலத்தவர் அல்லது பிற்பட்ட காலத்தவர் ஆவரே யன்றிக் குலோத்துங்கன் காலத்திற்குச் (கி.பி. 1070-1120) சிறிதும் முற்பட்டவராகார் என்பது திட்டமாகக் கூறலாம். எனவே, இவர் நம்பிக்குப் பல ஆண்டுகள் பிற்பட்டவர் என்று கோடலே முறையாகும்.

இதுகாறும் கூறப்பெற்ற செய்திகளை நோக்க, இவ்வடியவர் பாடல்கள் நம்பியால் தொகுக்கப்படவில்லை; ஒன்பதாம் திருமுறையாகச் சேர்க்கப்படவும் இல்லை என்பதை நன்குணரலாம்.

## பத்தாம் திருமுறை

இது திருமூலர் செய்த திருமந்திரமாகும். திருமூலர் சுந்தரராற் குறிக்கப்பட்ட நாயன்மார்; திருஆவடுதுறையில்

[29] K. A. N. Sastry's 'Cholas' Vol. II, Part I, pp. 54 & 164.

தங்கி இருந்து இந்நூலைச் செய்தார் என்பது சேக்கிழார் கூற்று. இத்தகைய பண்டைய நாயனுர் நூலைப் பின் வைத்து, இவர்க்குப் பல நூற்றுண்டுகள் பிற்பட்டவர் பாக்களை 8, 9-ஆம் திருமுறைகளாக, சைவப்பற்றிலும் தமிழ்ப்புலமையிலும் சிறந்த நம்பி தொகுத்திருப்பார் என்று சாதாரண அறிவுடையாரும் நினையார் அன்ருே?

## பதினோராந் திருமுறை

இதனுட் கூறப்பட்ட பாக்களின் - நூல்களின் ஆசிரியர் (1) சிவபிரான், (2) காரைக்கால் அம்மையார், (3) ஐயடிகள் காடவர்கோன், (4) சேரமான் பெருமாள், (5) நக்கீரதேவ நாயனுர், (6) கல்லாடதேவ நாயனுர், (7) கபில தேவ நாயனுர், (8) பரணதேவ நாயனுர், (9) இளம்பெருமான் அடிகள், (10) அதிரா அடிகள், (11) பட்டினத்துப் பிள்ளையார், (12) நம்பியாண்டார் நம்பி என்போராவர். இவருள், 2,3,4-ஆம் எண்ணுடையவர் சுந்தராற் குறிக்கப்பெற்றவர்.

## நக்கீரதேவ நாயனுர்

இவர் சங்க நூற்களிற் குறிக்கப்பெருத கண்ணப்பர் வரலாற்றை விளக்கிக் கூறலால், சங்க கால நக்கீரரின் வேருனவர். கண்ணப்பரைத் தவிர வேறு நாயன்மார்களைக் குறியாமையால், இவர் காலம் அப்பர்க்கு முற்பட்டதெனலாம்.[30]

## கல்லாடதேவ நாயனுர்

இவர் காலம் கி. பி. 6-ஆம் நூற்றுண்டெனலாம்.[31] இவரே 'கல்லாடம்' செய்தவராயின், இவர் காலம் கி. பி. 10 அல்லது 11-ஆம் நூற்றுண்டு என்னலாம்.

---

[30] K. S. Pillai's 'Tamil Ilakkiya Varalaru' p. 376.

[31] Ibid. p. 376.

என்னை? கல்லாடத்துள் கி. பி. 9-ஆம் நூற்றாண்டினரான மாணிக்கவாசகர்[32] குறிக்கப்பட்டிருத்தலின் என்க.

## கபிலதேவ நாயனார்

இவர் விநாயகர்மீது இரட்டைமணிமாலை பாடியுள்ளார். விநாயகர் வழிபாடு சங்க காலத்தில் இல்லை; ஆயின், சம்பந்தர்க்கு முற்பட்ட காரைக்கால் அம்மையார் விநாயகர்மீது 'இரட்டை மணிமாலை'பாடியுள்ளார். எனவே விநாயகர் வழிபாடு கி. பி. 5 அல்லது 6-ஆம் நூற்றாண்டில் தமிழகம் நுழைந்ததாதல் வேண்டும். ஆகவே இக்கபில தேவர் காலம் கி. பி. ஐந்து அல்லது அதற்குப் பிற்பட்ட நூற்றாண்டாகலாம்.

## பரணதேவ நாயனார்

இவர் பாடியது 'சிவபெருமான் திரு அந்தாதி' என்ற ஒரு நூலாகும். இதன்கண் ஆளப்பட்டுள்ள 'பேச்சு, உளரேல், உன்பால், உன்னை, நீர், ஆனால்'[33] முதலிய சொற்கள் சங்க நூல்களிற் காணப்பெறாதவை. இவையே இப்புலவர் காலம் சங்க காலத்திற்குப் பிற்பட்டதென்பதை வலியுறுத்தப் போதியவை ஆகும்.

## இளம்பெருமான் அடிகள்

'பெருமான் அடிகள்' என்ற வழக்கு முதன் முதல் கி. பி. 8-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டிற்றான் காணப்படுவது. அங்கு அது நந்திவர்ம பல்லவனைக் குறித்துள்ளது.[34]

---

[32] 'The Age of Manikkavashakar', Journal of Sri Venkateswara Oriental Institute, Vol. 4, part 2, (1943), pp. 152—182.

[33] S. 9, 24, 11, 51 etc.,

[34] 17 of 1899.

நம் புலவர் 'இளம் பெருமான் அடிகள்' என வழங்கப் பெற்றமை நோக்க, இவர் இளவரசராக இருக்கலாம் என்று நினைக்க இடமுண்டு. ஆயின் இவர் மரபு என்ன என்பது தெரியவில்லை. இவர் காலம் கி. பி. 8 அல்லது அதற்குப் பிற்பட்ட நூற்றாண்டு ஆகலாம்.

### அதிரா அடிகள்

இவரும் விநாயகர்மீது மும்மணிக்கோவை பாடியவர். ஆதலின், இவர் கி. பி. 5-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் ஆகார்.

### பட்டினத்தடிகள்

இவர் மணிவாசகரையும் இரண்டாம் வரகுணனையும் பாராட்டியுள்ளமையால் பத்தாம் நூற்றாண்டினர் என்னலாம்.

இங்ஙனம் இத்திருமுறையில் இடம்பெற்றுள்ள பெரியார் பலர் நம்பிக்கு முற்பட்டவராதல் காணலாம். நம்பி இவர்களுடைய பாக்களை 11-ஆந்திருமுறையாக வைத்து, இவர்கட்குக் காலத்தாற் பிற்பட்டவர் பாக்களை 9-ஆந்திருமுறையாக வைக்க எங்ஙனம் துணிந்திருப்பார்? ஒருபோதும் துணிந்திரார் என்று நினைக்கலாம்.

### முடிவுரை

இதுகாறும் கூறப்பெற்ற செய்திகளால் 8.9.10.11-ஆந் திருமுறைகளின் முறைவைப்புத் தவறானது என்பது நன்கு தெரிகிறது; அத்துடன் நம்பிக்குப் பிற்பட்டவர் என்று கருதத்தக்கவர் பாடல்களை எல்லாம் நம்பியே தொகுத்தார் என்றது தவறான கூற்று என்பதும் நன்கு வெளியாகிறது. இவ்விரு குற்றங்களையும் சிறந்த சைவப் பற்றும் தமிழ்ப் புலமையும் திருவருள் துணையும் கொண்ட நம்பிமீது சுமத்தல் பொருத்தமற்றது. ஆதலின், நாம்

முன்சொன்னபடி நம்பி தொகுத்தவை முதல் ஏழு திருமுறைகளே என்று கொள்வதே அறிவிற்கும் ஆராய்ச்சிக்கும் பொருந்தியது. பின்னவை நம்பிக்குப் பின்னர் நாளடைவில் திருமுறைகளாகப் பிற்காலத்தவராற் சேர்க்கப்பட்டன எனக் கோடல் நலம். இம்முறைவைப்பை முதன்முதல் கூறியவர், கி. பி. 14-ஆம் நூற்றாண்டினரான உமாபதி சிவத்திற்கு முற்பட்டவரான திருமுறைகண்ட புராண ஆசிரியர் ஆவர் ஆகவே, அவர் காலமாகிய கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் இத்திருமுறை வைப்பு நடைபெற்றதாதல் வேண்டும். 8, 9, 10, 11-ஆந் திருமுறைகள் எப்பொழுது யாரால் முறைப்படுத்தப்பட்டன என்று கூறல் இயலாது! இயலாது!! அவை நம்பிக்குப்பின் கி. பி. 11, 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் நாளடைவில் திருமுறைகளாகச் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும் என்ற முடிபே இங்குப் பொருத்தமாகும்.[35]

•

[35] Prof. K. A. N. Sastry also is of the same opinion-vide his 'Cholas', Vol. 2. part 1, p. 475.

# V. அறுபத்து மூவர் காலம்

(கி. பி. 350—860)

## அப்பர்-சம்பந்தர் காலம்

*சென்ற பகுதியில் சுந்தரர் காலம் ஏறத்தாழக் கி. பி. 840-865 எனக் கண்டோம். அவர் 63 நாயனாரையும் குறிப்பிட்டவராதலின் அவர் காலம் நாயன்மார்கால எல்லையின் கீழ்ப்பகுதி எனக்கொள்ளலாம். ஏனைய நாயன்மாருள் ஐயத்திற்கு இடமின்றி வரலாற்றுத் துணைக்கொண்டு காலம் கூறத்தக்க நிலையில் இருப்பவர் அப்பர் சம்பந்தரே ஆவர். அவர்கள் காலம் கண்டறியப்படின், அவரால் பாடப்பட்ட-அவருக்கு முற்பட்டவரது கீழ்க்கால எல்லை விளங்கும். பிறகு அவரால் குறிக்கப்படாமலும் சுந்தரரால் மட்டுமே குறிக்கப்பட்டு அவர்க்கு முற்பட இருந்த நாயன்மார் காலமும் எளிதில் விளங்கும். ஆதலின், அப்பர்-சம்பந்தர் காலத்தைக் கண்டறிவோம்.*

*முதலில் சமண அரசனாக இருந்து அப்பர்க்குத் தீங்கிழைத்துப் பிறகு சைவனான பல்லவ அரசன் தன்பெயரால் குணதர ஈச்சரம் கட்டினான் என்று சேக்கிழார் கூறுகிறார்.*[1] 'குணபரன்' *என்ற பெயர் கொண்ட பல்லவன் முதலாம் மகேந்திரவர்மனே ஆவன். இப்பெயர் பெரிய புராண ஏடெழுதுவோர் குறையால் 'குணதரன்' என்று எழுதப் பெற்றுவிட்டதுபோலும்! இவனைக்* 'குணபரன்' *என்று வல்லம், திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டுகள்*[2] *குறிக்கின்றன. இவன் எடுத்த குணபர ஈச்சரம் திருவதிகை*

---

1 Thirunavukkarasar Puranam, S. 146.

2 S. I. I. Vol. 2, part 3, No. 72; S. I. I. Vol. 1, Nos. 33 and 34.

யில் இருக்கிறது.[3] மகேந்திரனது திருச்சிமலையில் உள்ள குகைக் கோவில் கல்வெட்டு, இவன் சைவனாக மாறியதைத் தெளிவாகக் குறிக்கின்றது காண்க:—

"குணபரன் என்ற அரசன் லிங்கத்தை வழிபடுபவன். விபக்ஷமார்க்கத்திலிருந்து (தீநெறியினின்று) குணபரனைத் திருப்பிய பேரறிவு, இந்த லிங்கத்தின் அருளால் இவ்வுலகில் நீண்ட காலம் பரவி யிருக்கட்டும்."[4]

இக்கல்வெட்டுச் சான்றுகளையும் அப்பர் வரலாற்றையும் ஆராயின், அப்பர் மகேந்திரவர்மன் காலத்தவர் என்பது தெளிவாகிறது. மகேந்திரன் காலம் கி. பி. 615-630.[5]

சம்பந்தரும் அப்பரும் ஒரேகாலத்தவர் என்பது முதலில் அவர் தேவாரப் பதிகங்களாலும் பின்னர்ச் சேக்கிழார் பெரிய புராணத்தாலும் அறியப்படும் உண்மையாகும். சம்பந்தர் தமது தேவாரத்தில் திருச்செங்காட்டங்குடியில் வாழ்ந்த சிறுத்தொண்டரை 11-பாக்களிற் புகழ்ந்துள்ளார்.[6] அவற்றுள், (1) 'சீர் (புகழ்) உலாம் சிறுத்தொண்டன்' எனவும் (2) 'செருவடிதோள் சிறுத்தொண்டன்.'[7] எனவும் வரும் தொடர்களால், சிறுத்தொண்டர் (போரிற் புகழ் பெற்றவர்) என்பது குறிப்பாகப் பெறப்படுகின்றது. இதற்கு ஏற்பப் பெரியபுராணம், 'இவர், தம் மன்னன் சார்பாகத் தண்டுடன் சென்று பழைய நகரமான

---

[3] நான் இக்கோவிலை நேரிற் சென்று பார்வையிட்டேன்; அழிந்த நிலையில் உள்ளது; Vide, plate, C. K. S. Periyapuranam, Vol. 3, p. 171.

[4] S. I. I. 1, p. 29. No. 33.

[5] Dr. N. Venkataramanayya's article on 'Mahendravarman of Pulikesin II,'

[6] Sambandar Devaram (Samajam edition), pp. 525-6;

[7] Ibid. S. 5, 7.

வாதாவியைத் தூளாக்கினார்[8] என்று கூறுகிறது. இங்ஙனம் வாதாவியைத் தூளாக்கி அங்குத் தூண் நாட்டிய பல்லவன் மேற்சொன்ன மகேந்திரன் மகனை முதலாம் நரசிம்மவர்மன் என்று வேலூர்ப்பாளையப் பட்டயம் பகர்கின்றது.[9] வாதாவி ஏறத்தாழ 13 ஆண்டுகள் சாளுக்கியர் ஆட்சியில் இல்லை என்பதையும், நரசிம்மவர்மன் வெற்றித் தூண் அங்கு இருப்பதையும் நோக்கச்[10] சேக்கிழார் குறித்தபடி அத் 'தொன்னகர் அழிக்கப்பட்டது' என்பது நன்கு புலனாகிறது. இச்செய்தியை இவ்வளவு நுட்பமாகக் கூறும் சேக்கிழார், அவ்வாதாவிப் படையெடுப்பில் தலைமை வகித்த தானைத்தலைவர் பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டர் என்று கூறுதலால், சிறுத்தொண்டர் நரசிம்மவர்மன் காலத்தவர் என்பது நன்கு விளங்குகிறது. மேலும் சிறுத்தொண்டர் காஞ்சியில் வாழ்ந்தவர் என்று தெலுங்கில் உள்ள பசவபுராணம் கூறுதலையும்[11] 'சிறுத்தொண்டன் பணிசெய்ய அமர்ந்த பிரான்'' என்று சம்பந்தர் கூறுதலையும் நோக்க,[11a] சிறுத்தொண்டர் பல்லவர் தானைத் தலைவராக இருந்த பொழுது பல்லவர் கோநகரான காஞ்சியில் வாழ்ந்தார் என்பதும், ஓய்வு பெற்ற பிறகு செங்காட்டங்குடி அடைந்து சிவத்தொண்டில் ஈடுபட்டிருந்தார் என்பதும், அக்காலத்தேதான் சம்பந்தர் அவரைச் செங்காட்டங்குடியிற் சந்தித்தார் என்பதும் விளக்கமாகும். விளங்கவே, சம்பந்தர் சிறுத்தொண்டரைச் சந்தித்த காலம் ஏறத்தாழ வாதாவிப்போருக்கு (கி. பி. 642-க்கு)ப் பிறகு என்னலாம். சம்பந்தரால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாற்றப்பட்ட மாறவர்

---

[8] Siruthondar Puranam, S. 6. [9] S. I. I. 2. No. 98.

[10] Indian Antiquarry, Vol. 9, p. 100.

[11] P. Somanatha Kavi's Basava Puranam. pp. 114-118 (edited by Prabakara Sastry).

[11a] செங்காட்டங்குடிப் பதிகம்.

மன் அரிகேசரி என்ற நெடுமாறன் காலம் கி. பி. 640-680 என்பர் ஆராய்ச்சியாளர்.[12] நரசிம்மவர்மன் காலம் கி. பி. 630-668[13] எனவே, இவ்விரண்டு பேரரசர் காலங்களில் வாழ்ந்தவர் சம்பந்தர் என்பது உறுதிப்படுகின்றது.

அவருள் அப்பர் முதியவராவர். அவர் சைவ நெறியிலிருந்து தக்க வயதில் சமணம் சென்றவர்; சமணத்தில் பல ஆண்டுகள் இருந்து சிறப்புப் பெற்றவர்; பிறகே சைவரானவர். ஆதலின், அவர் சைவராக மாறின பொழுது குறைந்தது 35 அல்லது 40-வயதினராதல் வேண்டும். அவர் 81 ஆண்டளவும் வாழ்ந்தவர் என்ற கர்ணபரம்பரைக்கூற்றை நம்பினால், அவரது காலம் உத்தேசமாகக் கி. பி. 580-660 எனக் கோடல் பொருத்தமாகும். சம்பந்தர் வயது கர்ணபரம்பரைக் கூற்றை நம்பி 16-எனக் கொண்டு, அவர் சிறுத்தொண்டரைச் சந்தித்த போது அவர் வயது சுமார் 10-எனக்கொள்ளின், அவர் காலம் சுமார் கி. பி. 640-656 என்றாகும். இந்தக்காலம் பொருத்தமானதென்பது அவர் வரலாற்று நிகழ்ச்சிகளை முறைப்படுத்திக் காணின் நன்கு விளங்கும்.

## அப்பர்-சம்பந்தர் குறித்த நாயன்மார்

அப்பர் தம் தேவாரப் பதிகங்களில் (1) அப்பூதி அடிகள், (2) சண்டேசர், (3) கோச்செங்கணான், (4) சாக்கிய நாயனார், (5) கண்ணப்பர், (6) கணம்புல்லர், (7) சம்பந்தர், (8) அமர்நீதியார், (9) நமிநந்தி அடிகள், (10) அரிவாள் தாயர் என்ற பதின்மரைப் பாராட்டியுள்ளார்.[14]

---

12 Vide the Author's 'Pallavar Varalaru' 316.

13 Dr. N. Venkataramanayya's article on 'Durvinita and Vikramaditya I.' (Triveni) p. 116.

14 Appar Devaram (Samajam edition), pp. 22, 74, 75, 76, 76, 76, 85, 145, 151, 151.

சம்பந்தர் தம்பதிகங்களில் (1) சண்டீசர், (2) கண்ணப்பர், (3) நமிநந்தி அடிகள், (4) கோச்செங்கணன், (5) தண்டியடிகள், (6) புகழ்த்துணையார், (7) முருக நாயனார், (8) சிறுத்தொண்டர், (9) நீலநக்கர், (10) மங்கையர்க்கரசியார், (11) குலச்சிறையார், (12) திருநீலகண்ட யாழ்ப்பாணர் (13) நெடுமாறர் என்ற பதின்மூவரைப் பாராட்டியுள்ளார்.[15]

## அப்பர்-சம்பந்தர் காலத்து நாயன்மார்

அப்பர்-சம்பந்தர் தேவாரம் கொண்டும் பெரியபுராணம் கொண்டும் காணின், அப்பர்-சம்பந்தர் காலத்து நாயன்மார் இவராவர் :—

(1) அப்பர், (2) சம்பந்தர், (3) அப்பூதி அடிகள், (4) முருக நாயனார், (5) சிறுத்தொண்டர், (6) நீலநக்கர், (7) குலச்சிறையார், (8) மங்கையர்க்கரசியார், (9) நெடுமாறர், (10) குங்கிலியக் கலயர், (11) திருநீலகண்ட யாழ்ப்பாணர்.

## இவரால் பாடப்பெற்ற—இவர்க்கு முற்பட்ட நாயன்மார்

அப்பர்-சம்பந்தராற் பாடப் பெற்றவரும் அவர்கட்குக் காலத்தால் முற்பட்டவருமான நாயன்மார் இவராவர் :—

(1) கோச்செங்கணன், (2) சண்டீசர், (3) கண்ணப்பர், (4) சாக்கியர், (5) கணம்புல்லர், (6) அமர்நீதியார், (7) அரிவாள் தாயர், (8) நமிநந்தி, (9) தண்டியடிகள், (10) புகழ்த்துணையார். அப்பர்-சம்பந்தர் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டு ஆதலின், இப்பதின்மரும் ஏறத்தாழக் கி. பி. 7-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் ஆவர்.

---

[15] Sambandar Devaram (Samajam edition) Int. p. 23.

இவருள் கோச்செங்கணான் கடைச்சங்க இறுதிக் காலத்தவன் என்று கூறப்படுகிறான். இவன் பெயரைப் புறப்பாட்டின் அடிக்குறிப்பு ஒன்று குறிக்கின்றது. ஏனைய நாயன்மார் அப்பெயரளவிலும் புறநானூறு போன்ற சங்க நூற்களிற் குறிக்கப் பெறாமையின், அவர் அனைவரும் சங்க காலத்திற்குப் பிற்பட்டவர் என்றே கொள்ளத்தக்க வர் ஆவர். சங்கத்தின் இறுதிக்காலம் கண்டறியப்படின், இப்பதின்மர் காலத்தின் மேல் எல்லை ஏறத்தாழ இதுவென அறியலாம். ஆதலின், சங்கத்தின் இறுதிக்காலம் யாதெனக் காண்போம்.

## கடைச் சங்கத்தின் இறுதிக் காலம்

புத்ததத்தர் என்ற பௌத்த துறவியார் ஏறத்தாழக் கி.பி. 5-ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்தவர் எனப்படுகிறார்.[16] இவர் சோழ நாட்டினர். இவர் கவேர பட்டினம் (காவிரிப்பூம்பட்டினம்), உரகபுரம் (உறையூர்) பூதமங்கலம், காஞ்சிபுரம் முதலிய நகரங்களில் வாழ்ந்தவர் இவர் காவிரிப்பூம் பட்டினத்துப் பௌத்த விஹாரம் ஒன்றில் தங்கி, 'அபிதம்மாவதாரம்' என்ற நூலை எழுதினவர். இவர் அந்நூலைத் தொடங்கியபொழுதும் எழுதி முடித்தபொழுதும் உலகத்தை[17] அச்சுதவிக் கந்தன் என்ற களப்பிரகுல அரசன் ஆண்டு வந்தான் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். சேர, சோழ, பாண்டியரைச் சிறைப் பிடித்துத் தமிழகத்தை ஆண்ட பேரரசன் என்று சில தமிழ்ச்செய்யுட்கள் 'அச்சுதக் களப்பாளன்' என்ற ஒரு

---

[16] B. C. Law's 'History of Pali Literature' Vol. 2, pp. 384-5 & 389.

[17] 'உலகம்' என்பது 'பெருநாடு' எனப்பொருள்படும். இதனை (1) 'தென்னவனாய் உலகாண்ட செங்கணான்' (2) 'மும்மையால் உலகாண்ட மூர்த்தி', (3) 'கடல் சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்' எனவரும் சுந்தரர் கூற்றால் உணரலாம்.

வனைப் புகழ்கின்றன.[18] இவன் புத்ததத்தர் குறித்த அச்சுதனாகலாம் என்று அறிஞர் கொள்கின்றனர்.[19] (1) இவன் புத்ததத்தரால் குறிக்கப்பட்டுள்ளான்; (2) இவன் பாண்டிய நாட்டையும் பிடித்து ஆண்டவன் என்று மேற்சொன்ன தமிழ்ப்பாக்கள் உணர்த்துகின்றனர்; (3) பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிக்குப் பிறகு, 'அளவரிய அதிராசரை அகலநீக்கி அகலிடத்தைக் களப்ரனெனும் கலியரசன் கைக்கொண்டான்' என்று வேள்விக்குடிப் பட்டயம் பகர்கின்றது. இம்மூன்று குறிப்புகளையும் நோக்கப் புத்ததத்தர் குறித்த அச்சுதவிக்கந்தன் என்ற களப்ர அரசன் ஏறத்தாழக் கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் முதற் பகுதியில் பாண்டியநாடு உட்பட்ட தமிழகத்தைக் கைப்பற்றியிருத்தல் வேண்டும் என்பது தெரிகிறது.

இங்ஙனம் வேற்றரசர்க்கு அடிமைப்பட்ட பாண்டிய நாடு (கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதியிற்றான்) கடுங்கோன் என்ற பாண்டியனால் கைப்பற்றப்பட்டது என்பதும் மேற்சொன்ன வேள்விக்குடிப் பட்டயக் கூற்றாகும். கடுங்கோன் முதலிய பிற்பட்ட பாண்டியர் பெயர்கள் சங்க நூல்களில் இடம்பெறவில்லை; புதிய வேந்தரான களப்பிரரைப் பற்றிய குறிப்பும் அந்நூல்களில் இல்லை. எனவே, கடைச்சங்கத்தின் இறுதிக்காலம் ஏறத்தாழக் கி. பி. நான்காம் நூற்றாண்டு முடிய (சுமார் கி. பி. 400 வரை) எனக் கொள்ளல் பொருத்தமாகும். இக்கால எல்லைக்குள் (1) சங்கச் செய்யுட்கள் இயற்றப்பெற்ற கால

[18] Tamil Navalar Charitai, S. 154—157.

[19] K. A. N. Sastry's 'Cholas', Vol. I, p. 121.

மும், (2) பின்னர் அவை தொகுக்கப்பெற்ற காலமும்[20] அடங்கும்.[21]

## கோச்செங்கணன் சங்ககாலத்தவனா?

இனி 63 நாயன்மாருள் ஒருவனும் அப்பர்க்கு முற்பட்டவனுமான கோச்செங்கணன் சங்க இறுதிக் காலத்தவன் என்று பலர் கூறியுள்ளனர். இதற்கு அவர் சான்றாகக் காட்டத்தக்கவை இரண்டு: (1) 74-ஆம் புறநானூற்றுப் பாட்டின் அடிக்குறிப்பில், "சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு போர்புறத்துப்பொருது பற்றுக்கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையிற் கிடந்து 'தண்ணீர்தா' என்று, பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு" எனவரும் செய்தி. (2) பொய்கையார் சோழன்மீது களவழிபாடிச் சிறைப்பட்ட அரசனை மீட்டார் எனக் களவழி ஏடுகளின் ஈற்றில் எழுதப்பட்டுள்ள செய்தி. இவ்விரண்டு கூற்றுகளையும் ஆராய்வோம்.

1. மேற்சொன்ன 74-ஆம் செய்யுளில் கோச்செங்கணான் என்ற பெயர் இல்லை. அடிக்குறிப்பு, பாடிய புலவன் எழுதியதும் அன்று என்பது 'உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு' என்பதால் அறியப்படும். புறநானூற்றுப் பாடல்

---

[20] சங்கச் செய்யுட்கள் பாடப்பெற்ற காலம் வேறு; அவை தொகுக்கப்பெற்ற காலம் வேறு என்பது பொருத்தமான கருத்தாகும்.—Vide Rao Sahib S. Vaiyapuri Pillai's Article, Karantai Silver Jubilee Volume, pp. 172—186.

[21] பல்லவர் காஞ்சியிற் குடியேறின (about 3rd C. A. D.) காலத்திற்கு முற்பட்டது சங்கச் செய்யுட்கள் பாடப்பட்ட காலம்; கி. பி. 3, 4-ஆம் நூற்றாண்டுகளில் அவை தொகுக்கப்பட்டன எனக் கொள்ளல் தகும்.

களின் கீழ் உள்ள (பிற்காலத்தார் எழுதிய) அடிக்குறிப்புகள் பல இடங்களில் பொருத்தமற்றவை என்பது அறிஞர் நன்கறிந்ததே. சான்றுக்காக ஓர் இடம் குறித்துக்காட்டுவம். புறம் 389-ஆம் செய்யுளில் 'ஆதனுங்கனைப் போல நீ கொடுப்பாயாக' என வரும் தொடரைக் கண்டதும், அஃது உவமையாகக் கூறப்பட்டதென்பதையும் கவனியாமல், 'இஃது ஆதனுங்கனைப் பாடிய பாட்டு' என்று அடிக்குறிப்பு வரையப்பட்டுள்ளது. இங்ஙனம் பிழைபட்ட இடங்கள் பல; பொருத்தமற்ற அடிக்குறிப்புகள் பல. இத்தகைய அடிக்குறிப்புகளில் செங்கணானைக் குறிக்கும் அடிக்குறிப்பும் ஒன்றாகலாம். களவழிப் பாக்களைக் காணக் கோச்செங்கணான் பேரரசன் என்பதும் வீரம் வாய்ந்த பகைவரைக் கொன்றவன்[22] என்பதும், போரில் கொங்கரையும் வஞ்சிக் கோவையும் கொன்றவன்[23] என்பதும், தெரிகின்றன. இவற்றால், இச் சோழனை எதிர்த்த வஞ்சிக்கோ (சேர அரசன்) போரில் கொல்லப்பட்டான் என்பது விளக்கமாகிறது. கணைக்கால் இரும்பொறை பற்றிய பேச்சே களவழியிற் காணப்படவில்லை.

(2) முன் சொன்ன 74-ஆம் செய்யுள் தமிழ் நாவலர் சரிதையில், 'சேரமான் கணைக்கால் இரும்பொறை செங்கணாற் குடவாயிற் கோட்டத்துத் தளைப்பட்டபோது பொய்கையாருக்கு எழுதிவிடுத்த பாட்டு' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படுகிறது. புறநானூற்று அடிக்குறிப்பும் இதுவும் வேறுபடக் காரணம் என்ன?

(3) புறநானூற்று 74-ஆம் செய்யுள் அடிக்குறிப்பு, கணைக்கால் இரும்பொறை சிறைக்கண்ணே இருந்தான் என்பதைக் குறிக்கிறது. ஆயின், தமிழ் நாவலர் சரிதையில் உள்ள செய்யுளின் அடியில், "இது கேட்டுப் பொய்கை

---

[22] S. 6, 16.
[23] S. 14 & 39.

யார் களவழி நாற்பது பாடச் செங்கணான் சிறைவிட்டரசளித்தான்" என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவ்விரு கூற்றுகளும் தம்முள் மாறுபடுதலைக் கண்ட பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், "துஞ்சினான் கணைக்கால் இரும்பொறையாக, சிறைவீடு செய்து அரசளிக்கப்பட்டான் பிறிதொரு சேரன் ஆவன் என்று கொள்ளவேண்டும்"[24] என்று கூறி அமைந்தனர். இங்ஙனம் பேரறிஞரையும் குழப்பத்திற்குட்படுத்தும் பொருத்தமற்ற அடிக்குறிப்புகளைக் கொண்டு கோச்செங்கணான் போன்ற பேரரசர் காலத்தை வரையறுத்தல் வலியுடைத்தாகாது.

2. கோச்செங்கணான் 70 சிவன் கோவில்கள் கட்டினான் என்று திருமங்கையாழ்வார் குறித்துள்ளார்.[25] சங்க காலத்தில் எந்த அரசனும் சிவன் கோவிலோ-திருமால் கோவிலோ கட்டியதற்குச் சான்றில்லை. சிவன் கோவில்கள் பலவாக ஒரே அரசனால் கட்டப்பெற்ற காலம் சைவ வுணர்ச்சிவேகம் மிகுதிப்பட்ட காலமாதல்வேண்டும். சங்க காலத்தில் அத்தகைய உணர்ச்சிவேகம் மிக்கிருந்ததாகக்கூறச் சான்றில்லை. சங்ககாலத் தமிழ் உலகில் பல சமயங்களும் அமைதியாக இருந்தன என்பதே அறியக் கிடக்கிறது. அவ்வமைதியான நிலையில் ஓர் அரசன் 70 கோவில்கள் கட்டல் அசம்பாவிதம். ஆயின் சங்க காலத்திற்குப் பின்னும் அப்பர்க்கு முன்னும் களப்பிரர், பல்லவர் போன்ற வேற்றரசர் இடையீட்டால் பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் மிகுதியாகப் பரவலாயின. சங்ககாலப் பாண்டியன் அளித்த பிரம்மதேய வுரிமையையே அழிக்கக் கூடிய நிலையில் களப்பிரர் சமயக்கொடுமை இருந்தது என்பது வேள்விக்குடிப் பட்டயத்தால் தெரிகிறது. அக்களப்பிரர் காலத்திற்றான் மதுரையில் மூர்த்தி நாயனார் துன்பப்

24 His edition, Kalavali, Int. p.5. (Saiva Siddanta Co.,)

25 Tirunaraiyur Padigam, S. 8.

பட்டார். சோழ நாட்டில் தண்டியடிகள், நமிநந்தி அடிகள் போன்ற சிவனடியார்க்கும் சமணர்க்கும் வாதங்களும் பூசல்களும் நடந்தன. இத்தகைய சமயக் கொடுமைகள் நடந்து, சைவசமய வுணர்ச்சி மிக்குத் தோன்றிய பிற்காலத்தேதான் கோச்செங்கணான் போன்ற அரசர் பல கோயில்கள் கட்டிச் சைவத்தை வளர்க்க முற்பட்டிருத்தல் வேண்டும்.

3. கோச்செங்கணானைப் பற்றித் திருமங்கையாழ்வார் வெளியிடும் கருத்துகள் இவையாகும்:[26]

(1) உலகமாண்ட தென்னாடன்[27] குடகொங்கன் சோழன்.

(2) தென்தமிழன் வடபுலக்கோன்.

(3) கழல் மன்னர் மணிமுடிமேல் காகமேறத் தெய்வ வாள் வலங்கொண்ட சோழன்.

(4) விறல் மன்னர் திறல் அழிய வெம்மாவுய்த்த செங்கணான் கோச்சோழன்.

(5) படை மன்னர் உடல் துணியப் பரிமாவுய்த்த தேராளன் கோச்சோழன்.

இக்குறிப்புகளால் இவன் (1) வலிபொருந்திய அரசர் பலரைப் போரில் கொன்றவன்-வென்றவன் என்பதும், (2) கொங்கு நாடு வென்றவன் என்பதும், (3) சோணாட்டுக்கு வடக்கிருந்த நிலப்பகுதியை (தொண்டை நாட்டை?) வென்றவன் என்பதும், (4) சிறந்த யானைப்படை, குதிரைப் படைகளை உடையவன் என்பதும் தெரிகின்றன.

'கழல் மன்னர், விறல் மன்னர், படை மன்னர்' என்றதால் சோழனை எதிர்த்தவர் மிக்க வலியுடைய பகையரசர் என்பது பெறப்படும். அவர்களைச் செங்கணான் 'தெய்வ

[26] Tirunaraiyur Padigam. S. 6, 5, 3, 4 & 9.

[27] 'தென்னவனாய் உலகாண்ட செங்கணான்' என்ற சுந்தரர் தொடர், இதனுடன் ஒப்பு நோக்கத் தக்கது.

வாள்' கொண்டு வென்றான் என்பதாலும் பகையரசரது பெருவலிமை உய்த்துணரப்படும். சங்க காலத்தில் இத்தகைய மன்னர் பலருடன் செங்கணான் போரிட்டது உண்மையாயின் இப்போரைப்பற்றிச் சில செய்யுட்களேனும் அக்கால நூல்களில் இருந்திருக்கும் அல்லவா? சங்க காலத்தில் தொண்டை நாடும் சோழர் ஆட்சியில் இருந்தமை மணிமேகலையால் அறியலாம். அதற்கும் அப்பாற்பட்ட வடபுலத்தை இவன் வென்றான் எனக்கொள்ளின், அப்பகையரசர் யாவர் எனக் கூறுவது? சுருங்கக் கூறின், (1) இப்போர்களைப்பற்றிய பாக்கள் சங்கநூல்களில் இல்லை; (2) இவன் அரசர் பலரை வென்றவனாகக் காண்கிறான்; (3) சங்க இறுதிக்காலத்தில் இங்ஙனம் ஒரு சோழன் பேரரசனாக இருந்தான் என்று கூறத்தக்க சான்றுகள் இல்லை; (4) இவன் சிவன் கோவில்கள் பல கட்டினவன். இந்நான்கு காரணங்களையும் நடுவுநிலையினின்று ஆராயின், கோச்செங்கணான் சங்ககாலத்திற்குப் பிற்பட்டவனாக இருத்தல் கூடும் என்ற எண்ணமே பலப்படும்.

4. கோச்செங்கணான் தில்லையில் சமயத்தொண்டு செய்தவன் என்பது சேக்கிழார் கூற்று. 'தில்லை' ஒரு சிவத்தலமாகச் சங்கச்செய்யுட்களிற் கூறப்படாமை நோக்கத்தக்கது. அது கோச்செங்கணான் காலத்தில் சிறப்புப் பெற்றது. அவன் அங்கு மறையவரைக் குடியேற்றி மாளிகைகள் பல சமைத்தான்.[28] இங்ஙனம் தில்லை சிவத்தலமாகச் சிறப்புற்றமை சங்க காலத்திற்குப் பிறகே என்பது தவறாகாது.

5. கோச்செங்கணானுடைய தந்தை பெயர் சுபதேவன்; தாயின்பெயர் கமலவதி என்பன என்று சேக்கிழார் கூறியுள்ளார்.[29] இப்பெயர்களைச் சோழப் பேரரசின் முதல்

---

[28] S. 15 & 16.

[29] S. 7.

அமைச்சரான சேக்கிழார் தக்க சான்று கொண்டே கூறி ஞராதல் வேண்டும். இப்பெயர்கள் தூய வடமொழிப் பெயர்கள். இங்ஙனம் சங்ககாலத்து அரச குடும்பத்தினர் வடமொழிப் பெயர்களை வைத்துக் கொண்டனர் என்பதற் குப் போதிய சான்றில்லை. சம்பந்தர் காலத்திற்கு முற் பட்ட-சுமார் 6 அல்லது 5-ஆம் நூற்றாண்டினர் என்று கருதத்தக்க காரைக்கால் அம்மையார்க்குப் புனிதவதி என்பது பெயர். அப்பெயருடன் மேற்சொன்ன கமலவதி என்ற பெயர் ஒப்பு நோக்கத்தக்கது.

இத்தகைய பல காரணங்களால் கோச்செங்கணான் சங்ககாலத்தவன் ஆகான் எனக் கொள்ளலாம். ஆயின், அவன் அப்பர்-சம்பந்தரால் பாடப்பட்டவன். ஆதலின், அவன் காலம் மேற்சொன்ன சங்க காலத்திற்குப் பிற கும் அப்பர்-சம்பந்தர் காலத்திற்கு முன்னும் ஆதல் வேண்டும். அஃதாவது அவன் காலம் ஏறத்தாழக் கி.பி. 400-600-க்கு உட்பட்டது எனக் கூறலாம். இப்பரந்து பட்ட காலத்துள் அவன் வாழ்ந்திருக்கத்தக்க பொருத்த மான காலம் யாதெனக் காண்போம்.

## கோச்செங்கணான் காலம்

வேள்விக்குடிப் பட்டயப்படி சங்க காலத்திற்குப் பிறகு பாண்டியநாடு களப்பிரர் ஆட்சியில் இருந்தது; அக்களப் பிரர் கையிலிருந்தே கடுங்கோன் தன்நாட்டைக் கைப்பற்றி ஞன் என்பது தெரிகிறது; ஆயின், சோழநாடு எவ்வளவு காலம் களப்பிரர் கையில் இருந்தது? கி.பி.5-ஆம் நூற்றாண் டின் முற்பாதியில் புத்ததத்தர் குறித்த அச்சுதனுக்குப் பிறகு சோழநாட்டை யாண்ட களப்பிரர் யார்? என்பன தெரியவில்லை.'கி.பி.5-ஆம் நூற்றாண்டின் இடையில்குமார விஷ்ணு என்ற பல்லவன் காஞ்சியை மீளவும் கைப்பற்றி ஞன்...அவன் மகனான புத்தவர்மன் கடல் போன்ற சோழர்

சேனைக்கு வடவைத் தீப் போன்றவன்' என்று வேலூர்ப் பாளையப் பட்டயம் பகர்கின்றது.[30] கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தவனாகக் கருதப்படும் முதலாம் நந்திவர்மன் விஜய-காஞ்சிபுரத்திலிருந்து பட்டயம் விடுத்துள்ளான். ஏறத்தாழக் கி. பி. 575-ல் சிம்ம விஷ்ணு என்ற பல்லவன் மீட்டும் காஞ்சியைக் கைப்பற்றினான்; சோழர், மழவர், களப்பிரர் முதலியோரை வென்று காவிரிக்கரைவரை பல்லவ நாட்டை விரிவாக்கினான் என்பது வேலூர்ப் பாளையப்பட்டயமும் கசாக்குடிப்பட்டயமும் குறிக்கும் செய்தியாகும்.[31] இக் குறிப்புகளால், முன்சொன்ன குமார விஷ்ணுவுக்குப் பிறகும் சிம்மவிஷ்ணுவுக்கு முன்பும் காஞ்சி பல்லவர் வசம் இல்லாது அடிக்கடி கைம்மாறியதாக நினைக்க இடமுண்டு. அச்சுத விக்கந்தற்குப் பிறகு, சிம்மவிஷ்ணு சோணாட்டை வெல்லும்வரை களப்பிரரே சோணாட்டை ஆண்டனர் என்பதற்குரிய சான்றும் இல்லை. மேற் குறித்த பல்லவர் செய்திகளைக் காண்கையில், சிம்மவிஷ்ணுவுக்கு முற்பட்ட பல்லவர் நிலையாகக் காஞ்சியில் தங்கித் தொண்டமண்டலத்தை ஆண்டாராகத் தெரியவில்லை. கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் இடையில் புத்தவர்மன் கடல் போன்ற சோழர் சேனையோடு போரிடவேண்டியவன் ஆனான்; 6-ஆம் நூற்றாண்டின் இறுதியில் சிம்மவிஷ்ணு சோழரை வென்றான். இவற்றுள் புத்தவர்மன் செய்த போரைக்காணின் அச்சுதற்குப் பிறகு (கி. பி. 5-ஆம் நூற்றாண்டில், சோழர் கடல் போன்ற சேனையை வைத்திருந்தனர்; அவர் பல்லவனுடன் போரிட்டனர் எனபன தெரிகின்றன. இங்ஙனம் கடல்போன்ற சேனையை வைத்துக் கொண்டிருந்த சோழன், சங்க காலத்திற்குப் பிற்பட்டவ

---

[30] Ep. Ind. III. p. 142.

[31] Ibid & Heras's 'Studies in Pallava Historys,' p. 20.

னுகக் கருதத்தக்க கோச்சோழன் ஆகலாம். அவன் பல அரசரை முறியடித்தவன்-பெரிய யானைப்படை, குதிரைப் படைகளை உடையவன் என்பன களவழியாலும் திருமங்கையாழ்வார் பாசுரங்களாலும் தெரிகின்றன. இச் சோழன், தன் நாட்டைப்பற்றிக்கொண்ட களப்பிரரை அடக்கிப் பின் வடபுலத்திருந்த புத்தவர்மனுடன் போரிட்டு வெற்றிகண்டனன் போலும்! இவனை 'வடபுலக் கோன்' என்று திருமங்கையார் குறித்தமை இதுபற்றிப் போலும்! இங்ஙனமாகக் கொள்ளின், கோச்செங்கணன் காலம் புத்தவர்மன் காலமாகிய கி. பி. ஐந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்னலாம். கோச்செங்கணன்மீது பாடப் பெற்ற களவழியின் காலம் ஏறத்தாழக் கி. பி. 450-500 என்ற இராவ்சாஹிப் திரு. S. வையாபுரிப்பிள்ளை அவர்கள் கருத்தும்[32] நமது முடிபிற்கு அரண் செய்தல் இங்கு அறியத்தகும்.

நடுவுநிலையினின்றும் மேற்சொன்ன காரணங்கள் பலவற்றையும் ஆய்ந்து இம்முடிபு கொள்ளப்படின், இக் கோச் சோழனை அடுத்து,மேற்சொன்ன இடைக்காலத்தில் இருந்தவராகப் (பெரியபுராணம் கூறும்) புகழ்ச் சோழரை எடுத்துக்கொள்ளலாம். இவர் பெயர் சங்கநூல்களில் இல்லாததாலும் சிம்மவிஷ்ணுவுக்குப் பிறகு பல்லவர் காலத்தில் இத்தகைய சோழப் பேரரசர் இருக்க முடியாமையாலும், இந்த இடைக்காலமே இவர் வாழ்ந்த காலம் எனக் கோடல் பெரிதும் பொருத்தமே ஆகும்.[33] அச்சுதன்போன்ற களப்பிரப் பேரரசனும், கோச்செங்கணன், புகழ்ச்சோழர் போன்ற சோழப்பேரரசரும் கி.பி. 5,6-ஆம்

---

[32] Vide his Tirikadukam & Sirupanjamulam, University Publication. pp. 10—11 & 75.

[33] C. V. N. Iyer's 'Oarigin & Development of Saivism in S. India', p. 183.

நூற்றாண்டுகளில் இருந்தமையாற் போலும் பல்லவர் சோழ நாட்டைக் கைப்பற்றக் கூடவில்லை!

கோச்செங்கணான், புகழ்ச்சோழர், களப்பிர அரசராகிய கூற்றுவ நாயனார்[34] இவர்களை இவ்விடைப்பட்ட காலத்தவராகக் (சுமார் கி.பி. 450-500) கொள்ளின், 'தென் இந்திய வரலாற்றில் 'இருண்ட பாகம்' எனப்பட்ட காலத்தின் ஒரு பகுதி வெளிச்சமாயிற்றெனக் கொள்ளலாம். 'இவ்விருண்ட காலம்-பல்லவர் காஞ்சியைத் துறந்து தெலுங்கு நாட்டில் வாழ்ந்த காலம்-சோழர் இடையீட்டுக் காலமாக இருத்தல் வேண்டும்' என்று வெங்கையா போன்ற கல்வெட்டறிஞர் கொண்ட கருத்தில்[35] ஓரளவு உண்மையுண்டு என்பதும் இதனால் உறுதிப்படும்.

இதுகாறும் செய்த ஆராய்ச்சியால், அப்பர்க்கு முற்பட்ட-முன்சொன்ன பதின்மருள் கோச்செங்கணான் காலம் கி.பி.5-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி யாகலாம் எனப்பட்டது. ஏனைய ஒன்பதின்மர் காலம் வரலாறு கொண்டு துணிய முடியாமையாலும் அவருட் சிலரேனும் சங்கத்திற்குப் பிறரும் கோச்சோழர்க்கு முன்னும் இருந்திருக்கலாம் ஆதலாலும் பொதுவாக அவ்வொன்பதின்மர்காலம் கி. பி. 5, 6-ஆம் நூற்றாண்டுகள் எனக்கோடலே பொருந்துவதாகும்.

## அப்பர்-சம்பந்தர்க்கு முற்பட்ட வரலாறு கண்ட நாயன்மார்

1. புகழ்ச் சோழர்: இவர் முன் சொன்ன 5,6-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவராவர் என்பது முன்பே கூறப்பட்டது.

---

[34] Ibid. pp. 180—181.

[35] I. A. 1908, p. 284.

2. புகழ்ச் சோழரது யானையைக் கொன்று, அவரால் மதிக்கப்பெற்ற எறிபத்த நாயனார்[36] காலமும் முற்சொன்னதே ஆகும்.

3. கூற்றுவ நாயனார்: இவர் களப்பிர மன்னர்; பல நாடுகளை வென்றவர். இவர் தமக்கு முடிசூட்டுமாறு தில்லை வாழ் அந்தணரை வேண்ட, அவர்கள், 'சோழர்க்கன்றிப் பிறருக்கு முடிசூட்டோம்' எனக்கூறி மறுத்து, அவரது சீற்றத்துக்கு அஞ்சிச் சேரநாடு புக்கனர் என்று சேக்கிழார் கூறல் கவனிக்கத்தக்கது.[37] இதனால் தில்லைவாழ் அந்தணர் கூற்றுவ நாயனார்க்கு அஞ்சத்தக்க நிலையில் சோழர் வலியற்றிருந்தனர் என்பது தெளிவாகிறது. இந்நிலை மேற்சொன்ன 5,6-ஆம் நூற்றாண்டுகளில் இருந்ததெனக் கோடலே தக்கது.[38]

4. மூர்த்தி நாயனார்: இவர் மதுரை வணிகர்; சிறந்த சிவபக்தர்; சிவனார்க்குச் சந்தனம் அரைத்துக் கொடுத்தவர். இவர் காலத்தில் பாண்டிய நாட்டைக் கவர்ந்த களப்பிர அரசன் புறச்சமயச் சார்புடையவன். அவன் இவர்க்குச் சந்தனம் கிடைக்காதபடி செய்தான்.[39] இக்குறிப்பால் இவர் நாம் முன்சொன்ன அச்சுதன் காலத்தவர் என்பது புலனாகிறது.

5. ஐயடிகள் காடவர்கோன்: இவர் சிறந்த வடமொழிப் புலவர்; தமிழ்ப் புலவர்; மகனிடம் அரசை ஒப்பித்து, சிவத்தளியாத்திரை செய்து, தலத்துக்கொரு வெண்பா பாடினவர்.[40] இவர் வடமொழிப் புராணத்தில்

---

36 Eripattar Puranam, S. 24-25 & 37-48.

37 Kurttruva Nayanar Puranam, S. 2—7.

38 C. V. N. Iyer's 'Origian & D. of Saivism in S. India, pp. 180—181.

39 Murthi Nayanar Puranam, S. 11—17.

40 S. 2—6.

'சிம்ஹாங்க, பதசிம்ஹா, பஞ்சபதசிம்ஹா, (Simhanka, Padasimha, Panchapadasimha) என்ற பெயர்களை உடையவராகக் காண்கிறார். மேலும் இவர் மகன் 'பீமவர்மன்' என்று அந்நூல் கூறுகிறது. பல்லவர் பட்டியலிற் பீமவர்மன், சிம்மவிஷ்ணு இவர்தம் தந்தை மூன்றும் சிம்மவர்மன் என்பது காண்கிறது. எனவே, இவர் மூன்றும் சிம்மவர்மனாகலாம் என்பது அறிஞர் கருத்து.[41] அது பொருத்தமாயின், சிம்மவிஷ்ணுவின் (கி. பி. 575-615) தந்தையாரான இவர் காலம் ஏறத்தாழக் கி. பி 550-575 என்னலாம்.

6. திருமூலர்: இவர் எழுதியுள்ள திருமந்திரத்தைக் கண்டு ஆராயின், இவரது காலம் ஏறக்குறையக் கி. பி. 300-500 என்பர் ஆராய்ச்சியாளர்.[42]

7. காரைக்கால் அம்மையார்: 'இவர் தலையால் நடந்த பதியாதலின், திருவாலங்காட்டைச் சம்பந்தர் மிதிக்க அஞ்சி, ஊரின் வெளிப்புறத்தில் தங்கினார்[43] என்று சேக்கிழார் கூறலும், அதற்கு ஏற்பச் சம்பந்தர் பாடிய திருவாலங்காட்டுப் பதிகத்தின் முதற்செய்யுள் அதனைக் குறிப்பாக உணர்த்தலும்[44] நோக்க, இவ்வம்மையார்

---

41 Mysore Annual Archaeological Report, 1925, pp. 9—12.

42 C. V. N. Iyer's 'Origin & D. of ....... S. India'. pp. 206—224.

43 Sambandar Puranam, S. 1008.

44 Vide The Proceedings of Meikandan Tirumurai Manadu and Tirumuraittirunal (Published by Dharumapura Adinam), pp. 229—230.

சம்பந்தர்க்கு முற்பட்டவர் என்பது தெரிகிறது. எனவே, இவரும் கி பி. 7-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்னலாம்.

இதுகாறும் கூறியவாற்றல், அப்பர்-சம்பந்தராற் பாடப்பெற்ற பதின்மரும், வரலாறு கொண்டு அவர்க்கு முற்பட்டவராகக் கொள்ளப்பெற்ற எழுவரும் கி. பி. 5, 6-ஆம் நூற்றாண்டினர் என்பது நன்கு விளங்கும்.

8. சுந்தரர் காலத்து நாயன்மார்: சுந்தரர் தேவாரத்தாலும் நம்பியின் அந்தாதியாலும் தாம் கேட்டறிந்த செய்திகளாலும் சுந்தரர் காலத்தவர் 13 பேர் என்று சேக்கிழார் கூறினர். அவராவர்:—(1) சுந்தரர், (2) அவர் தந்தையார் சடையனர், (3) தாயார் இசைஞானியார், (4) அவரை வளர்த்த நரசிங்க முனையரையர், (5) அவரைத் தொகை பாடச்செய்த விறல் மிண்ட நாயனர், (6) சேரமான் பெருமாள், (7) ஏயர்கோன் கலிக்காமர், (8) அவர் மாமனரான மானக்கஞ்சாறர். (9) கழற் சிங்கர், (10) செருத்துணை நாயனர், (11) பெருமிழலைக் குறும்பர், (12) கோட்புலியார், (13) சோமாசி மாறர் என்பவர்.

இதுகாறும் கூறியவற்றல்,

1. அப்பர்-சம்பந்தர்க்கு முற்பட்டவர் (கி. பி. 400-600) 17 பேர்;

2. அப்பர்-சம்பந்தர் காலத்தவர் (கி. பி. 600-660) 11 பேர்;

3. சுந்தரர் காலத்தவர் (கி. பி. 840-865) 13 பேர் என்பது விளங்கும். விளங்கவே, இந்த நாயன்மார் 41

பேர் நீங்கலாகவுள்ள ஏனைய 22-பேரும்[45] அப்பர் சம்பந்தர் காலத்திற்கும் சுந்தரர் காலத்திற்கும் இடைப்பட்ட (சுமார் கி. பி. 660-840) காலத்தினர் என்பது அறியலாம். இவ்விவரங்களைப் பின்வரும் பட்டியலிற் காண்க.

[45] இந்த 22 பேரும் அப்பர்-சம்பந்தரால் குறிக்கப்பெறாதவரும் வரலாற்றுத் துணைகொண்டு உணரப்படமுடியாதவருமாவர். ஆதலின் இக்காலம் தரப்பட்டது.

## அப்பர்-சம்பந்தர்க்கு முற்பட்ட நாயன்மார் (கி. பி. 300-600)

1 கோச்செங்கட் சோழர்
2 புகழ்ச் சோழர்
3 சண்டேசுவரர்
4 கண்ணப்பர்
5 காரைக்கால் அம்மையார்
6 திருமூலர்
7 மூர்த்தி நாயனார்
8 கூற்றுவ நாயனார்
9 ஐயடிகள் காடவர்கோன்
10 கணம் புல்லர்
11 அரிவாள் தாயர்
12 நமிநந்தி அடிகள்
13 தண்டி அடிகள்
14 சாக்கிய நாயனார்
15 எறிபத்தர்
16 அமர்நீதி நாயனார்
17 புகழ்த்துணை நாயனார்

## அப்பர்-சம்பந்தர் காலத்து நாயன்மார் (கி. பி. 600-660)

1 திருநாவுக்கரசர்
2 திருஞான சம்பந்தர்
3 சிறுத்தொண்டர்
4 குங்குலியக் கலயர்
5 முருக நாயனார்
6 திருநீலகண்ட யாழ்ப்பாணர்
7 திருநீல நக்கர்
8 அப்பூதி அடிகள்
8 நெடுமாறர்
10 மங்கையர்க்கரசியார்
11 குலச்சிறையார்

## அப்பர், சம்பந்தர் காலத்திற்கும், சுந்தரர் காலத்திற்கும் இடைப்பட்ட அடியார்கள்
(கி. பி. 660-840)

1 பூசலார் நாயனார்
2 காரி ,,
3 அதிபத்த ,,
4 கலிக்கம்ப ,,
5 கலிய ,,
6 சத்தி ,,
7 வாயிலார் ,,
8 முனையடுவார் ,,
9 இடங்கழி ,,
10 இயற்பகை ,,
11 நேச ,,
12 இளையான்குடிமாற நாயனார்
13 மெய்ப்பொருள் ,,
14 திருநாளைப்போவார் ,,
15 ஏனாதிநாத ,,
16 ஆனாய ,,

## சுந்தரர் காலத்து நாயன்மார்
(கி. பி. 840-865)

1 சுந்தரர்
2 சடையர்
3 இசை ஞானியார்
4 நரசிங்க முனையரையர்
5 விறல் மிண்டர்
6 கோட்புலியார்
7 ஏயர்கோன்-கலிக்காமர்
8 மானக்கஞ்சாறர்
9 பெருமிழலைக் குறும்பர்
10 சோமாசி மாறர்
11 சேரமான் பெருமான்
12 கழற்சிங்கர்
13 செருத்துணையார்

## காலவரம்பைக் கடந்த தொகை அடியார்

1 தில்லைவாழ் அந்தணர்

17 உருத்திர பசுபதி நாயனா
18 திருககுறிப்புத் தொண்ட ,,
19 மூர்க்க நாயனர்
20 சிறப்புலி ,,
22 நணநாத ,,
22 திரு நீலகண்ட ,,

2 பொய்யடிமை இல்லாத புலவர்
3 பததராய்ப்பணிவார்
4 பரமனையே பாடுவார்
5 சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்
9 திரு ஆரூர்ப் பிறந்தார்
7 முப்போதும் திருமேனி தீண்டுவார்
8 முழுநீறு பூசிய முனிவர்
9 அப்பாலும் அடிச்சார்ந்தார்

# VI. பல்லவர் காலச் சைவசமய நிலைமை

## (கி. பி 400-900)[1]

### முன்னுரை

சென்ற நான்கு பகுதிகளிலும் செய்த ஆராய்ச்சியின் பயனாய்ப் போந்த முடிபுகளாவன:-

1. நாயன்மார் காலம் ஏறத்தாழக் கி. பி. 400-865.
2. சுந்தரர் காலம் கி. பி. 840-865.
3. நம்பியாண்டார் நம்பி காலம் கி. பி. 985-1014.
4. சேக்கிழார் பெரிய புராணம் பாடிய காலம் கி. பி. 1113-1150.

இனிக் கி. பி. 400 முதல் சேக்கிழார் காலத்தவனான இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சித் தொடக்கம் வரை உண்டான சைவசமய வளர்ச்சியை ஆராய்ந்தறிதல் வேண்டும். அங்ஙனம் அறியின், அவ்வளர்ச்சி எங்ஙனம் பெரிய புராணத்திற்கு மூலமாக அமைந்தது என்பதை உணரலாம். இப்பரந்த காலம் (கி. பி. 350-1113) ஏறத்தாழ 700 ஆண்டுகள் ஆகும். இக்காலம் (1) களப்பிரர் இடையீட்டுக் காலம் (சுமார் கி. பி 400-600),

[1] சுமார் கி. பி. 865-உடன் சுந்தரர் காலம் முடிவதாகக் கொண்டால், அதற்குப் பிற்பட்ட பல்லவர் காலம் ஏறத்தாழ 35 ஆண்டுகள் ஆகும். அதற்கு வேறு தலைப்புக் கொடாது அதனையும் நாயன்மார் காலமாகவே இங்குக் கொள்ளப்பட்டது.

பல்லவர் காலம் (சுமார் கி. பி. 400[2]-900), (3) பிற்காலச் சோழர் காலம் (சுமார் கி. பி. 900-1113) என மூவகையாக் கூறலாம் இவற்றுள் முதல் இரண்டு காலங்களே 63 நாயன்மார்கள் வாழ்ந்த காலமாகும். அவர் காலத்துச் சைவசமய வளர்ச்சியை இப்பகுதியிற் காணலாம்.

## 1. களப்பிரர் இடையீட்டுக் காலம்
## (கி. பி. 400-600)

இக்காலத்து நாயன்மார் யார் என்பது முன்பே கூறப்பட்டது. இவர்கள் காலத்தில் விளக்க முற்றிருந்த கோவில்கள் இவை என்பது இவர்கள் வரலாற்றால் விளக்கமாகின்றது. அவையாவன:—உறையூர், கருவூர், சேய்ஞலூர், ஆப்பாடி, காளத்தி ஆலங்காடு, ஆவடுதுறை ஆலவாய், தில்லை, ஆரூர், தண்டலை, காஞ்சி, பழையாறை முதலிய பகுதிகளில் இருந்த சிவன் கோவில்கள். இவையன்றிச் சாய்க்காடு, நன்னிலம் முதலிய 70 இடங்களில் கோச்செங்கணன் கட்டிய மாடக் கோவில்கள் வேறுகும். இவை அனைத்தும் கோச்செங்கணன் போன்ற பேரரசரால் கவனிக்கப்பட்டமையின், சிறந்த நிலையில் இருந்தனவாதல் வேண்டும்.

## 2. பல்லவர் காலம்
## (கி. பி. 400-900)

கோச்செங்கணன், புகழ்ச்சோழர் இவர்கட்குப் பிறகு அப்பர் சைவ சமயத்திற்குத் திரும்பி வரும்வரை

---

[2] பல்லவர் காஞ்சியைக் கைப்பற்றியது கி. பி. 400-க்கு முன்னமே ஆயினும், சைவத் தொண்டு செய்த முதற் பல்லவன் கந்த சிஷ்யனே (கி. பி. 400-436) ஆதலின், சைவசமய வளர்ச்சிக்காக, இவன் காலமே பல்லவர்கால முதலாகக் கொள்ளப்பட்டது.

சைவசமயம் ஓரளவு வளர்ச்சி பெற்றதாயினும், சமணத் தாற் பெரிதும் தாக்குண்டுவந்தது என்பது தண்டியார், நமிநந்தி இவர்தம் வரலாறுகளாலும், அப்பரே சைவத்தி லிருந்து சமணத்திற்கு மாறிப் பல ஆண்டுகள் இருந்தார் என்பதாலும், நெடுமாறன் சமணனாக இருந்தான் என்ப தாலும் நன்கு அறியலாம். எனினும், இங்ஙிலை பல்லவ நாட்டில் அப்பர் முயற்சியாலும், பாண்டிய நாட்டில் சம்பந்தர் முயற்சியாலும் மாறித் தமிழகம் சைவ நெறியில் தழைத்த காலமும் பல்லவர் காலமே ஆகும். ஆகவே அக் காலத்துப் பல்லவ அரசராலும் பொது மக்களாலும் சிற் றரசராலும் சைவம் எங்ஙனம் வளர்க்கப்பட்டது என் பதைக் காண்பது இன்றியமையாததாகும்.

1. ஏறக்குறையக் கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த கந்த சிஷ்யன் என்ற பல்லவன் திருக்கழுக்குன்றம் சிவன் கோவிற்கு நில தானம் செய்தான்.[3]

2. ஐயடிகள் காடவர்கோன் என்று கருதப்படும் மூன் றும் சிம்மவர்மன்[4] சிவத்தல யாத்திரை செய்து தலம் ஒன்றுக்கு ஒரு வெண்பா வீதம் பாடினுர். அந்நூல் 'க்ஷேத்திர வெண்பா' எனப்படும். இப்பொழுது அதன் கண் இருப்பவை 24 வெண்பாக்களே ஆகும்; எஞ்சியவை அழிந்துவிட்டன. அச்சிதைந்த நூல் பதினொராந் திரு முறையிற் சேர்க்கப்பட்டுள்ளமை முன்பே கூறப்பட்ட செய்தியாகும். அந்நூலுட் குறிக்கப்பெற்ற சிவத்தலங் கள் பின்வருவனவாகும். அவை: (1) தில்லை, (2) குடந்தை, (3) ஐயாறு, (4) ஆரூர், (5) திருத்துருத்தி (குற்றாலம், தஞ் சைக் கோட்டம்). (6) திருக்கோடிகா, (7) பாண்ட வாய்த் தென் இடைவாய்,[5] (8) திருநெடுங்களம், (9) குறித்தண்

---

3 167 of 1894.

4 See Foot-note No. 41 in V Chept.

5 'பாண்டவாய்' என்ற ஆற்றின் தென்கரையில் உள்ள 'இடைவாய்' என்ற தலம்.

டலை, (10) ஆனைக்கா, (11) மயிலாப்பூர், (12) உஞ்சேனை மாகாளம்,[6] (13) வளைகுளம், (14) சாய்க்காடு, (15) திருப்பாச்சிலாச்சிராமம், (16) சிராமலை, (17) திரு மழபாடி, (18) திரு ஆப்பாடி, (19) காஞ்சிபுரம், (20) திருப்பனந்தாள், (21) ஒற்றியூர், (22) திருக்கடவூர், (23) திருக்கடவூர் மயானம் என்பன.

3. மகேந்திரவர்மன் (கி. பி. 615-630): இவன், தான் சைவன் ஆனதைத் திருச்சிக் குகைக் கோவில் கல்வெட்டால் வெளிப்படுத்தியுள்ளான்; தன்னைக் 'குணபரன்' என்பதையும் கல்வெட்டுகளால் புலப்படுத்திவிட்டான்.[7] இவன் சிவனுக்காகச் சீயமங்கலம், பல்லாவரம், வல்லம், தளவானூர், திருக்கழுக் குன்றம், திருச்சிராப்பள்ளி என்னும் இடங்களில் கோவில்களைக் குடைந்துள்ளான்; மண்டபப்பட்டில் மும்மூர்த்தி கோவிலும் அமைத்தான்.[8] இவன் காஞ்சி ஏகாம்பர நாதர் கோவில் மண்டபம் ஒன்று கட்டினன். இவனே தமிழகத்தில் முதன் முதல் கற்கோவில் கண்ட காவலன். இவனுக்கு முற்பட்ட கோவில்கள் யாவும் செங்கல், மரம், உலோகம் சுண்ணாம்பு இவற்றைக்கொண்டு கட்டப்பட்டவை. இச்செய்தியை இவனது மண்டபப்பட்டுக் கல்வெட்டே விளக்கமாக உரைக்கின்றது.[10] மகேந்திரவர்மன் இங்ஙனம் கோவில்களை அமைப்பதில் வல்லவனாக இருந்ததுபோலவே இசையிலும் சிறந்த புலவனாக இருந்தான் என்பது இவனுடைய திருமெய்யம், குடுமியாமலை, மாமண்டூர்க் கல்

6 'உஜ்ஜைனி' நகரத்தில் உள்ள 'மகாகாளம்' என்ற சிவனார் கோவில். இது காளிதாசரால் சிறப்பிக்கப்பெற்ற பெருமை உடையது.

7 A. R. E. 1938, pp. 78-79.

8 Vide the Author's 'Pallavar Varalaru' p-89.

9 82 of 1921.

10 Longhurst's 'The Pallavar Architecture', Part I, pp. 22-23; Ep. India, Vol. 17, p. 7.

வெட்டுகளால் நன்குணரப்படுகிறது.[11] இவனது நடனக கலை அறிவைச் சித்தன்னவாசல் நடிகையர் ஓவியங்கள் நன்கு விளக்குகின்றன.

## அப்பர்-சம்பந்தர் திருமுறைகள் உணர்த்துவன (கி. பி. 580-650):

4. இவன் காலத்தும் இவன் மகனான நரசிம்மவர்மன் காலத்தும் வாழ்ந்த அப்பர், சம்பந்தர் திருமுறைகளை ஆராயின், அப்பர் பாடிய தலங்கள் ஏறக்குறைய 126;[12] சம்பந்தர் பாடியவை ஏறத்தாழ 219[13] என்பது தெரிகிறது. இவையேயன்றி வைப்புத் தலங்களாக அப்பரால் குறிக்கப் பட்டவை ஏறக்குறைய 60க்கு மேற்பட்டுள்ளன.[14] இவற்றை நோக்கி, அப்பர்-சம்பந்தர் காலத்தில் இத் தமிழ்நாட்டில் ஏறக்குறைய 300 சிவன் கோவில்கள் இருந் தன என்று ஒருவாறு கூற இடமுண்டாகிறது. இக் கோவில்களுள் பலவற்றுள் இசை-நடனம் வழக்கிலிருந்தன என்பது அப்பர்-சம்பந்தரால் குறிக்கப்பட்டுள்ளன.[15]

---

11 Dr. C. Minakshi's 'Administration and Social Life under the Pallavas' pp. 248-49.

12 Appar Devaram (S. edition), p. 529.

13 Sambandar Devaram (S. edition), p. 637.

14 Appar Devaram (S. edition) pp. 258-9, 313, 325-6, 337, 366, 420 1, 461-2.

15 Appar Devaram pp. இசை - 36, 41, 50, 74, 103, 141 145, 190, 192, 246; நடனம் - pp. 7, 8, 36, 152, 196.

Sambandar இசை pp. 13-14, 118, 129, 207, 207-8, 239, 286, 289, 301, 304, 306, 374, 387, 482, 544, 547, 549, 558, 585, 591, 626; நடனம் - pp. 365-6 380, 519, 529, 540, 544, 558, 573, 591, 625.

இவற்றுள் பல கோவில்களில் விழாக்கள் செவ்வனே நடை பெற்று வந்தன என்பதும் அவர் பாடல்களால் அறிய லாம்.[16] அப்பர் சம்பந்தர்க்கு முற்பட்ட அடியார் வர லாறுகள் அவ்வத் தலங்களிலும் பிற தலங்களிலும் ஒரோ வழி வழக்கில் இருந்தன என்பதை அவர் பாடல்கள் உணர்த்துகின்றன. பாடல் பெற்ற தலங்களில் ஒன்று 'பல்லவனீச்சரம்' என்ற பெயர் கொண்டும் மற்றொன்று 'மகேந்திரப்பள்ளி' என்ற பெயர் கொண்டும் இருத்தலால் அவை பல்லவர் சார்புடைய கோவில்கள் என்பதும் அறி யப்படுகிறது.

## அப்பர்-சம்பந்தர்க்கும் சுந்தரர்க்கும் இடைப்பட்ட காலம் (கி. பி. 660 840):

இக்காலத்தில் வாழ்ந்தவருள் முதல்வன் முதலாம் பரமேசுவரன் (கி. பி. 670-685). இவன் சிறந்த சிவபக்தன். உருத்திராக்கத்தால் சிவலிங்க வடிவமாகச் செய்யப் பெற்ற முடியை அணிந்தவன்; கூரத்தில் சிவன் கோவில் கட்டிப் பட்டயம் விடுத்தவன். இவன் கல்வெட்டுகள் யாவும் இவனது சிவப்பற்றை வெளிக்காட்டுவன. மகா பலிபுரத்தில் உள்ள கணேசர் கோவிலில் இவன் வெட்டு வித்த 11 வடமொழிச் சுலோகங்கள் இவனுக்கும் சிவ பிரானுக்கும் பொருள் பொருந்தும்படி சிலேடையாக அமைந்தவை. அவை படித்து இன்புறத் தக்கவை.[17]

---

16 Appar - pp. 35 - 36, 77, 166 176, 246, 290, 329, 337, 356, 335, 473.

Sambandar - pp. 14, 33, 38, 99, 137, 156, 266, 295, 303, 313, 415, 426, 440, 457, 482, 514. 528-9 546, 547, 558, 573, 626.

17 S. I. I. 1, pp. 5 - 8.

## இராச சிம்மன் (கி. பி. 685—720):

இவன் தந்தையைவிடச் சிறந்த சிவபக்தன். இவனே காஞ்சியிற் கயிலாசநாதர் கோவில் கட்டியவன்; பூசலார் நாயனார் காலத்தவனாகக் கருதப்படுபவன். 'ரிஷபலாஞ்சனன், ஸ்ரீ சங்கர பக்தன், ஸ்ரீ ஆகமப்பிரியன், சிவ சூடாமணி' என்ற தொடர்களால் இவனது சைவப்பற்றை நன்குணரலாம். இவன் சைவ சித்தாந்தத்தில் பேரறிவு படைத்தவன்; பெரிய இசைப்புலவன்; இசைக் கருவிகளை மீட்டுவதில் இணையற்றவன்; நடனக் கலையில் நல்ல புலவன்; இவன் இக்கலியுகத்தில் வான ஒலி கேட்டவன்' என்பன இவனுடைய கயிலாசநாதர் கோவில் கல்வெட்டுகளால் இனிது புலனாகின்றன[18]. இவன் காஞ்சியில் கயிலாசநாதர் கோவில், ஐராவதேச்சுரர் கோயில், மகாபலி புரத்தில் கடற்கரை ஓரமாகவுள்ள கோவில், மலைக் கோயில் இவற்றைக் கட்டியவன். இவன் காலத்து நடன வகைகள் யாவும் கயிலாசநாதர் கோவிலிற் கண்டுகளிக்கலாம். நாதாந்த நடனம் முதலிய பலவகை நிலைகளிற் சிவபிரான் நடிப்பதாகவும், கணங்கள் நடிப்பதாகவும், உமையம்மை பாடுவதாகவும் உள்ள சிற்பங்கள் இவனுக்குப் பெருமகிழ்ச்சி அளித்தவை. சிவபெருமானுடைய திருக்கூத்துச் சிறப்பை அப்பர் பாக்களில் காணலாம். ஆனால் அதனைக் கயிலாசநாதர் கோவில் சிற்பங்களிற் கண்கூடாகக் கண்டு களிக்கலாம். சுருங்கக் கூறின், கயிலாசநாதர் கோவிற் சிற்பங்கள் அப்பர் பாடல்கட்கு எடுத்துக் காட்டுகள் என்னல் தவறாகாது என்னலாம்.[19]

---

18 Ibid. pp. 12-21.

19 இக்கோவிலை நான் (10-1-'42) சென்று கண்டேன். இதன் கண்காணிப்பாளரான, திரு. குமாரகாளத்தி முதலியார் வேண்டிய வசதிகள் செய்து தந்தார்.

**பரமேசுவரன் VI** (*கி. பி. 720—725*):

*இவன் இராசசிம்மன் மகன் இவன் திருவதிகைச் சிவனூர் கோவிலைக் கற்றளியாக்கியவன் என்று அறிஞர் அறைவர்.* [20]

**பல்லவமல்லன்** (*கி. பி 725-790*):

*இவன் சிறந்த வைணவன்; இவன் திருமங்கையாழ்வார் காலத்தவன். ஆயினும், இவன் காலத்தில் சிவன் கோவில்கள் சிறப்புற்று விளங்கின. இவனது 28-ஆம் ஆட்சியாண்டில் காஞ்சியில் உள்ள முத்தீச்சுரர் கோவில் 'தர்ம மகாதேவீச்சுரம்' என்ற பெயர்கொண்டு விளங்கியது.* [21] *அக்கோவில் ஏகாலியனான திருக்குறிப்புத் தொண்ட நாயனார் பூசித்த கோவில் என்று கூறப்படுகிறது.* * *அதற்கேற்ப அவரது உருவச்சிலை இன்றும் அக்கோவிலிற் காணலாம். மேலும், அக்கோவில் ஏகாலியர் மேற்பார்வையிற்றான் இருந்து வருகிறது.* [22] *அக்கோவிலைக் கற்றளி யாக்கியவள் 'தர்ம மகாதேவி' என்ற பல்லவ அரசியாக இருத்தல்கூடும். அக்காலத்தில் அக்கோவிலில் 44 தேவர் அடியார் இருந்து இசை, நடனக் கலைகளை வளர்த்தனர்.* [23] *இந் நந்திவர்மன் காலத்தில் தென்னார்க்காட்டுக் கோட்டத்து மணலூர்ப்பேட்டை பகாதேவர்க்குச் சித்தவடவனூர் மகள் சிற்றூர் ஒன்றைத் தேவதான*

---

[20] C. S. Srinivasachari's 'History & Institution of the Pallavas', p. 15; 56 of 1903.

[21] 14 of 1893.

* C. K. S. Mudaliar's 'Periya puranam', Vol. II, p. 1537.

[22] *நான் இக்கோவிலை (12-1-'42-ல்) நேரிற் சென்று கண்டேன்.*

[23] S. I. I. IV. 827.

மாக விட்டாள். [24] இவன் காலத்தில் சீயமங்கலத்தில் தூணாண்டார் கோவில் மண்டபம் கட்டப்பட்டது.[25] திருக்கோவலூர் வீரட்டானேசுவரருக்கு விளக்கெரிக்கப் பொன் அளிக்கப்பட்டது. [26] நந்திவர்மன் 108 பிராமணர்க்குப் பிரமதேயமாகச் சிற்றூரை விட்டான். இச்செய்தியைக் குறிப்பதே உதயேந்திரப் பட்டயமாகும்.[27] சிறந்த பல கலைகளில் வல்ல மறையவன் ஒருவனுக்கு ஏகதீரமங்கலம் என்ற சிற்றூரைத் தானமாக விட்டான். இச்செய்தியைக் கூறுவதே கசாக்குடிப் பட்டயமாகும்.[28] இவ்வரசன் தண்டன் தோட்டத்தை அடுத்த சிற்றூரைத் தயாமுக மங்கலம் என்ற பெயரிட்டு 308 மறையவர்கட்குத் தானமளித்தான்; அங்கு இருந்த சிவன்-விஷ்ணு கோவில்களில் பூசை முதலியன நடக்க ஏற்பாடு செய்தான் [29]; கோவிலில் மகாபாரதம் சொல்ல ஏற்பாடு செய்தான் [30] வாணபுரத்து வடசிகரக் கோவிலைப் புதுப்பிக்க நிலதானம் செய்யப்பட்டதாகத் திருவல்லம் கல்வெட்டுக் கூறுகிறது[31]. பட்டத்தாள் மங்கலம் என்ற அக்கிரகாரமும் இவ்வாறே மறையவர்க்கு விடப்பட்டதாகும்[32].

---

[24] 469 of 1938.

[25] 68 of 1900.

[26] 295, 296 & 300 of 1902.

[27] S. I. I. 2. p. 365.

[28] Ibid. p. 346.

[29] இது சுந்தரர் தேவாரத்தில் வைப்புத் தலமாகக் குறிக்கப்பட்டுள்ளது காண்க (S. edition. p 306-S. 2)

[30] S. I. I. 2. No. 99.

[31] 76 of 1899; S. I. I. 3-p. 90.

[32] Ep. Ind. Vol. 18, pp. 115-125.

## தந்தி வர்மன் (கி. பி. 790—840)

இரண்டாம் நந்திவர்மன் மகனும் சிறந்த வைணவனுமான இத்தந்திவர்மன் ஆட்சிக் காலத்தில் நடந்த கோவில் அறச்செயல்கள் பல. அவற்றுள் பெரும்பாலன திருமால் கோவில்களில் நடந்தவை. இவன் கோயிற் றிருப்பணிகளிற் குறிக்கத்தக்கது —கச்சித் திருமேற்றளிக் கோவிற்கும் அதனில் இருந்த மடத்திற்கும் முத்தரையன் ஒருவன் பொருள் உதவி செய்ததேயாகும்.[33] இதனால் தேவார காலத்திற்றானே மடங்கள் இருந்தன என்பதற்கு இஃதொரு சிறந்த சான்றாதல் காண்க.

## நந்தி வர்மன் III (கி. பி. 840—865)

சுந்தரர் காலத்தவனான இவனது ஆட்சியில் பல கோவில்கள் சிறப்புப் பெற்றன. இவன் குமாராங்குச சோழன் என்பவனது வேண்டுகோட்கிணங்கிப் பொன்னேரிக் கடுத்த திக்காட்டுப் பள்ளியில் உள்ள சிவன் கோவிற்கு ஓர் சிற்றூரைத் தானமாக விட்டான்.[34] இவன் பல கோவில்கட்கும் தானம் செய்தவன் என்பது முன்னரே இரண்டாம் பிரிவில் விளக்கப்பட்டு உள்ளது. இவன் காலத்தில் திருநாகேச்சரத்தின் ஒரு பகுதி 'குமார மார்த்தாண்டபுரம்' எனப்பட்டது. அங்கு மிலாடுடையார் பள்ளி (மெய்ப்பொருள் நாயனார் கோவில்) இருந்தது என்பது ஆதித்தன் I கல்வெட்டால் அறியக் கிடக்கிறது.[35] இவன் காலத்துச் சிற்றரசராலும் இவன்

---

33 89 of 1921.

34 S. I. I. 2. 98.

35 A. R. E. 1912, p. 62.

மனைவி மாறம்பாவையாலும், பிறராலும அறங்கள் செய்யப் பெற்ற கோவில்கள் - திருநெய்த்தானம், செந்தலை, திருவல்லம், திருக்கடைமுடி, திருப்பராய்த் துறை, குடிமல்லம், நியமம் முதலியன.[36] குன்றாண்டார்கோவிலில் திரு ஆதிரை நாளில் 150 பேருக்கு உணவளிக்க வழுவூரான் என்பவன் அரிசி தானம் செய்தான்.[37] இந்நந்திவர்மன் காலத்திற்றான் கோவில்களில் திருப்பதிகம் ஓதப் பெற்றது என்பதை முன்னர்க் குறிப்பிட்டோம் அல்லவா?

சுந்தரர் தேவாரம்
(கி. பி. 840 - 865)

சுந்தரர் தேவாரத்தால் அறியப்படுவன: —

(1) திருத்துறையூர், திருப்பனையூர், திருநறையூர், திருப்பைஞ்ஞீலி, வெஞ்சமாக்கூடல், பழையனூர். பனங்காட்டூர், திருப்பூவணம், முதலிய இடங்களில் இசை வளர்க்கப் பட்டது.[38]

(2) திருத்துறையூர், திருப்பைஞ்ஞீலி, வெஞ்சமாக்கூடல், நாகைக் காரோணம் முதலிய ஊர்க்கோவில்களில் நடனம் நடைபெற்றது.[39]

(3) பண்ணொடு பாடும் அடியார் பலர் இருந்தனர்.[40]

(4) கோவில்களில் விழாக்கள் நடைபெற்றன.[41]

---

[36] 52 of 1895, 11 of 1899, S. I. I. 3. p. 93, 283 of 1901, 180 of 1907, Ep. Ind. Vol. 2. p. 224. 13 & 16 of 1899.

[37] 347 of 1914.

[38] Sundarar Devaram (Samajam edition) pp. 9, 49, 58, 89, 95, 183, 210, 258.

[39] Ibid. pp. 9-10, 89, 95, 249.

[40] Ibid. pp. 9, 89, 237.

[41] Ibid. pp. 45, 58, 72 ,95.

(5) சைவ சமய நூல்களும் பல்கலை நூல்களும் இருந்தன.[42]

(6) கோவில்களில் 'ஸ்ரீ பண்டாரம்'[43] இருந்தது என்பன.

## திருப்பதிகங்கள்

சம்பந்தரும் சுந்தரரும் ஒவ்வொரு பதிகத்தின் ஈற்றிலும் 'இப்பதிகம் பாடுவோர் சிவன் அருள் பெறுவர்' என்றும், சிவகதி அடைவர்' என்றும், 'கேட்போரும் பெரும் பேறு பெறுவர்' என்றும் பாடி இருத்தலைக் காணின், அவ்வத் தலத்து அடியார் அத்தலத்துப் பதிகத்தை உறுதியாக எழுதிக் கொண்டிருப்பர்; அதனைத் தம் ஊர்க் கோவிலிற் பாடியிருப்பர் என்று எண்ணுதல் பொருத்தமாகும். நமது எண்ணத்தை முற்சொன்ன திருவல்லம் கல்வெட்டும் உறுதிப்படுத்தல் காண்க. மேலும், சம்பந்தர் 'திருவிடைவாய்' என்ற தலத்துக் கோவிலிற் பாடிய திருப்பதிகம் அக்கோவிலிற் கல்வெட்டாகக் காட்சி யளிப்பதை இன்றும் காணலாம்.[44] திருமுறை கண்டவன் என்று கூறப்பட்ட இராசராச சோழனுக்கு (கி. பி. 985-க்கு) முன்பே - திரு எறும்பியூர், திருப்பழூவூர் திரு ஆவடு துறை, திருத்தவத்துறை, அல்லூர், குமார வய லூர், அந்துவ - நல்லூர் என்ற இடங்களில் உள்ள கோவில்களில் திருப்பதிகம் ஓதப் பெற்றதாகச் சோழர் கல்வெட்டுகள் குறிக்கின்றன.[45] சுந்தரர் காலத்தவரான மானக்கஞ்சாறர் உருவம் திருமுட்டம் சிவன் கோவிற் கோபுரத்தில் உள்ளது. அதன் கீழ், "இஃது இக்

---

[42] Ibid. pp. 37, 67, 73, 114, 231, 272, 304.

[43] Ibid. pp. 248-249, S. 5.

[44] 8 of 1918; A. R. E. 1918, p. 149.

[45] 129 of 1914, 349 of 1918, 111 & 139 of 1925, 99, 1929, 373 of 1903, 149 of 1937, S. I. I. 3-139.

கோவில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்து விடை பெற்ற தம்பிரான் தோழன் மானக்கஞ்சாறன் உருவம்" என்பது பொறிக்கப்பட்டுள்ளது.[46] இவை அனைத்தையும் நோக்க, தேவார ஆசிரியர் காலமாகிய பல்லவர் காலத்தில் சில கோவில்களிலேனும் திருப்பதிகங்கள் ஓதப்பெற்றன என்று முடிபு கோடல் தவறாகாது.

## நாயன்மார் திருமேனிகள்

சுந்தரர் காலத்திலேயே மிலாடுடையார் (மெய்ப்பொருள் (நாயனார்) பள்ளி இருந்ததும், திருக்குறிப்புத் தொண்டர் பூசித்த முத்தீச்சுரர் கோவில் சிறப்புற்றதும் நோக்க, சுந்தரரே 63 நாயன்மாரையும் தனித்தனியே விதந்து கூறி யிருத்தலையும் நோக்க நாயன்மார் வரலாறுகள் தமிழ் நாட்டில் மக்கள் அறியத் தக்க வகையில் சிறப்புற்றிருந்தன என்பது தெளிவாகிறது.[47] சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையைத் திரு ஆரூர்க் கோவிலில் உள்ள தேவாசிரிய மண்டபத்தின் முன் பாடினார் என்பது சேக்கிழார் கூற்று. இது சுவை பயக்கும் செய்தியாகும். 'சுந்தரர் தேவாசிரிய மண்டபத்தில் குழுமி இருந்த அடியாரைத் தனித் தனியே வகுத்துப் பாடினார்' என்பது சேக்கிழார் கூற்று. சுந்தரர் காலத்தவராகச் சேக்கிழாரால் குறிக்கப் பெற்றவர் 13 பேர். இவரே உயிருடன் தேவாசிரிய மண்டபத்தில் இருந்திருக்கலாம். ஏனையோர் 50 பேரும் சுந்தரர்க்கு முற்பட்டவர் அல்லரோ? அவருள், அப்பர் - சம்பந்தர்க்கு முற்பட்டவர் 17 பேர்; அப்பர் - சம்பந்தர் காலத்தவர் 11 பேர்; எஞ்சிய 28 பேரும் அப்பர் - சம்பந்தர்க்கும் சுந்தரர்க்கும் இடைப்பட்ட காலத்தவர் என்பது நான்காம் பிரிவிற்

---

46 255 of 1916.

47 The Stories of the 63 Saiva Saints must have been extant almost from the very period in which the Saints flourished—A. R. E. 1913. II. 24.

கூறப்பட்டதன்றோ? இவர் அனைவரும் தேவாசிரிய மண்டபத்தில் உயிருடன் எங்ஙனம் கூடி யிருத்தல் கூடும்? இங்ஙனம் காலத்தால் முற்பட்ட அடியாரையும் தேவாசிரிய மண்டபத்திற் கண்டு சுந்தரர் தனித்தனி வணங்கி 'அடியேன்' என்று பாடினார்* என்பது உண்மையாயின், அந்த நாயன்மார் 50 பேருடைய திருமேனிகள் தேவாசிரிய மண்டபத்தில் எழுந்தருளப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதுவே நுட்பமாகக் கொள்ளத் தக்க முடிபாகும்.

அப்பர், சம்பந்தர், சுந்தரர் இவர்கள் சில ஊர்களிற் பாடும்பொழுது, அவ்வூர்களில் முன்பு வாழ்ந்த அடியார் செயல்களைக் குறிப்பிட்டும் பாடியுள்ளனர்.[48] அதை நோக்க, அவ்வத் தலங்களில் அந்நாயன்மார் திருமேனிகள் கோவில்களில் எழுந்தருளப் பெற்றிருக்கலாம் என்று நினைப்பது தவறாகாது. இம் முடிவுக்குத் திருமுட்டம் சிவன் கோவில் கோபுரத்தில் உள்ள மானக் கஞ்சாறர் உருவம் சான்றாதல் நோக்குக; மிலாடுடையார் பள்ளியும் நோக்குக. கற்சிலைகளோ, செப்புச் சிலைகளோ அக்காலத்தில் இருந்தன என்பது நம்பத்தக்கது.

## பிற்பட்ட பல்லவர் (கி. பி. 865 - 900)

### நிருபதுங்க வர்மன்

இவன் கழற்சிங்கன் மகன். இவனது 8-ஆம் ஆட்சி ஆண்டில் வாகூர் - வடமொழிக் கல்லூரிக்கு மூன்று சிற்றூர்களை மானியமாக விட்டான். அக்கல்லூரி குறைந்தது கி. பி. 8-ஆம் நூற்றாண்டிலேனும் தொடங்கப் பெற்று நிருபதுங்கன் காலத்தில் வளர்ச்சி பெற்றதாதல் வேண்டும்.

---

* C. K. S. Mudaliar's P. P. Vol. I, p. 418.

48 Appar Devaram, pp. 74, 98, 145, 151; Sambandar Devaram, pp. 78, 257, 325, 335; Sundarar Devaram, pp. 51, 60, 244.

[49] நிருபதுங்கன் மனைவியாரான வீர மகா தேவியார் திருக்கோடிகாவில் உள்ள கோவிலில் இரண்ய கர்ப்பம், துலா பாரம் புகுந்து, ஒரு பகுதிப் பொன்னை அக்கோவிற் பெருமானுக் களித்தார். [50] இவனது காலத்தில் திருக்கோடிகா, திருத்தவத் துறை திருநின்றவூர், திரு அதிகை, திருவாலங்காடு, திருக்கோவலூர், திருக்கடைமுடி, திருக்கண்டியூர், திருப்புலி வலம் முதலிய இடத்துக் கோவில்களில் நிபந்தங்கள் விடப்பட்டன. [51]

## அபராசித வர்மன்

இவன் நிருபதுங்கன் மகன் இவன் காலத்திற் கட்டப்பட்டதே திருத்தணிகை வீரட்டானேசுவரர் கோவில். [52] இக்கோவில் இராச சிம்மன் கோவிலுக்கும் பிற்காலச் சோழர் கோவிலுக்கும் இடைப்பட்ட வளர்ச்சியுடையது. [53] இவன் காலத்தில் மாங்காடு, திருவொற்றியூர், சத்தியவேடு முதலிய இடத்துக் கோவில்கள் சிறப்புற்றன. [54] அபராசிதன் மனைவியான மாதேவி அடிகள் திருவொற்றியூர்க் கோவிலில் விளக்கெரிக்க 30 கழஞ்சு பொன் தந்தாள். [55]

---

49 Dr. C. Minakshi's—'Administration & Social Life under the Pallavas', p. 205.

50 38 of 1931.

51 22 of 1931, S. I. I. 4. 531, 172 of 1938, S. I. I. 8. 308, 460 of 1905, 277 of 1902, 300 & 303 of 1901, 17 of 1895, 63 of 1898.

52 433 of 1905.

53 இதனை நான் (20-5-'44) நேரிற் சென்று கண்டேன்.

54 351 of 1908, 158, 159, 161, 180 & 190 of 1912, 31 of 1912.

55 163 of 1912.

## தளிப் பரிவாரம்

பல்லவர் காலத்தில் கோவில் வேலைகளில் ஈடுபட்ட அனைவரும் தளிப் பரிவாரம் என்னும் தொகுதிப் பெயராற் குறிப்பிடப்பட்டனர்.[56] கோவிலின் சிறப்புக்கும், வருவாய்க்கும் தக்கவாறு பரிவாரம் சிறுத்தும் பெருத்தும் இருந்தது.

(1) அப்பர் காலத்து மகேந்திர வர்மன் ஆதரவு பெற்றது சீராளாவில் (cezarla) உள்ள கபோதீசுவரர் கோவில். அதனை அவ்வேந்தன் காலத்தில் மேற்பார்வையிட 12 பேர் இருந்தனர்.[57] எனின், அக்கோவில் தளிப் பரிவாரம் பெரியது என்பது புலப்படுகிறதன்றோ?

(2) முதலாம் பரமேசுவரவர்மன் கட்டிய கூரம் கோவிலில் (1) இரண்டு வேதியர் பூசையைக் கவனித்தனர். (2) பாரதம் கூறப்பெற்ற மண்டபத்தைத் தூய்மை செய்து தினந்தோறும் அங்கு விளக்கேற்றி வைக்க ஒருவன் இருந்தான்; (3) பாரதம் படித்து விளக்குபவன் ஒருவன் இருந்தான்.[58].

(3) இரண்டாம் நந்திவர்மன் காலத்து மூத்தீச்சுவரர் கோவிலில் (1)மூன்று மறையவர் பூசையைக் கவனித்தனர்; (2) இருவர் தட்டளி கொட்டினர்; (3) 44 தேவரடியார் இருந்தனர்; (4) இத்தேவர் அடியார்க்கு உணவளிக்கத் தவசிகள் இருந்தனர்; (5) கோவிலை விளக்கும் தவசிகள் 12 பேர் இருந்தனர்; (6) இவர் அனைவரையும் கவனித்துக் கோவில் ஆட்சி நடத்தத் 'தளி ஆழ்வார்' இருந்தனர்.[59]

---

[56] 14 of 1893; 301, 303 of 1901.

[57] S. I. I. 6. 595.

[58] S. I. I. 1. Kuram Grant.

[59] 152 of 1916.

(4) மூன்றாம் நந்திவர்மன் காலத்தில் திருவல்லம் கோவிலில் - பூசை செய்யச் சிவ மறையோர் இருந்தனர்; 2. ஸ்ரீ பலி கொட்டுவார் இருந்தனர்; 3. திருப்பள்ளித் தாமம் பறிப்பார் இருந்தனர்; 4. திருப்பதிகம் பாடுவார் இருந்தனர்; வேறு பல பணி செய்வார் இருந்தனர். [60]

(5) மாறம்பாவையாரது நியமம் கல்வெட்டில் "தளிப்பணி செய்யும் மாணிகள்" என்பது காண்கிறது. [61] இவர்கள் கோவிலைச் சார்ந்த மடத்தில் வாசித்துக் கொண்டு கோவிற் பணி செய்து வந்த மாணவராகலாம். பல்லவர் ஆட்சியில் மடங்கள் இருந்தன என்பதற்குக் காஞ்சித் திருமேற்றளிக் கல்வெட்டும் காவேரிப் பாக்கம் கல்வெட்டும் சான்றுதல் காணலாம். காவேரிப் பாக்கம் கல்வெட்டில் "மடத்துச் சத்தப் பெரு மக்களிடம் [62] விளக்குக்கு எண்ணெய் வாங்கப் பொன் தானம் செய்யப்பட்டது" என்ற செய்தி காணப்படுகிறது. இதனால் மடத்து ஆட்சி நடத்திய எழுவர் கோவில் ஆட்சியிலும் பங்கு கொண்டிருக்கலாம் என்று நினைக்க இடமுண்டு. [63] கம்பவர்மன் ஆட்சிக் காலத்தில் திருவொற்றியூரில் ஒரு மடம் இருந்தது. அதன் தலைவர் பெயர் நிரஞ்சனகுரவர் என்பது. [64] இவன் கோவிலை மேற்பார்த்து வந்தவர்

---

60 S. I. I. 3. 43.

61 S. I. I. 3. 94.

62 முதலாம் இராசராசன் காலத்திலும் சில கோவில்களில் 'சத்தப் பெருமக்கள்' ஆட்சி இருந்தது - 198 of 1930.

63 Dr. C. Minakshi's—'Ad . . . &. S. Life . . Pallavas' p. 208.

64 372 of 19 12, 181 of 1912, "The Origin of the Mathas is anterior to the reign of Rajaraja I and their number and influence steadily increased during the period of the cola rule in South India"—Prof. K. A. N. Sastry's 'Cholas', Vol 2, Part I, p. 498.

'அமிர்த கணத்தார்' [65] எனப்பட்டனர். 65 தேவரடியார் 'அடிகள் மார்' [66] என்றும் 'மாணிக்கத்தார்' என்றும் பெயர் பெற்றனர்.

## கோவில் ஆட்சி

கோவில்களை மேற்பார்வையிடும் பொறுப்பு முன் சொன்ன அமிர்த கணத்தார், கணப்பெருமக்கள், மடத்துச் சத்தப் பெருமக்கள் என்பவரிடம் இருந்தது மட்டும் அன்றி, ஊர் அவையாரிடமும் இருந்தது [67] என்பது பல கல்வெட்டுகளால் தெரிகிறது. திருவொற்றியூர்க் கோவில் ஆட்சி அமிர்த கணத்தாரிடமும், ஆதம்பாக்கத்துச் சபையாரிடமும் இருந்தது. [68] உக்கலில் இருந்த பெருமாள் கோவில் ஆட்சி உக்கல் சபையாரிடம் இருந்தது. [69] இங்ஙனமே குடிமல்லம், கூரம், திருமுக்கூடல், திருக்கோவலூர், திருவல்லம், தொண்டூர், திருநின்றவூர், திருக்கோடிகா, திருத்தவத் துறை திருத்தணிகை முதலிய ஊர்க் கோவில்கள் ஊர் அவையார் மேற் பார்வையில் இருந்தன. [70] இவ்வூர் அவையினர் 'ஆளுங் கணத்தார்' [71] எனவும் 'கணப் பெருமக்கள்' [72] எனவும் பெயர் பெற்றனர்

## மக்கள் பெற்றிருந்த நாயன்மார் பெயர்கள்

பாடல் பெற்ற தலங்கள் பல பல்லவர் காலத்தில் கற்றளிகளாக இராமையால் பல்லவர் காலக் கல்வெட்டு

---

65 158 of 1912.

66 303 of 1901.

67 278 & 302 of 1902.

68 158, 161 of 1912.

69 S. I. I. 3. 5.

70 228 of 1902, 37 of 1900, 179 of 1915, 277 of 1902 S. I. I. 3. p. 93, 283 of 1916, 168 of 1938, 22 o 1913, 84 of 1892, 435 of 1905.

71 Ep. Ind. Vol. II. pp. 223 & 225.

72 257 of 1912.

கள் பெற்றில. மேலும் கல்வெட்டுப் பெற்ற கோவில்கள் பிற்காலச் சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டபொழுது, அங்கிருந்த பல்லவர் காலக் கல்வெட்டுகள் சில அழிந்திருக்கலாம். கங்கை கொண்ட சோழீச்சரத்துக் கல்வெட்டுகளே [73] இப்பொழுது சிதைந்து காண்கின்றன எனின், கி. பி. 7, 8, 9-ஆம் நூற்றாண்டுப் பல்லவர் கல்வெட்டுகள் இயல்பாகவே அழிவுற்றிருத்தலில் வியப்பில்லை. புதுப்பித்தவர் அறிவின்மையால் அழிந்தன பலவாகலாம். [74] ஆதலின், பல்லவர் காலத்திற் சைவ சமய நிலையும், நாயன்மார் பெற்றிருந்த சிறப்பும், கோவில்கள் உற்றிருந்த உயர்வும் உள்ளவாறு உணரக் கூடவில்லை. ஆதலின் இன்று வரை வெளிவந்துள்ள கல்வெட்டுகளைக் கொண்டே நாயன்மார் காலத்துச் சைவ சமய நிலை ஒருவாறு கூறப்பட்டது. இங்ஙனமே பல்லவர் காலத்து மக்கள் வைத்து வழங்கிய நாயன்மார் பெயர்களைக் கல்வெட்டுகளைக் கொண்டு கால முறைப்படி காண்போம்.

---

[73] S. I. I. 4. Nos. 522 to 539.

[74] A. R. E. 1934—'35. p. 59.

| எண் | மக்களின் பெயர் | அரசனும் காலமும் | கல்வெட்டுகள் |
|---|---|---|---|
| 1. | மானி | நந்திவர்மன் II | S. I. I. IV. 827. |
| 2. | ஸ்ரீ தண்டி | ,, | S. I. I. XII. 37. |
| 3. | கலிப்பகை | நெடுஞ்சடையன் | E. I.17, P. 291 ff. |
| 4. | புகழ்த்துணை விசையரையன் | தந்திவர்மன் | E. I. 8, P. 291. |
| 5. | நம்பி | ,, | 283 of 1916. |
| 6. | சிறுநம்பி | ,, | S. I. I. XII. 39. |
| 7. | கம்பன் அரையன் | ,, | ,, . 40. |
| 8. | கலிமூர்க்க இளவரையன் | ,, | ,, . 41. |
| 9. | மாறன் பாவையார் | நந்தி வர்மன் III | 301, 303 of 1901 |
| 10. | சடையன் பள்ளி | ,, | S. I. I. XII .48. |
| 11. | பங்கள அடிகள் | ,, | ,, . 50. |
| 12. | சிறுநங்கை | ,, | ,, . 55, 63. |
| 13. | பூதி கண்டன் | நிருபதுங்கன | ,, . 61. |
| 14. | காடவன் மாதேவியார் | ,, | 460 of 1905. |
| 15. | தண்டியங்கிழார் | ,, | S. I. I. XII. 68. |
| 16. | நந்தி நிறை மதி | ,, | ,, . 69. |
| 17. | சிவ நந்தி | ,, | ,, . 76. |
| 18. | பாதிரி கிழார் சிங்கன் | ,, | ,, . 81. |

| | | | |
|---|---|---|---|
| 19. | குறும்ப கோளரி | அபராஜிதன் | 158 of 1912. |
| 20. | பெரு நங்கை | ,, | ,, |
| 21. | போற்றி நங்கை | ,, | 32 of 1912. |
| 22. | மாதேவி அடிகள் | ,, | 162 of 1912. |
| 23. | நம்பி அப்பி | ,, | 435 of 1905 |
| 24. | கஞ்சாறன் அமர்நீதி | கம்பவர்மன் | 188 of 1912 |
| 25. | சத்திப் பல்லவன் | சத்திப் பல்லவன் | E. I. VII. P. 25. |

முடிவுரை

இதுகாறும் கூறப்பெற்ற பலதுறைச் செய்திகளைக் கொண்டும் நாம் இங்கு அறியத் தக்கன இவையாகும் :

1. சிறப்பாக அப்பர் கால முதல், பல்லவர் ஆட்சியிற் பாடல் பெற்ற கோவில்கள் படிப்படியாகச் சிறப்புப் பெற்று வந்தன.

2. பல புதிய கோவில்களும் ஏற்பட்டுச் சிறப்படைந்தன.

3. சைவ சமயம் வளர்ச்சி பெற்று வந்தது.

4. திருப்பதிகங்கள் ஓரளவு அங்கங்கு ஓதப் பெற்று வந்தன.[75]

5. சில கோவில்களை அடுத்து மடங்கள் இருந்து தொண்டாற்றி வந்தன.

6. நாயன்மார்க்குச் சில கோவில்களிலேனும் வழிபாடு நடைபெற்று வந்திருக்கலாம்.

7. அந்நாயன்மார் வரலாறுகளை ஓரளவேனும் மக்கள் அறிந்து இருந்தனர்.

8. நாயன்மார் பெயர்கள் பல்லவர் கால மக்கட் பெயர்களோடு ஒன்றுபட்டனவே; நாயன்மார்க்குக் காலத்தாற் பிறபட்ட மக்கள் அவர் தம் பெயர்களைத் தாங்கி இருந்ததற்கு அந்நாயன்மார்பால் கொண்ட பக்தி காரணமாகலாம்.

---

75 "The inference is clear that the hymns had attained the status of divine literature long before Nambi Andar Nambi Collected and edited them".—Prof. K. A. N. Sastry's 'Cholas', Vol. II, part I, p. 476.

# VII. சோழர் காலத்துச் சைவ சமய நிலை

(கி. பி. 900 - 1133)

## முன்னுரை

சென்ற பகுதியிற் சோழர் காலத்துச் சைவ சமய நிலை ஒருவாறு இலக்கியம் கொண்டும் கல்வெட்டு-செப்புப் பட்டயம் கொண்டும் ஆராய்ந்தோம். இப் பகுதியில் சோழப்பேரரசை ஏற்படுத்திய ஆதித்தன் காலமுதல் (கி. பி. 871 - 907) சேக்கிழார் காலத்தரசனான இரண்டாம் குலோத்துங்கன் (கி. பி. 1133 - 1150) காலம் வரை (கி. பி. 871-1133) சோழர் ஆட்சியில் சைவ சமயம் எங்ஙனம் வளர்ச்சி அடைந்தது என்பதைக் காண்போம் :

## இக்கால எல்லைக்கு உட்பட்ட சோழ மன்னர்கள்

விசயாலயன் (கி. பி. 850-871)

ஆதித்த சோழன் I (கி. பி. 871-907)

பராந்தகன் I (கி. பி. 907-953)



(கி. பி. 1012-1044)

இராசாதிராசன் I
(கி. பி. 1018-1054)

இராசேந்திரன் II
(கி. பி. 1052-1064)

இராச மகேந்திரன்
(கி. பி. 1060-1063)

சாளுக்கிய-சோழ அரசனை
குலோத்துங்கன் I
(கி. பி. 1070-1120)

விக்கிரம சோழன்
(கி. பி. 1120-1135)

குலோத்துங்கன் II
(கி. பி. 1133-1150)

வீர ராசேந்திரன்
(கி. பி. 1063-1069)

அதிராசேந்திரன்
(கி. பி. 1067-8-1070)

## இச்சோழர் அனைவரும் சைவ மரபினரே

விசயாலயன் மரபில் வந்த சோழப் பேரரசர் அனைவரும் சைவ சமயத்தவரே ஆவர். அவர்கள் அனைவரும் தில்லைப் பெருமானைத் தம் குல நாயகனாகக் கொண்டவர்கள் என்பது இலக்கியமும் கல்வெட்டுகளும் கூறும் சான்றாகும். ஆதலின் இப்பேரரசர் காலத்தில் தில்லை உட்படப் பாடல்பெற்ற சிவத் தளிகளும் புதியனவாகச் சோழர் கட்டிய வியத்தகு கோவில்களும் பெருஞ் சிறப்புப் பெற்றன. இவ்வுண்மையை இப்பகுதியில் நன்கு காணலாம்.

## சோழர் புதியனவாக எடுப்பித்த கற்றளிகள்

முதல் அரசனான விசயாலயன் புதுக்கோட்டையில் விசயாலய சோழீச்சுவரம், திருப்பூர்ச் சோழீச்சுவரமுடையார் கோவில் என்பவற்றைக் கட்டினான். இவன் மகனான ஆதித்த சோழன் திருப்புறம்பயத்தில் ஆதித்தேச்சுரம், பண்டாரவாடைக் கடுத்த தேவராயன் கோட்டைக் கோவில், (கண்ணனூர் முருகர் கோவில்) புதுக்கோட்டைச் சீமையில் உள்ள கார்குறிச்சிக் கற்றளி ஆகிய நான்கையும் கட்டினான். இவன் காவிரியாறு பிறக்கும் இடத்திலிருந்து கடல் வரை அதன் இரு கரையிலும் இருந்த கோவில்களைக் கட்டினான் (கற்றளியாக்கினான்?) என்று அன்பில் பட்டயம் அறைகின்றது. இவன் இறந்த இடம் திருக்காளத்திக் கடுத்த தொண்டைமான் ஆற்றூர் என்பது. அங்குக் கோதண்ட ராமேசுவரம் என்ற பெயர் கொண்ட கற்றளி இவன் நினைவுக்காகக் கட்டப்பட்டது.[3] இவன் மகனான முதற் பராந்தகன்

---

[1] 282 of Pudukkottai Ins, J. O. R. 12. 4. pp. 300-302.
[2] J. M. Somasundaram Pillai's 'Cholar Koyirpanigal p. 8; Anbil plates of Sundara chola.
[3] 286 of 1906.

தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன் மயம் ஆக்கினவன்.[4] காட்டு மன்னார்குடிக் கடுத்த உடையார் கோவில், முசிரி தாலூகா-சீனிவாச நல்லூர்க் குரங்கநாதர் கோவில், தில்லைக் கடுத்த எறும்பூர்க் கடம்பவனேசுவரர் கோவில் முதலியன [5] இவன் காலத்தில் உண்டானவை. இவன் மகனை இராசாதித்தன் சுந்தரர் வளர்ந்த திருநாவலூரில் இராசாதித்தேசுவரம் என்ற கோவிலைக் கட்டினான். [6]

சிறந்த சிவபக்தனை இராசராசன் I பல ஆண்டுகள் உழைத்து எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோவிலைப் பாராட்டாதார் யாவர்? அவன் அக்கோவிலுக்கு அளித்த பொன், அளவிறந்தது; நிலங்கள் மிகப் பல; தமிழகம் முழுவதிலும் 400 பதியிலாரை அக்கோவிலில் அமர்த்தி நடனம்-இசை-நாடகக் கலைகளை வளர்த்தவன்; 50 பேரை அமர்த்தித் திருப்பதிகம் ஓதச் செய்தான். [7] இவன் ஈழத்தில் இராசராசேசுவரம், தொண்டை மண்டலத்தில் அரிஞ்சயேச்சுரம், பழையாற்றில் அருள்மொழித் தேவேச்சுரம், திருவலஞ்சுழிக் கோவிலில் க்ஷேத்திரபாலர் கோவில், செம்பியன் மாதேவி என்ற சிற்றூரின் சிவன் கோவில் இவற்றைக் கட்டினான். [8] இவன் மனைவியான உலக மகா தேவி என்பவள் திருவையாற்றுக் கோவிலின் வடபால் 'உலக மகா தேவீச்சரம்' கட்டினாள். [9] அதற்கு அவ்

4 The Leyden grant and the Tiruvalangadu plates; also Vikramasolan Ula-K. 16.

5 J. M. S. Pillai's 'Cholar Koyirpanigal'; pp. 10-11.

6 335 of 1902.

7 K. A. N. Sastry's 'Cholas', Vol. 2, part 1. pp. 502—503.

8 S. I. I, 3, i. p. 23; 633 of 1902; Cholar Koyirpanigal, p. 14.

9 633 of 1902, 219 of 1894, S. I. I. V. 518.

வம்மை விடுத்த நிபந்தங்கள் பல; பின்னர் அவற்றை இராசேந்திரன் தன் காலத்தில் திருத்தி அமைத்தான்.[10]

இராசேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தைப் புதிதாக அமைத்தான்; அதனைத் நலைநகர மாக்கினான்; அங்குப் பெரிய சிவன் கோவிலைக் கட்டுவித்தான். இவன் மகனான முதல் இராசாதிராசன் மன்னார்குடியில் ஐயங்கொண்ட சோழேசுவரம், இராஜ ராஜேசுவரம் என்ற கோவில்களையும் குடந்தைநாகேசுவரம்என்றகோவிலையும் கட்டினான்.[11] முதற் குலோத்துங்கன் சூரியனார் கோவில், வேம்பற்றூர்க் கண்மையில் கர்க்கடேசுவரர் கோவில், குலோத்துங்க சோழேசுவரம் என்ற மேலப் பழுவூர்க் கோவில், கோட்டாற்று இராசேந்திர சோழேசுவரம், மன்னார்குடியில் உள்ள குலோத்துங்க சோழ விண்ணகரம் முதலியவற்றைக் கட்டினான்.[12] இவன் மகனான விக்கிரம சோழன் மாயூரத்தை அடுத்த திருமங்கலத்தில் உள்ள சிவன் கோவில், குற்றாலத்தில் உள்ள விக்கிரம சோழேசுவரம் என்ற கோவில், உத்தம சோழபுரத்தில் உள்ள இருங்கோளீசுவரம் என்ற கோவில் முதலியன கட்டினான்.[13]

## சிற்றரசரும் பிறரும் எடுப்பித்த கற்றளிகள்

இப்பரந்துபட்ட காலத்தில் சோழ மன்னரைப் போலவே அவர் அரசியலிற் பங்கு கொண்டு உயர் அலுவலாளரும் சிற்றரசரும் பிறரும் இத்தமிழகத்திற் புதியன

---

10 Tamil Polil, Vol. 18, pp. 151—154.

11 A. R. E. 1937. 2. 11. , Tanjore Gazetteer, I. p. 227.

12 J. M. S. Pillai's 'Cholar-Koyir panigal', p. 47; 31 of 1896.

13 Ibid. pp. 47-48.

வாக உண்டாக்கிய சிவன் கோவில்கள் பலவாகும்.[14] இவை அல்லாமல், பாடல் பெருதனவும் சோழர் காலத்தில் புதியனவாகக் கட்டப் பெருதனவுமாக இருந்து சோழர் காலத்தில் புதுப்பிக்கப் பெற்ற கோவில்கள் பலவாகும்[15].

## புதுப்பிக்கப் பெற்ற-பாடல்பெற்ற கோவில்கள்

பாடல்பெற்ற கோவில்களில் சில முற்றும் கற்றளிகளாயின; சிலவற்றின் விமான மட்டும் கற்களால் புதுப்பிக்கப் பெற்றது; சில கோவில்களின் கோபுரம், திருச்சுற்றுலை முதலியன புதுப்பிக்கப்பட்டன. இச்சிறப்புகள் பெற்ற கோவில்கள் திரு எறும்பியூர், திருவிடைமருதூர், ஆபாத்தூர், திருச்செந்துறை, திரு ஆவடு துறை, திரு நாவலூர், திருக்கோடிகா, திரு விசயமங்கை, திரு ஆலந்துறை, அரிசிற் கரைப் புத்தூர், திருமழபாடி, திருவிசலூர், திருவாரூர், திருவொற்றியூர், திருமணஞ் சேரி, திருநல்லம், திருக்காளத்தி, திருவைகாவூர், திருநீடூர் முதலியன.[16].

---

14 129 of 1919, 394 of 1924, 382 of 1905, 279 of 1901, 359 of 1903, 476 of 1925, 735 of 1905, 304 of 1917, 414 of 1902, 231 of 1931, Ep. Car. iv. 93, 534 of 1921, 40 of 1905, 128 of 1896, 163 of 1897, etc.

15 49 of 1888, 359 of 1917, 325 of 1901, 212 of 1903, 255 of 1916, 183-184 of 1929'-30, 221 of 1937, 168 of 1938, 393 of 1924, 367 of 1909, etc.

16 104, 112 of 1914; 253 of 1907: 403, 413 of 1903; 316, 318 of 1903; 126 of 1925, 326, 335 of 1902; 143 of 1925; 36 of 1931; 165, 166 of 1929; 358 of 1903, 283 of 1908; 92 of 1895: 341 of 1907; 669, 670, 675, 680 of 1919; 126, 232, of 1912; 2 of 1914; 227 of 1902, 658 of 1909, 151 of 1922, 51 of 1914, 535 of 1921.

## செம்பியன் மாதேவியார் புதுப்பித்த - சிறப்பித்த கோவில்கள்

இவர் பராந்தகன் மகனும் திருவிசைப்பா ஆசிரியரு மான கண்டராதித்தர் கோப்பெருந்தேவியாராவர். இவர் மழவர் மரபினர்; செம்பியன் மாதேவியார் எனப்பட்ட வர்; சிறந்த சைவப் பற்றுடையவர். இவரது பொருள் உதவியால் திருத்துருத்தி (குற்றாலம்-தஞ்சைக் கோட்டம்), திருக்கோடிகா, ஆரூர் அரநெறி, திருவக்கரை திருமுதுகுன் றம் (விருத்தாசலம்) என்பன கற்றளிகள் ஆயின. [17] இவ ரால் நிலதானம், பொன் தானம், பொன் வெள்ளிப் பாத் திரங்கள் பெற்ற கோவில்கள் பலவாகும். அவற்றுள் சிறந்தன பின்வரும் தலத்துக் கோவில்கள் ஆகும். அவை- திருமணஞ்சேரி, திருவையாறு, திருச்சேய்ஞலூர், திரு ஒத் தூர், வட குரங்காடு துறை, திருநல்லம், தலைச்சங்காடு, திரு நரையூர், திருவாரூர், திருப்புறம்பியம், திரு வெண்காடு, திருமுதுகுன்றம், திருக்களித்திட்டை, திருமங்கலம், திருத் தவத் துறை, பந்தணை நல்லூர், திருவிளக்குடி, திருவிய லூர், வட திருமுல்லை வாயில், திரு நாகேசுவரம், திருக்கற் குடி என்பன. [18].

---

17 103 of 1926, 36 of 1931, 571 of 1904; 200 of 1904, 47 of 1918.

18 21 of 1914, S. I. I. V. 549, 250 of 1923, 104 of 1900, 357 of 1907, 450 of 1908, 204 of 1925, 159 of 1908,570of 1904,338 of 1927,444of 1918,48of1918, 297 of 1908, 251 of 1930, 503 of 1930, 71 of 1931, 128 of 1926, 28 of 1907, 669 of 1904, 219 of 1911, 459 of 1908. See also A. R. E. 1926, pp. 104-105.

## விழாக்கள் நடைபெற்ற கோவில்கள்

பாடல்பெற்ற கோவில்கள் பலவற்றில் சித்திரை, வைகாசி, ஆனி, புரட்டாசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி மாதங்களில் விழாக்கள் குறைவற நடந்தன என்பதற்கு எண்ணிறந்த கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன.[19] இவ்விழாக்கள் சோழரால் புதியனவாக உண்டாக்கப்பட்டன என்று அக் கல்வெட்டுகள் கூறுமையால், நீண்ட காலமாக வழக்கில் இருந்து சோழர் காலத்திற் பெருஞ் சிறப்படைந்தன என்று கோடலே தக்கதாகும்.

## மடங்கள் இருந்த பதிகள்

விசயாலயன் கால முதல் விக்ரம சோழன் ஆட்சி முடியச் சோழப் பேரரசில் சிறப்புற்றிருந்த மடங்கள் பல ஆகும். அவற்றில் பல புதியனவாக உண்டானவை. சில சோழர்க்கு முன்பே இருந்தன என்பது கல்வெட்டுகளைக் கொண்டு உய்த்துணரக் கிடக்கிறது. இம் மடங்களுள் 1. அரசிற்கரைப் புத்தூரில் இருந்த குருகூர் மடம், 2. திருப்புகலூர் நம்பி திருமுருகன் திருமடம், 3. திரு ஆவடுதுறையில் இருந்த திருவீதி மடம், திரு நீல விடங்கன் மடம், பிரமாண வாசகன் மடம், நாற்பத்தெண்ணாயிரவன் மடம்; 4. திருக்கழுக்குன்றத்து நமிநந்தி யடிகள் மடம், 5. திருவதிகையில் இருந்த வாகீசன் மடம், திருநாவுக்கரசன் மடம் ,6. திருமுதுகுன்றத்து மடம், 7. திருமங்கலத்துப் பரஞ்சோதி மடம், 8. திருமணஞ்சேரியில் இருந்த பர சமய கோளரி மடம், 9. திரு எறும்பியூர் மடம், 10. திருவையாற்று மடம் முதலியன யாரால் உண்டாக்கப்

---

[19] 186 of 1925, 187 of 1925, 285 of 1912, 108 of 1925, 291 of 1904, 98 of 1920, 248 of 1907, 226 of 1921, 268 of 1921, 2 of 1914.

பட்டவை என்று கூறக் கூடவில்லை.[20] புதியனவாக உண்டான மடங்களுள் 1. திருவொற்றியூரில் இருந்த இராசேந்திர சோழன் மடம், குலோத்துங்க சோழன் மடம், 2. திருநனிபள்ளியில் இருந்த முதல் இராசராசன் மடம், 3 திருவூறல் மடம், 4. மதுராந்தகம் கோவிலில் இருந்த தில்லை வாழ் அந்தணர் மடம், 5. திருவாட் போக்கியில் இருந்த எழுநூற்றுவன் மடம், 6. திருக்கற்குடியில் இருந்த திருவாகீசர் மடம், 7. சாய்க்காட்டு மடம், 8. திருவல்லத்து மடம், 9. திரு ஆவடு துறையில் இருந்த பஞ்சநதிவாணன் மடம், சிவலோக நாயகன் மடம், சங்கர தேவன் அறச்சாலை, பெருந்திருவாட்டி அறச்சாலை, 10. திருக்கோடிகாவில் இருந்த ஐஞ்ஞூற்றெண்மர் மடம், (11) திருச்செங்காட்டங் குடி சிறுத்தொண்ட நம்பி மடம் என்பன குறிக்கத் தக்கவை.[21].

இம்மடங்கள் பலவற்றில் சிவயோகியர், மாஹேசுவரர், தபசிகள், அடியார், வைத்தியர், ஆண்டார், முதலியவரை உண்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இவை பல கலைகளில் வல்ல சமயத் தலைவர்கள் ஆட்சியில் இருந்தன. இவை தல யாத்திரை செய்யும் அடியவர் தங்கும் இடங்களாகவும், சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி வீடு பேற்றை விரும்பிய துறவிகள் தங்கும் அமைதி நிலவிய இடங்களாகவும், அடியார்கட்குச் சமய அறவுரை

[20] 298 of 1908. 88 of 1928, 147, 144, 155, & 150 of 1925, S. I. I, 75, S. I. I. 8. 324, 382 of 1921, 63 of I918, 246 of 1930, 534 of 1918, 10I of 1914, 121 of 1925.

[21] 132 & 200 of 1912, 186 of 1925, 172 cf 1911, 404 of 1922, 179 of 1914, A. R. E. 191I, p. 93, 269 of 1911; 232 of 1921; 67, 71 of 1926 and 148, 259 of 1925; 60 of 1931; A. R. E. 1913. II. 58.

போதிக்கும் சமயப் பள்ளிகளாகவும் இருந்து சைவ சமயத் தொண்டாற்றி வந்தன. இம்மடங்கள் கோவிலைச் சார்ந்து இத்தகைய தொண்டுகளில் ஈடுபட்டிருந்தமையாற்றான் சைவ சமயப் பிரசாரம் பௌத்த விஹாரத்தையும் சமணப் பள்ளியையும் விஞ்சி விட்டன; மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. பல மடங்கள் காலாமுகர் ஆட்சியில் இருந்தன. அவற்றுள் கொடும்பாளூர், வெடால், மேல்பாடி, திருவொற்றியூர், திருச்சேயலூர். முதலிய இடங்களில் இருந்த மடங்கள் குறிக்கத் தக்கவை.[22].

## சிவயோகியரை உண்பித்த கோவில்கள்

சிவயோகியர் என்பவர் உலகப் பற்றை விட்ட துறவிகள். அவர்கள் சிவனைச் சிந்தித்தபடியே இருப்பவர்; இறக்குந் தறுவாயில் உடம்பைச் சாம்பரில் நனைத்து (உடம்பு முழுவதும் வெண்ணீறு பூசி) சிவ மந்திரங்களைச் சொல்லிக் கொண்டே தங்கள் மார்பில் உள்ள இலிங்கத்தைப் பூசிப்பவர். [23] இவர்களை உண்பித்த கோவில்கள் பல என்பது கல்வெட்டுகளால் அறியக் கிடக்கிறது. அவற்றுள் குறிக்கத் தக்கன பின் வரும் தலங்களைச் சேர்ந்தவை: திரு எறும்பியூர், திரு ஆவடுதுறை, குடந்தைக் கீழ்க் கோட்டம், திரு நெடுங்களம், திருக்கற்குடி, திருத்துருத்தி, திருமழபாடி, திருமணஞ்சேரி, திருவாரூர், திருக்கடவூர், திருவாட்போக்கி, திருநறையூர், திருப்பூந்துருத்தி, தஞ்சாவூர் என்பன [24].

---

22 K. A. N. Sastrys' Cholas', Vol. II, part I, pp. 472, 493-500.

23 Ibid. p. 493.

24 101 of 1914, 111 of 1925, 225 & 230 of 1911, 687 of 1909, 467 of 1908, 99 of 1926, 75 of 1920, 2 of

## மாவிரதியரை உண்பித்த கோவில்கள்

காலாமுகச் சைவருள் கடு நோன்பினர் மாவிரதியர் எனப்பட்டனர் போலும்! காலாமுகர் மண்டை ஓட்டில் உண்பவர்; பிணச் சாம்பரை உடல் முழுவதும் பூசுபவர்; அப்பிணச் சாம்பரை உண்பவர்; தண்டேந்தி இருப்பவர்; மதுப் பாத்திரம் ஏந்தி இருப்பவர்; அம்மதுவில் இறைவன் இருப்பதாக எண்ணி வழிபடுவர்; நரபலி இடுபவர்.[25] தென் ஆர்க்காட்டுக் கோட்டம் ஜம்பையில் உள்ள சிவன் கோவில் ஆட்சியில் மாவிரதியர் லகுலீசுவர பண்டிதர் பங்கு கொண்டவராக இருந்தார்.[26] திருவொற்றியூர்க் கோவிலில் நாளும் மாவிரதியர் இருவரை உண்பிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.[27]

## தவசியரை உண்பித்த கோவில்கள்

தவசியர் எனப்பட்டோர் சிறந்த சிவனடியார்; துறவு பூண்ட நன்மக்கள். இவர்களை உண்பித்த கோவில்களில் குறிக்கத்தக்கன—திருமழபாடி, திருமணஞ்சேரி, திருவாவடுதுறை, திருவாட்போக்கி, திருக்காளத்தி, திருப்பூந்துருத்தி என்ற தலத்துக் கோவில்களே ஆகும்.[28]

---

1914, 677 of 1919, 243 of 1925, 179 of 1914, 177 of 1909, 82 of 1931 and S. I. I. 2. 28.

25 K. A. N. Sastry's 'Cholas', Vol. II, part I. pp; 493-494.

26 100 of 1906.

27 168 of 1912.

28 75 of 1920, 2 of I914, 144 of 1925, 179 of 1914, 83 of 1922 and 82 of 1931.

## மாகேசுவரரை உண்பித்த தலங்கள்

இவர்கள் கோவில் ஆட்சியிற் பங்குகொண்டு இருந்தனர்.[29] மாகேசுவரரை உண்பித்த தலங்களில் குறிப்பிடத்தக்கவை—திரு ஆவடுதுறை, திருக்கடவூர், திருவொற்றியூர், திருக்காளத்தி, தில்லை முதலியன.[30]

## அபூர்விகளை உண்பித்த தலங்கள்

அபூர்விகள் என்பவர் அத்தியயனப் பிராமணர்.[31] இவர்கள் வேதங்களை ஒப்புவிப்பதில் வல்லவர்; பல தளிகளைத் தரிசிப்பவர். இவர்களை உண்பித்த தலங்களிற் சிறந்தவை—குடந்தைக் கீழ்க்கோட்டம், திரு ஆவடுதுறை, பாபட்லா, மாறன்பாடி முதலியன.[32]

## ஆண்டார்களை உண்பித்த தலங்கள்

இவர்கள் கோவிலில் இருந்த திருக்கைக்கோட்டி மண்டபத்தைத் தூய்மை செய்பவர்; திருமுறை ஓதுபவர்; திரு நந்தவனம் அமைப்பவர்; மலர் பறிப்பவர்; அன்பர்க்கு அடியவர்; மடத்தில் நிஷ்காமிகளாக இருப்பவர்.[33] இவர்கள் திருவீதிப்பணி செய்தலும் உண்டு.[34] இவர்களை உண்பித்த கோவில்களிற் குறிக்கத் தக்கவை-திருவல்லம், திருஒத்தூர், திரு ஆவடுதுறை என்ற தலத்துக் கோவில்களாகும்.[35]

---

[29] 133 of 1914, 683 of 1909, S. I. I. vi. 450, 108 of 1925, 353 of 1909, 95 of 1932, 19 of 1931, etc.

[30] 111 of 1925, 20 of 1906, 127 of 1912, 86 of 1922, S. I. I. iv. 222.

[31] S. I. I. vi. 200-201.

[32] 230 of 1911, 134 of 1925, S. I. I. vi. 200-201, 96 of 1932.

[33] 350 of 1929.

[34] S. I. I. VII. 97.

[35] 231 of 1921, 88 of 1900, 67 of 1926.

## நாயன்மார் பூசிக்கப்பெற்ற கோவில்கள்

நாயன்மார் திருமேனிகள் அப்பர், சம்பந்தர் கால முதலே எடுப்பித்தல் மரபாக இருந்திருத்தல் வேண்டும் என்பதும், சிறப்பாகச் சுந்தரர் காலத்தில் திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தில் அவை வைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதும், இன்றேல் அங்குச் சுந்தரர் திருத்தொண்டத்தொகையை இவ்வளவு தெளிவாக ஒவ்வொருவரையும் சுட்டிப் பாடியிருத்தல் முடியாது என்பதும் சென்ற பகுதியிலேயே நன்கு விளக்கப்பட்டவை.[36] இங்ஙனம் கோவில்களில் நாயன்மார் திருமேனிகள் எடுப்பித்தல் சோழர் காலத்தில் மிகுதிப்படலாயிற்று.

1. இராசராசற்கு முன்பே திருவதிகை வீரட்டானத்துள் வாகீசுவரம் என்ற பெயரால் திருநாவுக்கரசர்க்குக் கோவில் இருந்தது.[37]

2. குஹூர்க் கோவிலில் நம்பி ஆரூரர்க்குக் கோவில் இருந்தது; சித்திரைத் திருவிழா நடந்தது.[38]

3. செங்காட்டங்குடியில் சிறுத்தொண்ட நம்பி விழா நடைபெற்றது.[39]

4. இராசராசன் காலத்தில் திருப்புகலூரில் திருநாவுக்கரைய தேவற்குப் பூசை முதலியன புதியனவாக உண்டாக்கப்பட்டன.[40]

5. தஞ்சைப் பெரிய கோவிலில் சண்டீசர்க்குத் தனிக்கோயில் ஏற்பட்டது; பூஜை சிறப்பாக நடைபெற்றது.[41]

---

36 இதே நூல், பக். 115.

37 368 of 1921.

38 299 of 1917.

39 59 of 1913.

40 68 of 1928.

41 S. I. I. 2. 59 & 60.

*6. சண்டேசர் சிவலிங்க பூசை செய்தல்—தந்தை கால் வெட்டுண்டு கீழே விழல்-சிவபிரான் உமையோடு காட்சி தரல் - சண்டேசர்க்குச் சண்டேசப்பதம் தரல் இவற்றை விளக்கும் திருமேனிகள் தஞ்சைப் பெரிய கோவிலில் எடுப்பிக்கப் பெற்றன.*[42]

*7. தஞ்சைப் பெரிய கோவிலில் நம்பி ஆரூரனார், நங்கை பரவையார், திருநாவுக்கரையர், திருஞானசம்பந்தடிகள் இவர்தம் திருமேனிகள் எடுப்பிக்கப் பெற்றன; பல ஆடையணிகள் வழங்கப் பெற்றன.*[43]

*8. 'தத்தா! நமரே காண்!' என்ற மிலாடுடையார் படிமம் ஒன்று அதே கோவிலில் எழுந்தருளப் பெற்றது.*[44]

*9. அதே பெரிய கோவிலில் பைரவர், சிறுத்தொண்ட நம்பி, வெண்காட்டு நங்கை, சீராளதேவர் இவர்தம் செப்புத்திருமேனிகள் எடுப்பிக்கப்பெற்றன; பல ஆடையணிகள் வழங்கப் பெற்றன.*[45]

*10. திருமழபாடிக் கோவிலில் பிள்ளையார் ஞானசம்பந்தடிகள், திருநாவுக்கரைய தேவர், நம்பி ஆரூரனார் திருமேனிகள் வைக்கப்பெற்றன.*[46]

*முதல் இராசாதி ராசன் காலத்தில் (கி. பி. 1046-ல்) திருவொற்றியூர்க் கோவிலில் 62 நாயன்மார் திருமேனிகள் எழுந்தருளப் பெற்றன; தினப்பூசைக்காக 75 கலம் நெல் தரப்பட்டது.*[47]

*11. திருநல்லம் கோவிலில் சண்டேசர்க்குத் தனிக் கோவில் இருந்தது.*[48]

---

[42] Ibid. 29.

[43] Ibid. 38.

[44] Ibid. 40.

[45] Ibid. 43 & 44.

[46] 37 of 1920.

[47] 137 of 1912.

[48] 658 of 1909.

12. திரு ஆரூர்ப் பூங்கோவிலில் ஆளுடைய நம்பி, பரவை நாச்சியார் திருமேனிகள் இருந்தன. அவற்றின் பூசைக்காகச் சிற்றூர் ஒன்று தானமாக விடப்பட்டது.[49]

13. திருக்கழுமலம் (சீகாழி) கோவிலில் சம்பந்தர்க்குத் தனிக்கோவில் இருந்தது. அதற்குப் பூசைகள் குறைவற நடந்தன.[50]

14. மேற்சொன்ன ஆளுடைய பிள்ளையார் கோயிலுக்குள் மங்கையர்க்கரசியார்க்குத் தனிச் சிறு கோவிலும் இருந்தது.[51]

15. திருவாரூர்க் கோவிலில் திருநாவுக்கரசர் திருமேனி எழுந்தருளப் பெற்றிருந்தது. அதற்கு முன் விளக்கெரிக்க நிலதானம் செய்யப்பட்டது.[52]

இவை கல்வெட்டுகளால் அறியப்பெற்ற செய்திகள். கல்வெட்டுகளில் குறிக்கச் சந்தர்ப்பம் நேராத நிலையில் பல கோவில்களில் நாயன்மார் திருமேனிகள் இருந்திருக்கலாம் அன்றோ? சம்பந்தர் கோவில் சீகாழியிலும், அப்பர் கோவில் திருவதிகையிலும், சுந்தரர் திருமேனி திருவாரூரிலும், சிறுத்தொண்ட நம்பிக்குச் செங்காட்டங்குடியில் விழாவும்[53] இருந்தமை நோக்க, அந்தந்த நாயன்மார் வாழ்ந்த அல்லது பிறந்த இடத்துக் கோவிலில் அவர் திருமேனி எழுந்தருளப் பெற்றிருந்தது என்பதை உறுதியாக நம்பலாம் அன்றோ?

## திருப்பதிகம் ஓதப்பெற்ற கோவில்கள்

கோவில்களில் திருப்பதிகம் ஓதும் வழக்கம் சுந்தரர் காலத்திலேயே இருந்தது என்பதைத் திருவல்லம், திருமுட்டம் கல்வெட்டுகளால் நன்கறியலாம் என்பதைச்

---

49 S. I. I. VII. 485.
50 380 of 1918.
51 375 of 1918.
52 137 of 1934.
53 58 of 1913.

சென்ற பகுதியிற் கூறினோம் அல்லவா ? அப்பழக்கம் பல்லவர் காலமுதலே வந்ததாகும் என்பதை இராசராச னுக்கு முற்பட்ட கல்வெட்டுகளும் குறிக்கின்றன.

1. திருவெறும்பியூர்க் கோவிலில் உடுக்கை, தாளங்க ளுடன் திருப்பதிகம் ஓதப்பட்டது. [54]

2. திருப்பழுவூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓது வார்க்கு நிலம் விடப்பட்டது. [55]

3. திரு ஆவடுதுறையில் திருப்பதிகம் ஓத மூவர் இருந்தனர். [56]

4. திருத்தவத்துறையில் நாளும் மூன்றுவேளை ஓத இரண்டு பிராமணர் இருந்தனர். [57]

5. ஆத்தூர்க் கோவிலில் நாளும் திருப்பதிகம் ஓதப்பட்டது. [58]

6. குமாரவயலூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓதப் பெண்கள் மூவர் பொருள் உதவினர். [59]

7. அந்துவ நல்லூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓதப் பெற்றது. [60]

இராசராசன் காலத்தில்

8. குஹூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓதப்பட் டது [61]

9. வட ஆர்க்காட்டுப் பிரம்மதேசம் கோவிலில் திருப்பதிகம் ஓதினவர்க்கு நிலம் விடப்பட்டது. [62]

---

54 129 of 1914.
55 349 of 1918.
56 139 111, 1925.
57 99 of 1929.
58 373 of 1903.
59 149 of 1937.
60 S. I. I. 3. 139.
61 275 of 1917.
62 199 of 1915.

10. திருமுதுகுன்றம் கோவிலில் திருப்பதிகம் ஓதி னவர்க்கு நிலதானம் செய்யப்பட்டது.[63]

11. திருவீழிமிழலையில் நாளும் இருமுறை திருப்பதி கம் ஓதப்பட்டது.[64]

12. குமார வயலூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓதுவார்க்கு மானியம் விடப்பட்டது.[65]

13. திருநல்லம் கோவிலில் திருப்பதிகம் ஓத இருவர் இருந்தனர்.[66]

14. தஞ்சைப் பெரிய கோவிலில் 48 ஓதுவார் நியமனம் பெற்றனர்.[67]

இறுதியிற் சொன்ன 48 பேரும் பல தளிகளி லிருந்து தஞ்சைப் பெரிய கோவிலில் ஓதுவாராக நிய மனம் பெற்றவராவர். அவர்கள் திருவாஞ்சியம், திரு வெண்ணுவல், திருவாரூர், திருவாய்மூர், திருமறைக்காடு, திருவையாறு, திரு இடை மருதூர், திருவெண்காடு, தில்லை, சீகாழி முதலிய பல ஊரினர் என்பது அவர்கள் பெயர்களால் விளக்கமாகின்றது.[68] அவர்கள் அவ் வூர்க் கோவில்களில் ஓதுவாராக இருந்து சிறப்புற்றவ ராதலின், இராசராசன் அவர்களைத் தான் கட்டிய பெரிய கோவிலில் அமர்த்தினன். எனவே, இராசராசன் காலத்தில் மேற்சொன்ன பல கோவில்களிலும் ஓதுவார் இருந்தனர் என்பது தெளிவாகின்றதன்றோ?

பிற்பட்டவர் காலத்தில்—

1. தென்னேரி,[69] உடையலூர்[70], தென் திருக்காளத்தி (துக்கச்சி),[71] திருச்சோற்றுத்துறை,[72]

---

[63] 40 of 1918.
[64] 423 of 1908.
[65] 146 of 1937.
[66] S. I. I. 2. 65.
[67] 624 of 1909.
[68] S. I. I. 2. 65.
[69] 224 of 1922.
[70] 306 of 1927.
[71] 6 of 1918.
[72] 194 of 1931.

இறையா நறையூர் (எல்வானுசூர்) [73], திருமறைக்காடு [74], ஈழூர், [75] முதலிய ஊர்க்கோவில்களில் திருப்பதிகம் ஓதப்பெற்றது. திருவொற்றியூர்க் கோவிலில் திருப்பதிகம் ஓத 16 தேவரடியார் இருந்தனர். [76] விக்கிரம சோழன் காலத்தில் திரு ஆமாத்தூரில் நூநடர் பதினறு பேர் திருப்பதிகம் நாளும் மும்முறை பாடிக்கொண்டிருந்தனர். [77] இராசேந்திரன் ஆட்சியில் தில்லையில் மாசித்திங்கள் விழாவில் திருத்தொண்டத்தொகை பாடப்பெற்றது. [77a] இவ்வரசன் காலத்தில் தேவார நாயகம் என்ற அரசியல் உத்யோகஸ்தன் இருந்தான். அவன் தேவாரப் பள்ளிகளை அல்லது கோவில்களில் தேவார ஓதுவார்களைக் கவனிக்கும் அதிகாரியோ, என்னவோ, தெரியவில்லை.

## நடன மாதரைப் பெற்றிருந்த கோவில்கள்

தஞ்சைப் பெரிய கோவிலில் ஆடல்-பாடல்களுக்காக இராசராசன் தமிழகத்துக் கோவில்களில் இருந்த பண்பட்ட நடிகமாதர் 400 பேரைத் தேர்ந்து எடுத்து அமர்த்தினன்; ஒவ்வொருவர்க்கும் ஒரு வீடும் ஒரு வேலி நிலமும் அளித்தான். அந்தந்த ஊர்க் கோவில்களிலிருந்து அந் நடனமாதர் வந்தனர் என்பதைத் தஞ்சைப் பெரியகோவில் கல்வெட்டு விளக்கமாகக் கூறக் காணலாம். [78] இதனால் இராசராசன் காலத்தும் அவனுக்கு முன்பு தமிழ்நாட்டுப் பெரும்பாலான கோவில்களில் நடனமாதர் இருந்தனர் என்பது வெள்ளிடை மலைபோல் விளங்கா நிற்கின்றது. இங்ஙனமே பல தளிகளில் வேலைபார்த்துவந்த கோவிற்

---

[73] 165 of 1006.
[74] 422 of 1904.
[75] 12 of 1905.
[76] 128 of 1912.
[77] S. I. I. VIII. 740.
[77a] S. I. I. IV. 223.
[78] S. I. I. 2. 66.

பணியாளர் தஞ்சைப் பெரிய கோவிலில் அமர்த்தப் பட்டனர். [79]

## கல்லூரிகள்

சோழர் ஆட்சியில் வடமொழிக் கல்வி உயர்தர முறையில் போதிக்கச் சில கல்லூரிகள் இருந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை - எண்ணாயிரம், திரிபுவனை, திருமுக்கூடல், திருஒற்றியூர், வேம்பற்றூர் இவ்விடங்களில் இருந்தவையாகும். [80] இவை அல்லாமல் திரு ஆவடு துறை மடம் ஒன்றில் மருத்துவ மாணவர் மருத்துவக் கல்வி பயின்றனர் என்பதைக் குறிக்கிறது. அதே மடத்தில் ரூபாவதாரம் முதலிய வடமொழி நூல்கள் கற்பிக்கப் பட்டன. இவற்றால் கல்லூரிகள், மடங்கள் என்பன சிறப்பாக வடமொழிக் கல்வியைப் பரப்பின; தமிழகம் முழுவதும் இருந்த மடங்கள் தமிழ்க் கல்வியையும் சிறப்பாகச் சமயக் கல்வியையும் பரப்பின என்னலாம். [81]

## கோவில்களில் விளக்கப்பெற்ற நூல்கள்

பாரதம், இராமாயணம், பிரபாகரம், சிவதருமம், இராசராச விஜயம் என்பன கோவில்களில் படித்து விளக்கப்பெற்றன என்பது கல்வெட்டுகளால் தெரிகிறது. [82] முதற் குலோத்துங்கன் காலத்தில் நீடூர்க் கோவிலில் 'புராண நூல் விரிக்கும் புரிசை மாளிகை' ஒன்று கட்டப் பட்டது என்பது தெரிகிறது. [83]

---

79 Ibid. 66, 69.

80 333 of 1917, 176 of 1919, 182 of 1915, 202 of 1912, 293 of 1908.

81 K. A. N. Sastry's 'Cholas', Vol. 2. part 1. pp, 464, 471.

82 S. I. I. vi. 12, 48 of 1923, 333 of 1923, 214 of 1911, 327 of 1916, 120 of 1931.

83 535 of 1921

## நரலோக வீரன் திருப்பணிகள்

இவன் தொண்டைநாட்டு மணவிற் கோட்டத்து அரும்பாக்கம் என்ற சிற்றூரினன்; மணவிற் கோட்டத்தை ஆண்டவன்; பொன்னம்பலக் கூத்தன், காலிங்கன், மாறுவதாரன், பொற்கோயில் தொண்டைமான், நரலோக வீரன், அருளாகரன் என்ற பெயர்களை உடையவன். இவன் முதற் குலோத்துங்கன் ஆட்சியில் சிறந்த சேனைத் தலைவனாக இருந்தவன்; விக்கிரம சோழன் ஆட்சி முற்பகுதியிலும் இருந்தவன். இவன் சிறந்த சிவபக்தன். இவன் சித்தலிங்க மடத்தில் சிவனுறையும் கற்றளி ஒன்று கட்டினான்;[84] அதைச் சுற்றிப் பிராகாரமும் ஒரு மண்டபமும் அமைத்தான்;[85] திருப்புலிவன ஈசற்கு விளக்கெரிக்க 12 கழஞ்சு பொன் அளித்தான்;[86] திரிபுவனை ஈசற்கு நிலங்கள், மண்டபம், நந்தவனங்கள் இவற்றை அமைத்தான்;[87] திருப்புகலூரில் 'நரலோக வீரன்' என்ற தன் பெயரால் மண்டபம் ஒன்று கட்டினான்.[88]

இவன் தில்லையில் செய்த திருப்பணிகள் பல: (1) இவன் தெருக்களில் விளக்குகள் போடச் செய்தான்; (2) விழாக் காலங்களில் தெருக்களில் நீர் தெளிக்க ஏற்பாடு செய்தான்; (3) சிறந்த முறையில் ஒரு லக்ஷம் பாக்கு மரங்கள் கொண்ட நந்தவனம் ஒன்றை அமைத்தான்; (4) தில்லைக்கும் கடலுக்கும் நடுவில் பெரிய அகன்ற சாலையை அமைத்தான்; கடற்கரையில் மாசி மகத்தின்போது நடராசப் பெருமான் தங்குவதற்காக மண்டபம் ஒன்று சமைத்தான்; கோவிலில் தினந்தோறும் எரியச்செய்தான்; (16) கூத்தப்

---

84 367 of 1909.
85 369 of 1909.
86 207 of 1923.
87 175 of 1919.
88 97 of 1928.

அதன் அருகில் தூய நன்னீர்க்குளம் ஒன்றைத் தொட்டான்; அதன் கரையில் பெரிய ஆலமரம் ஒன்றை வளர்த்தான். (5) கோவிலைச் சுற்றிப் பெரிய மதிலை, 'நரலோக வீரன்' என்ற தன் பெயரால் எழுப்பினான்; அதன்மேல் இரண்டு கோபுரங்கள் வானளாவத் தோன்றின. (6) இவன் நூற்றுக்கால் மண்டபம் ஒன்று அமைத்தான்; (7) கோவில் குளத்தின் நான்கு பக்கங்களிலும் படிகள் அமைத்தான்; (8) கோவிலின் தென்வாயிலின் இருபுறங்களிலும் மங்கல விளக்குகள் எரியச் செய்தான்; (9) தில்லைவாழ் அந்தணர்க்கு வள்ளலாய் விளங்கினான்; (10) திருஞான சம்பந்தர் தேவாரத்தை ஓதுவதற்கென்று அழகிய மண்டபம் ஒன்றை அமைத்தான்; (11) பேரம்பலத்தைச் செப்புத் தகடுகளால் அழகு செய்தான்; (12) நடராசன் பிக்ஷாடன யாத்திரையில் வெளிச்செல்ல ரிஷபவாகனம் ஒன்றை அமைத்தான்; (13) இறைவன் ஊர்வலம் சென்று மீளலை அறிவிக்கப் பொன் ஊதுகுழலைச் செய்தளித்தான்; (14) கோவிலில் பத்து விளக்குகள் தன் பெயரால் எரிய ஏற்பாடு செய்தான்; பொற்குடம் ஒன்று, சம்பந்தர் படிமம் ஒன்று, அதற்குரிய அணிகள் பல இவற்றை அளித்தான்; (15) கோவிலில் உள்ள சிறு கோவில்கள் அனைத்திலும் ஆண்டு தோறும் அபிடேகங்கள் செய்யப் பொன் அளித்தான்; (16) அம்மன் கோவில் திருச்சுற்று, மண்டபம், உயரமான கல்மதில் இவற்றை அமைத்தான்; கூத்தாடும் பெருமானுக்கு ஏற்ற முறையில் அம்மனை ஆடை அணிகளால் அலங்கரித்தான்; (17) உமையாள் அனைவர்க்கும் தாய் என்பதை அறிவிக்கக் குழந்தைகட்குப் பாலும் எண்ணெயும் வழங்க அழியாத முறையில் பொருளும் நிலமும் வழங்கினான்; (18) மூவர் தேவாரத்தையும் செப்பேடுகளில் எழுதுவித்தான்.[89]

[89] S. I. I. IV. 225 (Sanskr   es 31 and Tamil verses 36); 120 of 1888.

இப் பேரருளாளன் திருவதிகையிற் செய்த திருப்பணி களும் குறிக்கத் தக்கவை: (1) திருவதிகைக் கோவிலில் மண்டபம் ஒன்றைக் கட்டினான்; (2) மாளிகை ஒன்றை அமைத்தான்; (3) நூற்றுக்கால் மண்டபம் ஒன்றைக் கட்டினான்; (4) அகன்ற திருச்சுற்றை அமைத்தான்; (5) நடன மண்டபம் ஒன்று நிருமித்தான்; (6) திருநாவுக் கரசர் மடத்திற்கு 48 ஆயிரம் குழி நிலம் தானம் செய் தான்; (7) இறைவற்கும் இறைவிக்கும் ஆடை அணிகள் அளித்து மகிழ்ந்தான்; (8) கோவில் மடைப்பள்ளியைக் கற்களால் கட்டினான்; (9( அம்மனது காமக்கோட்டத்தை அமைத்தான்; (9) வளஞ்சிறந்த நந்தவனம் அமைத்தான்; (10) பத்தாயிரம் பாக்கு மரங்கள்கொண்ட தோப்பைக் கோவிலுக்காக உண்டாக்கினான்; (11) கோவிற்கு 500 பசுக்களைத் தானம் செய்தான்; (12) இரண்டு திருக் குளங்கள் எடுப்பித்தான்; (13) கோவிலுக்கு இறையிலி யாக நிலங்களை விட்டான்; இறைவர்க்குப் பொன் பாத் திரங்கள் பல செய்தளித்தான்; (15) பெருமானுக்கு ஆடரங்கை அமைத்தான்; (16) திருநாவுக் கரசர்க்குத் தனிக் கோவில் கட்டினான்; (17) யாக மண்டபம் ஒன்றை நிருமித்தான். இங்ஙனம் திரு அதிகையைப் பல்லாற்றானும் சிறப்புறச் செய்தான். [90]

திருக்கைக் கோட்டி

நரலோக வீரன் தில்லையில் சம்பந்தர்தேவாரம் ஓத மண் டபம் கட்டினமை மேலே கூறப்பட்டதன்றோ? இம்முறை பிறகோவில்களிலும் இருந்தன என்பது கல்வெட்டுகளால் தெரிகிறது. சீகாழியில "ஆளுடைய பிள்ளையார்—திரு மாளிகைத் தமிழ் விரகர் கண்டு இக்கோயில் திருக்கைக்

[90] 369 of 1921, 25 verses in Tamil, See them in Sen Tamil, Vol. 23, pp. 93—100; also Perundokoi Nos. 1095—1119.

கோட்டியில் எழுந்தருளி யிருக்கிற திருமுறைகள் திருக்காப்பு நீக்கி அழிவுள்ளன எழுந்தருளுவிக்கவும், திருமுறைகள் எழுந்தருளுவித்தும், திருமுறைகள் பூசித்தும் இருக்கைக்கு இவ்வூர் இறையிலியாக விட்ட நிலம்......"[91] என்ற கல்வெட்டுச் செய்தி காண்க. இஃது இரண்டாம் குலோத்துங்கனது நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு. இதனில், திருமுறைகள் புதியனவாக வைக்கப்பட்டன என்பதோ, மண்டபம் புதிதாகக் கட்டப்பட்டது என்பதோ குறிக்கப் படாமை காண்க. ஆகவே, இப்பழக்கம் இரண்டாம் குலோத்துங்கற்கு முற்பட்டது என்பது உறுதிப்படும். இக் கல்வெட்டினால் சீகாழி ஆளுடைய பிள்ளையார் கோவிலில் 'திருக்கைக் கோட்டி' என்ற மண்டபம் இருந்தது; அதனில் திருமுறைகள் வைத்துப் பாதுகாக்கப்பட்டன; அழிந்தன புதுக்கவும், நாடோறும் பாடவும், பூசிக்கவும் ஒருவர் இருந்தனர்; அவர் தமிழ் விரகர் எனப்பட்டார்; அவர் கோவிலாளரால் மானியம் பெற்று வாழ்ந்தார் என்பன அறியக் கிடக்கின்றன.

சேக்கிழார்க்குப் பிற்பட்ட சோழர் ஆட்சியிலும் திருக்காராயில், திருவீழி மிழலை, திருவுசாத்தானம் போன்ற[92] இடங்களில் இத்தகைய மண்டபங்கள் இருந்தன; சில புதியனவாகக் கட்டப்பட்டன; அவற்றில் திருமுறைகள் ஓதப்பெற்றன என்பது கல்வெட்டுகள் உணர்த்தும் செய்தியாகும். ஆகவே, இப்பழக்கம் திருமுறைகள் தொகுக்கப்பெற்ற இராசராசன் காலந்தலே உண்டாகி வளர்ந்து வந்திருத்தல் வேண்டும் என்று கோடல் பொருத்தமாகும்.

---

[91] 381 of 1918.

[92] 203, 414 and 454 of 1908.

## நாயன்மார் சிற்பங்கள்

கடம்பூர் என்பது காட்டு மன்னார்க்குடிக்கு 5 கல் தொலைவில் உள்ளது. அது மேலைக் கடம்பூர், கீழக் கடம்பூர் என இன்று இரண்டாகப் பிரிந்துள்ளது. பழைய காலத்தில் இவ்விரண்டு பகுதிகளும் ஒன்றாகவே இருந்தன. அப்பர் மேலைக் கடம்பூர்க் கோயிலைக் 'கரக் கோயில்' என்றும், கீழக் கடம்பூர்க் கோவிலை 'இளங் கோயில்' என்றும் பதிகத்திற் குறித்துள்ளார். மேலைக் கடம்பூர்க் கோவிலின் கர்ப்ப இல்லின் மேற்குப் பக்கத்தில் திருமால் படிவமும், இரண்டு கைகளையுடைய வாயிற் காவலர் படிவங்களும் இருக்கின்றன. ஆதலின், இக் கற்கோவில் பல்லவ மன்னர் காலத்தில் கட்டப்பெற்றதாகும் என்னலாம்.[93] கர்ப்ப இல்லம் தேர்போன்ற அமைப்புடையது. அதன் மூன்று சுவர்களிலும் இரண்டு வரிசைகளில் 63 நாயன்மார் வரலாற்று நிகழ்ச்சிகள் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் காரைக்கால் அம்மையார் தலைகீழே நடந்து செல்வது போன்ற காட்சி ஒன்று.[94] இவ்வாழ்க்கைச் சிற்பங்கள் பல்லவர் காலத்தில் உண்டானவை என்று திட்டமாகக் கூற முடியாதாயினும், நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதிக்குப் பிறகேனும் செதுக்கப்பட்டவை என்று கோடல் தவறாகாது.

## கீழக் கடம்பூர்ச் சிற்பங்கள்

இக்கோவில் இன்று அழிந்த நிலையில் இருக்கின்றது. இதன் சிதைவுகளே எஞ்சி இருக்கின்றன. கர்ப்ப இல்லம் ஒன்றே இருக்கின்றது. பூசை இல்லை. இக் கோவிலின் கற்சிலைகள் பல ஊருக்குள் உள்ள காளி கோவிலில் வைக்கப்பட்டுள்ளன. கர்ப்ப இல்லைச் சுற்றிலும் புறச் சுவரில் புரைகள் இருக்கின்றன. அவை முறையே பெரிய

---

[93] Tamil Polil, Vol. 16, p. 233

[94] I visited this place on 27-4-1943.

வையாகவும் சிறியவையாகவும் இருக்கின்றன. அப் புரைகளில் உருவச் சிலைகள் வைக்கப்பட்டிருந்தன போலும்! அவற்றின் கீழே அச்சிலைகளின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் குறிக்கத்தக்கவை - 1. ஆனை உரித்த தேவர் 2. இலிங்க புராண தேவர் 3. சந்திர சேகர தேவர் 4. கால கால தேவர் 5. உலகாண்ட மூர்த்தி [95] (மூர்த்தி நாயனார்), 6. முருகாண்டார் (முருக நாயனார்), 7. அர்த்த நாரீச தேவர் 8. திருக்குறிப்புத் தொண்டர் 9. தண்டிப் பெருமாள் 10. அறுவர் அமுதை ஆண்டார் (முருகன்) 11. ஆனை ஆண்டார் (விநாயகர்) 12. சந்தியா நிருத்த தேவர் என்பன. இவையே நாம் படிக்கக்கூடிய நிலையில் உள்ள கல்வெட்டுகள். மற்றப் புரைகளின் அடியில் இருந்த எழுத்துகள் அழிந்துவிட்டன. [96] இக் கல்வெட்டு எழுத்துகள் முதலாம் இராசராசன் காலத்தனவாகக் காண்கின்றன. [97] எனவே, இந்நாயன்மார் உருவச்சிலைகள் இராசராசன் காலத்தன என்று கோடல் பொருத்தமே ஆகும்.

## கங்கைகொண்ட சோழபுரம்

இவ்வூரில் இராசேந்திர சோழனால் கட்டப்பெற்ற கங்கைகொண்ட சோழேச்சுவரம் பார்க்கத்தக்கது. அதன் சுற்றுச் சுவர்களும் கோபுரமும் பழுதுபட்ட நிலையில் உள்ளமை வருந்தற்குரியது. இங்குள்ள சிற்பங்கள் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே ஈர்க்கத்தக்கவை. அவற்றுள் நமக்குத் தேவையானவை சிலவே ஆகும். அவையாவன :—1. கருப்ப இல்லுக்குச் செல்லும் வடக்கு வாயில் படியில் இன்று செய்தாற்போல் உள்ள சண்டேசர் உருவம். சிவபெருமான் உமாதேவியாருடன் இருந்து

---

95 'மும்மையால் உலகாண்ட மூர்த்தி' — சுந்தரர் திருத்தொண்டத் தொகை.

96 I visited this place on 27-4-1943.

97 Tamil Polil, Vol. 16, p. 234.

சண்டேசர் முடியில் தம் கொன்றை மாலை சூடி அவருக்குச் சண்டேசப் பதம் தரும் காட்சியை விளக்கும் அச்சிற்பம் கண்டு கண்டு இன்புறத் தக்கது. அதனைப் படத்திற் காண்க.

2. மூல லிங்கத்தை நோக்கியபடி யுள்ள அர்த்த மண்டபச் சுவரில், சண்டேசர் வரலாறு நான்கு வரிசைகளில் செதுக்கப்பட்டுள்ளது.

3. முக மண்டபத்தில் சம்பந்தர் உருவச்சிலை இருக்கின்றது. [98]

இச் சிற்பங்களின் காலம் என்ன?

இப்பெரிய கோவிலில் 63 நாயன்மாருள் சண்டேசர் ஒருவரைப்பற்றிய சிற்பங்களே காண்கின்றன என்பது கவனிக்கத்தக்கது. அர்த்த மண்டபச் சுவரில் நான்கு வரிசைகளில் சண்டேசர் வரலாறு சிற்பங்கள் வாயிலாக விளக்கப்பட்டிருத்தலை நோக்க, அவை கோவில் கட்டப் பெற்ற காலத்திலேயே செதுக்கப் பெற்றன எனக் கோடலே தகும். அங்ஙனமே கோவிலின் ஒவ்வொரு வாயிலிலும் உள்ள அழகொழுகும் சிற்பங்களும் இராசேந்திரன் காலத்திற்றானே செய்யப்பெற்றனவாதல் வேண்டும். தன் தந்தை கட்டிய தஞ்சைப் பெரிய கோவிலில் சண்டேசர் வரலாறு இரண்டு வரிசைச் செப்புச் சிலைகளால் விளக்கப் பட்டதை அறிந்த இராசேந்திரன் தான் கட்டிய கோவிலில் அதனை வரிசைகளில் விளக்கி, மேலும் சண்டேசப் பதத்தை யாவரும் தெளிவுறக்கண்டு நற்பேறுபெற வாயிலருகில் அமைத்தனன் எனக் கோடலே பொருந்தும். இவ்விறுதிச் சிற்பம் கோவில் கட்டப்பெற்ற காலத்தே செய்யப்பட்ட தென்பதைப் பிற சிற்பங்கட்கும் இதற்கும் உள்ள வேலை அமைப்பைக் கொண்டும் தெளிவாக வுணர

---

[98] I visited this temple on 25-4-1943.

லாம். மேலும், அங்குச் சண்டேசர் தனிக் கோவிலில் உள்ள சிற்பத்தைக் கொண்டும் இவ்வுண்மை உணரலாம்.

## நாயன்மார் பற்றிய ஓவியங்கள்

தஞ்சைப் பெரிய கோவில் இறைவன் உள்ளறை மேலைப் புறச்சுவர்[99] மீது காணப்படும் சோழர் கால ஓவியங்களிற் சிறப்பாகக் குறிக்கத் தக்கவை:—

1. கயிலையில் சிவபிரான் இருத்தல்.

2. சுந்தரரை இறைவன் தடுத்தாட்கொண்ட வரலாறு.

3. சுந்தரர் யானைமீதும் சேரமான் குதிரைமீதும் கயிலை செல்லல்.

4. கந்தர்வர் அவ்விருவர்மீதும் மலர் மழை பொழிந்து இசை முழக்கல்.[100] இனி இவற்றை ஓவியங்களிற் கண்டவாறு விளக்குவோம்:—

1. இது மேற்சொன்ன நான்கிலும் மேலே இருப்பது. இதனில் சிவபிரான் மான்தோல்மீது யோக நிலையில் காண்கிறார். அவரைச் சுற்றிலும் பக்தரும் கணங்களும் காண்கின்றனர்.

2. ஒரு மண்டபத்தில் இளைஞரும் முதியரும் கூடியுள்ளனர். அவர்கள் மறையவர். அவர்கட்கு இடையில் இருவர் எதிர் எதிராக நிற்கின்றனர். அவருள் ஒருவர்

---

[99] The south and east walls continue to be as sealed book. A further exploration of those walls will certainly bring many more paintings to light." — S. K. G. Pillai's article, The Journal of the Annamalai University, Vol. II. No. I.

[100] I have seen those frescoes on 24—9—1939 with Mr. J. M. Somasundaram Pillai, the executive Officer of the Temple. Those frescoes were first brought to the notice of the public by my friend the late lamented scholar Mr. S. K. G. Pillai of the Annamalai University.

கிழவர். அவர் முதுகு வளைந்துள்ளது. அவரது ஒரு கையில் தாளங்குடை உள்ளது. மற்றொரு கையில் பனை ஓலை இருக்கின்றது. அவருக்கு எதிர் நிற்பவர் இளைஞர். அவர் அடக்கத்துடன் நிற்கின்றார். கூட்டத்தினர் முகத்தில் வியப்பும் திகைப்பும் வழிகின்றன. இக் கூட்டத்தினர்க்கு வலப்பக்கம் ஒரு கோவிலின் விமானம் தீட்டப்பட்டுள்ளது. மண்டபத்திற் குழுமியிருந்த மறையவர் அக் கோவிலுக்குள் அவசரமாக நுழைகின்றனர்.

3. வெள்ளானை பூணிட்ட நான்கு கோடுகளுடன் காண்கிறது. அதன்மீது தாடியுடைய இளைஞர் ஒருவர் இவர்ந்து செல்கிறார். அவர் கைகளில் தாளம் இருக்கிறது. இக்காட்சிக்கு வலப்பக்கம் விரைந்து செல்லும் குதிரை ஒன்று காட்சி அளிக்கிறது. அதனமீது அழகும் கட்டமைந்த உடலும் கொண்ட ஒருவர் காண்கிறார். யானையும் குதிரையும் நீரில் நடந்து செல்கின்றன. நீரில் அலைகளும் மீன்களும் தெளிவாகக் காண்கின்றன[100]

4. இவ்விரு காட்சிகட்கும் மேற்புற மூலைகள் இரண்டிலும் கந்தர்வர் பலர் காண்கின்றனர். அவருள் ஒரு பகுதியார் கரிமீதும் பரிமீதும் வருபவர்மீது மலர் மழை பொழிகின்றனர்; மற்றப் பகுதியார் பல்லியங்களைக் களிப்புடன் ஒலிக்கின்றனர்.

---

[100] சுந்தரர் கயிலாயத் தருகிற் பாடிய திருநொடித்தான் மலைப் பதிகத்தை,

"ஆழி கடல் அரையா! அஞ்சையப்பர்க் கறிவிப்பதே"

என்று சொல்லிக் கடல் அரசனிடம் அனுப்பியதாக அவர் வாக்காலே தெரிகிறோம். எனவே, சுந்தரரும் சேரரும் கடல் வழியாகச் சென்றனர் என்பது தெரிகிறது. சேரமான் இஸ்லாத்தைத் தழுவிக் கடல் வழியே மெக்காவுக்குச் சென்றார் என்ற கூற்று மலையாள நாட்டில் வழங்கி வருவது. அக் கூற்றும் கடல்வழிச் செலவையே குறித்தல் இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது.

—Vide C. M. R. Chettiar's article, Sen Tamil Selvi, Vol. 9, pp. 202—203

## இவ்வோவியங்களின் காலம் என்ன ?

தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டியவன் முதல் இராசராசன். அவன் காலத்திற்றான் அக்கோவிலில் அப்பர், சம்பந்தர், சுந்தரர், பரவையார், சண்டேசர் படிமங்கள் எழுந்தருளப் பெற்றன. அவன் மகனை இராசேந்திரன் ஆட்சித் தொடக்கத்தில் அதே கோவிலில் மிலாடுடையார், சிறுத்தொண்டர் வரலாற்றை உணர்த்தும் படிமங்கள் எழுந்தருளப் பெற்றன. இங்குச் சண்டேசர் வரலாறு, சிறுத்தொண்டர் வரலாறு இவற்றை உணர்த்தத்தக்க பல படிமங்கள் வரிசையாக வைத்தமை நோக்கத்தக்கது. முதல் இராசேந்திரன் கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைநகரமாகக் கொண்ட பிறகு, தஞ்சை பொலிவிழந்தது; பின்வந்த அரசர் அனைவரும் கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்தே அரசாண்டனர்; அவர்கள் காலத்திய கல்வெட்டுகள் பெரிய கோவிலில் ஒன்றிரண்டே காண்கின்றன. புதிய தலைநகரம் ஏற்பட்ட பிறகு அதற்கு அணித்தே சுமார் 25 கல் உள்ள தில்லையே பெருஞ் சிறப்பு அடையத் தொடங்கியது. இத்தகைய பல காரணங்களை நோக்குழி, மேற்கூறிய ஓவியங்கள் பெரிய கோவிலைக் கட்டியவனும், திருமுறைகள் வகுத்தவனுமான இராசராசன் காலத்தன எனக் கோடலே பெரிதும் பொருத்தமாகும்.

சுந்தரரும் சேரமானும் வான் வழியே கயிலை சென்றனர் என்பது சேக்கிழார் கூற்று.[102] இதற்கு மாறாகக் கடல்வழிச் செலவையே தஞ்சைப் பெரிய கோவில் ஓவியம் தெளிவாகத் தெரிவிக்கிறது. பெரிய புராணத்திற்குப் பிறகு இஃது எழுதப்பட்டிருப்பின் வான்வழியே காட்டப் பெற்றிருக்கும். அங்ஙனம் இன்மையால், இது பெரிய புராணத்திற்கு முற்பட்டதென்பதே பொருத்தமாகும். ஆயின், சுந்தரர்-சேரமான் கடற்செலவை நம்பியும் குறித்திலர். அங்ஙனம் இருந்தும், இவ்வளவு தெளிவாகக் கடற்செலவு குறிக்கப்பட்டிருத்தல், சேக்கிழார்க்கு முன் நாட்டில் வழங்கிய சுந்தரர்-சேரமான் கடற்செலவைப் பற்றிய வழக்கு வன்மையை உணர்த்துவதாகும் என்று கொள்ளலாம்.

---

102 Vellanaicharukkam, S. 35.

## மக்கள் கொண்ட நாயன்மார் பெயர்கள்

பல்லவர் காலத்திலேயே நாயன்மார் பெயர்களை மக்கள் இட்டு வழங்கினர் என்பது சென்ற பகுதியிற் காட்டப்பட்டதன்றோ? அப்பெயர்கள் சோழர் காலத்தில் மிகுதியாகப் பயின்றன என்பது கல் வெட்டுகளால் அறியக்கிடக்கிறது. இவை பற்றிய விளக்கத்தைப் பின்வரும் பக்கங்களிற் காண்க.

### மிலாடுடையார்

| | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | பெயரும் பிற குறிப்புகளும் | சான்று |
|---|---|---|---|---|
| 1. | திருநாகேச்சரம் | ஆதித்தன் I ஆண்டு 2 | மிலாடுடையார் பள்ளி | 222 of 1911; S. I. I. 3. 91. |
| 2. | திரு ஆமாத்தூர் | ,, (3) | சித்தவடவன் என்ற விக்ரம சோழ மிலாடுடையார் | 29 of 1922. |
| 3. | கோவலூர் (திருக்கோவலூர்) | ,, (4) | (சிற்றரசன்) விக்ரம சோழ மிலாடுடையார் | 7 of 1905. |

| | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | பெயரும் பிற குறிப்புகளும் | சான்று |
|---|---|---|---|---|
| 4. | | பரகேசரி ஆண்டு 2 | செம்பியன் மிலாடுடையார் | S. I. I. 7-900. |
| 5 | | பராந்தகன் I ஆண்டு 28 | மிலாடுடையார் கயிலூர் பெருமானார் | 279 of 1909. |
| 6 | கிழூர் | இராசேந்திரன் I ஆண்டு 3 | அருமொழிதேவ மிலாடுடையார் | 13 of 1905 |

| | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | பெயரும் பிற குறிப்புகளும் | சான்று |
|---|---|---|---|---|
| 7. | ,, | இராசேந்திரன் I ஆண்டு 4 | உத்தமசோழ மிலாடுடையார் | 20 of 1905 |
| 8. | காளத்தி | ஆண்டு 12 | கங்கைகொண்ட சோழ மிலாடுடையார் | 29 of 1904. |
| 9. | திருக்கோவலூர் | இராசேந்திரன் II ஆண்டு 6 | மிலாடுடையார் * நரசிங்கபன்பர் | 123 of 1900 Ep. Ind. 7-pp. 145-6. |

* 'நரசிங்க வர்மர் என்று அபிடேகம பண்ணி முடிகவித்த மிலாடு 2000 பூமியும் ஆண்ட மிலாடுடையார் நரசிங்கபன்மர்'—123 of 1900.

## ஞானசம்பந்தன் - புகலி வேந்தன், முதலியன

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் பெயர் | சான்று |
|---|---|---|---|---|
| | புகலி வேந்தன் | திருமுருகன் பூண்டி | விக்ரமன் காலம் | 97 of 1916. |

## மூர்க்க நாயனர்

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் பெயர் | சான்று |
|---|---|---|---|---|
| | மூர்க்கன் ஐயாறன் | பெரிய கோவில் | இராசராசன் I | S. I. I. 2. 94. |

## நங்கை பரவையார்

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் பெயர் | சான்று |
|---|---|---|---|---|
| 1. | நங்கை-சாத்தப் பெருமானர் | திருப்பூந்துருத்தி | ஆதித்தன் I | 105 of 1931. |
| 2. | நங்கை-வாகுணப் பெருமானர் | லால்குடி | ,, | 250 of 1931. |
| 3. | நங்கை-குலமாணிக்கத்தார் மகள் — மிலாடு அடிகள். | கீழூர் | பரகேசரி | 299 of 1902. |

| | | | | |
|---|---|---|---|---|
| 4 | நங்கை — பூதி ஆதித்த பிடாரி | திருச்செந்துறை | „ 10 „ | 309 of 1903. |
| 5. | கோயில் நங்கை | திருக்கழுக்குன்றம் | பராந்தகன் I 13 | 168 of 1894. |
| 6. | பரவை நங்கையார் | திருவாரூர் | இராசேந்திரன் I 20 | 680 of 1919. |
| 7. | நக்கன் பரவை | தில்லை | 24 | S. I. I. 4. 223. |
| 8. | மதுராந்தகப் பரவை நாட்டு மூவேந்த வேளான் | திருப்பாலத்துறை | கு · I 43 | 434 of 1912. |

## திருவெண்காட்டு நங்கை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | திருவெண்காட்டுப் பிச்சன் | திருவிடை மருதூர் | ஆதித்தன் I | 260 of 1907. |
| 2. | முள்ளூர் நங்கை (பராந்தகன் I மாமியார்) | திருநெய்த்தானம் | பரகேசரி | 45 of 1895. |
| 3. | நாங்கூர் நங்கை (பராந்தகன் I மாமியார்) | திருச்சோற்றுத் துறை | பராந்தகன் I | 158 of 1931. |

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| 4. | சாத்தனூர் நங்கை (பிடாரி பெயர்) | நங்கவரம் | பராந்தகன் I | 345 of 1903. |
| 5. | கன்னி நங்கை | சோழபுரம் | கிருஷ்ணன் III (கி. பி. 948) | 428 of 1902. |
| 6. | காஞ்சிபுர நங்கை | ஒற்றியூர் | இராசேந்திரன் I 29 | 139 of 1912. |
| 7. | திருவெண்காட்டு நங்கை | அங்கம் பாக்கம் (வாண் பாக்கம்) | கு-I, 36 | 209 of 1921-22. |
| 8. | எழுநாட்டு நங்கை | திருவெங்கைவாசல் | விக்ரமன் 14 | 253 of 1914. |
| 9. | திருவெண்காட்டு நங்கை | பதூர் (N. A. Dt.) | கு-II. 2 | 412 of 1922. |

## கண்ணப்ப தேவர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கண்ணப்ப தேவர் | காளத்தி | இராசாதி ராசன் | 125 of 1922. |

கமுகந் தோப்பு

## நீல நக்கன்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மூவரையன் பாழி நக்கன் | திருவையாறு | ஆதித்தன் I | S. I. I. V. 548. |
| 2. | நக்கன் ஐயாற்றடிகள் | ,, | ,, 17 | ,, 548. |
| 3. | கொடும்பாளூர் நக்கன் விக்ரம கேசரியார் | திருச்செந்துறை | பரகேசரி 2 ,, | 306 of 1903. |
| 4. | நக்கன் அரிஞ்சிகை | திருப்பழனம் | ,, 3 ,, | 165 of 1928. |
| 5. | கன்னிப்புலியூர் நக்கன் | திரு ஆவடுதுறை | பராந்தகன் 39 ,, | 140 of 1925. |
| 6. | * நீலி மகன் | உடையார் குடி | ,, 38 ,, | 547 of 1920. |
| 7. | நீலன் தியாகி (பெண் பெயர்) | பண்டார வாடை | ஆதித்தன் II 4 ,, | 241 of 2923. |

* நீலி-பார்ப்பனி பெயர். ஆதலின் பார்ப்பனன நீலன் எனப் பெயர் கொண்டதில் வியப்போ—ஐயமோ இல்லை என்க.

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| 8. | நீல கங்க அரையன் | தாயனூர் | ஆதித்தன் II 4 ,, | 362 of 1909. |
| 9. | பழுவூர் நக்கன் | கோவந்தபுத்தூர் | உத்தம சோழன் 12 | 166 of 1929. |
| 10. | நக்கன் நல்லத்தடிகள் | திரு நல்லம் | இராசராசன் I 12 | 627 of 1909. |
| 11. | நக்கன் அருமொழி | கற்குடி | ,, 27 | 455 of 1908. |
| 12. | நக்கன் லோக சிந்தா மணியார் | திருவெண்காடு | ,, 28 | 447 of 1918. |
| 13. | நக்கன் செம்பியன் மாதேவியார் | திருவிசலூர் | இராசேந்திரன் II 3 ,, | 348 of 1907. |
| 14. | நக்கன் சந்திரன் | ஊட்டத்தூர் | ,, ... | 515 of 1912. |
| 15. | நக்கன் கருக்கமர்ந்தாள் | திருவெண்காடு | ,, 4... | 464 of 1918. |
| 16. | நக்கன் பரவை | தில்லை | ,, 24 ,, | S. I. I. 4-223. |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | நக்கன் கோடை | ஒற்றியூர் | இராசேந்திரன் I, 29 | 139 of 1912 |
| 18. | நீலகங்க அரையர் (தண்ட நாயகன்) | ,, | இராசாதிராசன், 28 | 102 of 1912 |
| 19. | நக்கன் சண்பகம் | ஆனைமலை | சுந்தரசோழன், 21 ,, | 64 of 1905 |
| 20. | திருநீலவிடங்கன் மடம் | திரு ஆவடுதுறை | கு I, 31 | 144 of 1925 |
| 21. | நக்கன் கரப்பாலை | குமார வயலூர் | ஆதித்தன் I, 7 ,, | 144 of 1937 |
| 22. | மாறன் நக்கன் | ,, | ,, | 150 of 1937 |
| 23. | நக்கன் நாகை | ,, | ,, | 152 of ,, |
| 24. | நக்கன் மறப்பிலி | ,, | பராந்தகன் I, 7 ,, | 157 of ,, |

## அப்பூதி அடிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூதி ஆதித்த பிடாரி | திருச்செந்துறை | ஆதித்தன் I, 23 | 320 of 1903 |
| 2. | மிலாடுடைகள் மகளார் நங்கை குல மாணிக்கத் தார் | கீழூர் | பரகேசரி ,, 5... | 299 of 1902 |

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் | காலம் | சான்று |
|---|---|---|---|---|---|
| 3. | பூதி பராந்தகன் | அண்ட நல்லூர் | பரகேசரி | 10... | 348 of 1903 |
| 4. | புலியூர் நாட்டு அடிகள் | ,, | ,, | | ,, |
| 5. | அடிகள் பழுவேட்டரையர் | திருப்பழுவூர் | ,, | 12... | 120 of 1895 |
| 6. | பூதி கூத்தன் | திருப்பழனம் | ,, | 12... | 147 of 1928 |
| 7, | பூதி மா தேவடிகள் கன்னர தேவன் மனைவி | அண்டநல்லூர் | ,, | 14... | 356 of 1903 |
| 8. | பூதி பட்டாலகன் | கொடும்பாளூர் | சுந்தர சோழன் | | 139 of 1907 |
| 9. | நல்லத்து அடிகள் | திருநல்லம் | இராசராசன் | 12... | 627 of 1909 |
| 10. | ஸ்ரீபூதி சதுர்வேதி மங்கலம் | உடையார் கோவில் | | | S. I. I, 7–159 |
| | விபூதி கௌரயன் | வீரசைவ குரு | 13-ம் நூ. | | 418, 419 of 1926 p. 117 |

## புகழ்த்துணை நாயனார்

| | | | |
|---|---|---|---|
| வழிக்கே துணை குணசீலன் ஒற்றியூர்க் கோவில் இயக்கு நர் | திருவொற்றியூர் | இராசராசன் 1, 3 | 235 of 1912. |
| வழித்துணை நாயனார் | மூவலூரர் | ,, | 20 of 1925 |
| புகழ்த்துணை அடிகள் | திருவக்கரை | விக்ரமசோழன் 12 ,, | 168 of 1904 |

## ஏனாதி நாத நாயனார்

| | | | |
|---|---|---|---|
| 1. அரையன் ஏனாதி கிழான் of ஆர்க்காடு | திருமழபாடி | ஆதித்தன் I, 23 | 18 of 1920 |

## காரி நாயனார்

| | | | |
|---|---|---|---|
| 1. காரி ஆசான் | திருப்பழனம் | பராந்தகன் I 30 | 164 of 1928 |
| 2. காரி புலியன் | திரு அம்பர் மாகாளம் | ஆதித்தன் II 3 ,, | 117 of 1910 |
| 3. காரி கொளம்பன் | குடந்தை - கீழ்க் கோட்டம் | உத்தமசோழன் 4 | 245 of 1911 |

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| 4. | காரி வேளார் | அரிசிற்கரைப் புத்தூர் | இராசராசன் I | 283 of 1908 |
| 5. | காரி குளிர்வாகை | கருந்திட்டைக்குடி | ,, 24 | 48 of 1897; S. I. I. V. 1411. |
| 6. | அரங்கன் காரி | ,, | ,, , | |
| 7. | பூவணன் காரி | சசீந்திரம் | K. 32 | T. R. S. IV. pp. 130-131 |
| 8. | இளங் காரி குடையான் | திரு ஆவடுதுறை | | 71 of 1926 |
| | * சேந்தன் காரி | குமார வயலூர் | ஆதித்தன் I 7 | 151 of 1937 |

## நரசிங்க முனையதரையர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அபராசிதன் குலமாணிக்கப் பெருமானார்-முனைய தரையர் | திருநாவலூர் | பரகேசரி, 3 | S. I. I. 7·999<br>369 of 1902 |
| 2. | முனைய தரையர் மகள் | | இராசேந்திரன் I | 13 of 1905 |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | முனைய தரையன் | திருமணஞ்சேரி | கு. I. | 5 of 1914 |
| 4. | சேனாபதி இராச நாரா யண முனைய தரையர் | காளத்தி | கு. I. | 157 of 1922 |
| 5. | முனைய தரையப் பல்ல வரையன் (சாளுக்கிய இளவரசன்) | எறும்பூர் | விக்ரமன், 16 | 378 of 1913 |
| 6. | முனைய தரையன் குலமா ணிக்கன் இராமதேவன் | திருநாவலூர் | | 356 of 1902 |

* முனையதரையர் மகள் மிலாடுடையார் மனைவி — 13 of 1905, கி. பி. 1015.

## கோட்புலி நாயனார்

| | | | |
|---|---|---|---|
| சீட்புலி | ஒற்றியூர் | பராந்தகன் I, 34 | 160 of 1912<br>S. I. I. 3-108<br>A. R. E. 1913. II-18. |
| அமரபுயங்கனை கோட்புலி | திருவாட் போக்கி | கு. I. 21 | Sentamil, 17, p. 316. |

*' சண்டேசர் கையாற்கொண்டு இந்நிலம் விற்றுக்கொடுத்தோம் பெருங்குறி சபையோம்

| | பெயர் | கல்வெட்டிடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| | | **கழற் சிங்கன்** | | |
| 1. | சிங்கன் கலியன் என்ற உத்தம சோழ மூவேந்த வேளான் | திருக்கருகாவூர் | பரகேசரி, 5 | 46 of 1910 |
| 2. | மாற சிங்கன் | திருவிளக்குடி | உத்தமசோழன், 4... | 114 of 1926 |
| 3. | இளஞ் சிங்கன் வேளாட ராயன் | திருநனி பள்ளி | ஆதித்தன் II | 192 of 1925 |
| 4. | இராச சிங்கன் (கொடும்பாளூர் அரசன்) | கற்குடி | இராசேந்திரன் I, 7.. | S. I. I. 4-544 |
| 5. | சிங்கன் சோலை | சோழூர் | ,, 9 | ,, ,,-393 |
| 6. | விக்கிரம சிங்க மூவேந்த வேளான் | ஒற்றியூர் | இராசராசன் I 26 | 103 of 1912 |
| 7. | ஜய சிங்கன் | | வீரராசேந்திரன் 2 | 136 of 1912 |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | கலிச் சிங்கன் மடம் | திருவிடந்தை | கு. I. 45 | 281 of 1910 |
| 9. | பாதிரி கிழார் சிங்கன் | பிள்ளைப்பாக்கம் | நிருபதுங்கன், 2 | 172 of 1929-30 |
| 10. | சய சிங்கன் | | இராசேந்திரன் I | பெருந்தொகை No. 782. |

## ஐயடிகள் காடவர் கோன்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அடிகள் பழுவேட்டரையன் | உடையார்குடி | உத்தமசோழன், 12... | 592 of 1920 |
| 2. | கிழார் அடிகள் | திருநெய்த்தானம் | இராசகேசரி, 17... | S. I. I. 5-598 |
| 3. | ஐ (யாற்று) அடிகள் | திருவையாறு | ,, | ,, -543 |

## அரிவாள் தாயன்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | காமன் தாயன் (வாத்தி of இடையாறு) | திருமழபாடி | பரகேசரி, 16 | 17 of 1920 |

| | பெயர் | கல்வெட்டிடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|

## சத்தி நாயனார்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சத்தி அரையர் | திருமுதுகுன்றம் | இராசராசன் I, 7... | 49 of 1918 |

## நாவலூர் உடையான், ஆரூரன், நம்பி ஆரூரன் முதலியன

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | நாவலூர் உடையான் | மேலப்பழுவூர் | பரகேசரி, 13 | 381 of 1924 |
| 2. | ஆரூரான் பொன்னம்பலத் தடிகள் (உத்தம சோழன் மனைவி) | திருக்கோழம்பம் | உத்தமசோழன், 16... | 47 of 1925 |
| 3. | ஆரூரான் கம்பன் | திருமணஞ்சேரி | இராசராசன் I, 6... | 9 of 1914 |
| 4. | நம்பி ஆரூரான் கோயில் | குஹூர் | ,, 10... | 299 of 1917 |
| 5. | பிள்ளை நம்பி ஆரூரனூர் (பதிகம் ஓதுவார்) | ,, | ,, 12... | 275 of 1917 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | வேளாளன் ஆநரன் | திருவாமாத்தூர் | ,, | 23... 22 of 1922 |
| 7. | நம்பி உடுத்தூர் உடையான் | எண்ணாயிரம் | ,, | 25... 335 of 1917 |
| 8. | பெரும்புலியூர் நம்பி | திருபுவனி | இராசேந்திரன் II 6 | 180 of 1911 |

## நாவலூர் உடையான் முதலியன

| | | | | |
|---|---|---|---|---|
| 9. | ஸ்ரீ பூமான் நம்பி | நடவுச்சேரி (கோவை Dt) | கு. I. 15 year | 440 of 1909 |
| 10. | அணுக்க வன்றொண்டன் | வீரணூர் | ,, 19 ,, | 524 of 1938 |
| 11. | நம்பி விடங்கன் | சிவபுரி (Rm. Dt.) | ,, 32 ,, | 16 of 1929 |
| 12. | ஆநரன் வேதவனமுடையான் | கொள்ளிக்காடு | ,, | 128 of 1936 |
| 13. | உடைய நம்பி | காளத்தி | ,, | 168A of 1922 |

| | பெயர் | கல்வெட்டிடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| 14. | திருச்சிற்றம்பலம் உடைய நம்பி | திருப்புகலூர் | ,, 25 | 92 of 1927 |
| 15. | (ஆள்) உடைய நம்பி | திரு ஆரூர் | ,, 7 ,, | S. I. I. 7-485 |
| 16. | நம்பி மறவனூர் | திருவையாறு | இராசகேசரி, 19, | ,, 5-537 |
| 17. | உடைய நம்பி | தாராபுரம் | | A. R. E. 1920, p. 98. plate I, Nos. 3, 4, 5, 7. |
| 18. | கலயன் குமரன் என்ற தம்பிரான் தோழன் | திருவலம்புரம் | | 216 of 1925 |
| 19. | சேரமான் தோழன் (தபசி) | திருப்புகலூர் | இராசராசன் II, 3 | 87 of 1928 |
| 20. | ஆலால சுந்தரப் பல்லவரையன் | சீர்காழி | ,, 12... | 375 of 1918 |

## சேரமான் பெருமாள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சேரமானுர் | திருமலை (N. A.) | இராசராசன் I, 16 | 61 of 1889 |
| 2. | சேரமானுர் இராமவன்மர் | திருவலஞ்சுழி | விக்ரமன், 4 | S. I. I. 8-221 |

## தண்டி அடிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தண்டி அடிகளார் | கீழப்பழுவூர் | பராந்தகன் I (19 ஆ) | 236 of 1926 |

## கலிக்கம்ப நாயனுர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கம்பன் மதுராந்தகன் | உடையார் குடி | இராசேந்திரன் I,3 | 598 of 1920 |
| 2. | கலி அவ்வை | காளத்தி | கு. I. 49 | 95 of 1922 |

## நமிநந்தி அடிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | நந்தி-காடந்தி | கீழப்பழுவூர் | பராந்தகன் I | 241 of 1926 |
| 2. | குமார நந்தி புழலப்பன் | கீழ்முத்துகூர் | ,, . 32 | 2 of 1896 |
| 3. | நமி நந்தி அடிகள் மடம் | திருக்கழுக்குன்றம் | கு. I. 42 ,, | S. I. I .3-75 |

| | பெயர் | கல்வெட்டிடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| | **திருநீலகண்ட நாயனார்** | | | |
| 1. | திருநீலகண்டன் அதிகாரி | திருவாரூர் | இராசாதிராசன் I 31 | 670 of 1919 |
| 2. | திருநீல விடங்கன் மடம் | ஆவடுதுறை | கு. I. 31 ,, | 144 of 1928 |
| | **இளையான்குடி மாறன் (கிழவன்)** | | | |
| 1. | இளையான்குடி கிழவன் | சித்தலிங்கமடம் | பராந்தகன் I | 376 of 1909 |
| 2. | பூவன் மாறன் | திருமால்புரம் | ,, | 313 of 1906 |
| 3. | சாத்தன் மாறன் | திருமெய்யம் | இராசராசன் I | 403 of 1906 |
| | **பரஞ்சோதி-சிறுத்தொண்ட நம்பி** | | | |
| 1. | சிறுத்தொண்ட நம்பி மண்டபம் | செங்காட்டங்குடி | இராசராசன் I, 19 | 57 of 1913 |

| | | | | |
|---|---|---|---|---|
| 2. | பரஞ்சோதி என்ற அகோர சிவன் | ஹொச ஹள்ளி | இராச மகேந்திரன் 2 | 172 of 1911 |
| 3. | * சீராளன் of சோழநாடு | திராக்ஷாராமம் * | கு. I. 34 | S. I I. 4-1281 |
| 4. | சீராளன் | பெரிய கோவில் | | S. I. I. 2-95, p. 461 |
| 5. | சிறுத்தொண்ட நம்பி, தென்மலி நாடு | திருக்களர் | கு. I. 28 | S. I. I. 3-209 |
| 6. | பரஞ்சோதி-தில்லை நாயக பட்டன் | திருவாட்போக்கி | கு. I. 43 | Sentamil 17, p. 317. |

## கலிய நாயனர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அருநிதி-கலியன் மருதூர், | மறைக்காடு | பராந்தகன் I, 28 | 445 of1904 |
| 2. | கலியன் ஓரி | ஆனைமங்கலம் | ,, 32... | 63 of 1905 |
| 3. | கலியன் மன்றுடி | திருவதிகை | கிருஷ்ணன் III | S. I. I. 8-300 |
| 4. | நம்பி கலியன் (பெருமான் ஆசனம்) | திருக்கண்ணபுரம் | இராசராசன் II | 503 of 1922 |

| கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | பெயரும் பிற குறிப்புகளும் | சான்று |
|---|---|---|---|
| **தில்லை வாழ் அந்தணர்** | | | |
| 1. தில்லைவாழ் அந்தணர் மடம் | மதுராந்தகம் | கு. I. 33 | 404 of 1922 |
| **முருக நாயனார்** | | | |
| 1. நம்பி - திருமுருகன் மடம் | திருப்புகலூர் | கு. I. 35 | 88 of 1928 |
| **மானக்கஞ்சாறன்** | | | |
| 1. சுந்தரர் தோழன் | சிவபுரி (Rm. Dt.) | கு. I. 42 | 65 of 1929 |
| 2. தம்பிரான் தோழன் மானக் கஞ்சாறன் | திருமுட்டம் கோபுரம் | | 225 of 1916 |
| **திருஞானசம்பந்தன்** | | | |
| 1. குறும்ப கோளரி | ஒற்றியூர் | அபராசிதன், 4 | 158 of 1912 |

| | | | |
|---|---|---|---|
| 2. பரசமய கோளரி மாமுனி | திருப்பாதிரிப்புலியூர் கு. I 49 | | S. I. I. 7-752 |
| 3. பரசமய கோளரி மடம் | திருமணஞ்சேரி | | 534 of 1918 |
| 4. திருஞான சம்பந்தர் (பக்தர்) | திருக்குறுக்கை— | இராசாதிராசன் II 6 ,, | 224 of of 1917 |
| 5. ஆளுடைய பிள்ளையார்; கடவுள் பெயர் | சீகாழி | | A. R. E. 1918, 374, 380, 387. |
| 6. திருஞான சம்பந்தப் பல்லவரையன் | ,, | | 375 of 1918 |
| 7. மங்கையர்க்கரசி நாச்சியார், சம்பந்தர் கோவில். | ,, | ,, | ,, |
| மானி (தேவரடியாள் பெயர்) | காஞ்சி | நந்திவர்மன் II | S. I. I. IV. 827 |

## திருநாவுக்கரசன்—மருள் நீக்கி

| | | | |
|---|---|---|---|
| 1. இருள் நீக்கி | திருவெண்ணெய் நல்லூர் | | 468 of 1921-1922 |

| | பெயர் | கல்வெட்டுள்ள இடம் | அரசன் காலம் | சான்று |
|---|---|---|---|---|
| | | **குங்கிலியக் கலயன்** | | |
| 1. | கலயன் குமரன் | திருவலம்புரம் | | 216 of 1925 |
| 2. | கலயன் மாணிக்கம் | குடந்தைக் கீழ்க் கோட்டம் | இராசகேசரி, 15 | 252 of 1912 |
| 3. | குங்கிலியக் கலயர் கதை | திருப்பனந்தாள் | இராசராசன் II 18 | 28 of 1908 |

முடிவுரை :—

இங்ஙனம் நாயன்மார் பெயர்கள் இத்தமிழகத்து மடங்களுக்கும் மக்கட்கும் இட்டு வழங்கிய சோழர் காலம் சைவ சமயத்தின் பொற்காலம் என்னலாம். தமிழகத்துக் கோவில்கள் சோழர் ஆட்சியில் ஒப்புயர்வற்ற நிலையை அடைந்தன. அவற்றில் நாயன்மார் உருவச் சிலைகள் வைத்துப் பூசிக்கப் பெற்றன திருப்பதிகங்கள் ஓதப்பெற்றன; கோவில்களிலும் கோவில்களை அடுத்தும் மடங்கள் இருந்து சமயக் கல்வியைப் புகட்டி வந்தன; சிவ யோகியர், மாகேசுரர், மாவிரதியர் போன்ற சைவ சமயத் துறவிகட்கு உண்டியும் உறையுளும் நல்கின; கோவில்கள் நாகரிகக் கலைகளாய சிற்பம், ஓவியம், நடனம், இசை, இவற்றை வளர்த்தன. நாயன்மார் வரலாறுகள் திருமுறைகள், சிற்பங்கள் ஓவியங்கள், விழாக்கள், படிமங்கள், இவற்றின் வாயிலாகச் சேக்கிழார்க்கு முன் இத்தமிழகத்தில் பேரளவு பரவியிருந்தன என்பது இதுகாறும் கூறப்பெற்ற பலவகைச் சான்றுகளாலும் நன்கு உணரக்கிடத்தல் காண்க.

# VIII. நாயன்மார் வரலாறுகட்குரிய மூலங்கள்

இவை (1) திருமுறைகள், (2) கல்வெட்டுகளிற் கண்ட நூல்கள், (3) பல்லவர்-சோழர் காலத்துப் பிற தமிழ் நூல்கள், (4) சில வடமொழி நூல்கள், (5) சமண-பௌத்த சமய நூல்கள், (6) ஓவியங்கள் (7) சிற்பங்கள், (8) கல்வெட்டுகள், (9) கர்ண பரம்பரைச் செய்திகள் என்பன.

## 1. திருமுறைகள்

அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடிய முதல் ஏழு திருமுறைகள் இம்மூவருடைய வரலாற்றை ஏறத்தாழ ஒழுங்காக அமைக்கப் பயன்பட்டனவாகும். அவற்றோடு இவற்றில் இம் மூவராலும் குறிக்கப்பட்ட நாயன்மார்களின் பக்திச் சிறப்பினை விளக்கும் அரிய குறிப்புகள் பல கூறப்பட்டுள. இவற்றால், ஐந்தாம் பிரிவிற் கூறியவாறு, நாயன்மார்கள் காலங்களை ஒருவாறு அறியலாம்; அவர்கள் காலத்துச் சைவ சமயநிலைமை, சமண-பௌத்த சமயங்களின் நிலைமை முதலியன அறியலாம். பல தலங்கள் இன்ன ஆற்றின் கரைமீது அமைந்துள்ளன; தலப்பெயர் இன்னது-கோவிற் பெயர் இன்னது, கோவில்களில் நடைபெற்ற விழாக்கள் இவை, தலச் சிறப்புகள் இவை என்பன போன்ற-சேக்கிழார்க்குத் தேவையான குறிப்புகள் இத் திருமுறைகளிலிருந்து கிடைக்கின்றன. இவற்றில் சிறப்பாகக் குறிக்கப்பெற்றவர்—கண்ணப்பர், சண்டீசர், கோச்செங்கணான், சாக்கியர், புகழ்த்துணையார், கணம்புல்லர், அரிவாள் தாயர், நமிநந்தி, தண்டியடிகள், மங்கையர்க் கரசியார், நெடுமாறன், குலச்சிறை, கோட்புலி என்பவர். ஏனையோர் யாவரும் பெயரளவிற் குறிக்கப் பெற்றவர்.

எட்டாந் திருமுறையில் கண்ணப்பர், சண்டேசர் பக்திச் சிறப்பு மட்டுமே தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. ஒன்பதாந் திருமுறையில் சண்டேசர், கணம்புல்லர், கண்ணப்பர், அப்பர், சம்பந்தர், சேரமானும் சுந்தரரும் (இருவரும்) வெள்ளானைமீது சென்றமையும் தில்லைவாழ் அந்தணர் சிறப்பும் கூறப்பட்டுள. 10-ஆந் திருமுறையாகிய திருமந்திரத்தில் நாயன்மார்கள் பற்றிய குறிப்புகள் * பல இல்லையாயினும், அதனுட் கூறப்பட்டுள்ள சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவும் கோவில் அமைப்பு முதலிய சமயச் செய்திகளும் விளங்கக் குறிக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தையும் பாடிய திருமூலரே அறுபத்து மூவருள் ஒருவர் ஆதலின், அவர் நூலைச் சேக்கிழார் படிக்கக் கடமைப்பட்டவராவர்; இங்ஙனம் அழுத்தமாகப் படித்தமையாற்றான் அதனைத் 'திருமந்திர மாலை' எனப் பாராட்டுவராயினர். [2]

## 11—ஆந் திருமுறை

இதன்கண் உள்ள பதிகங்கள் பாடியவர் யாவர் என்பதும் அப் பிரிவிலேயே விளக்கப்பட்டது. ஆதலின், இங்கு நமது ஆராய்ச்சிக்கு வேண்டுவன மட்டுமே கூறுவோம். இத்திருமுறையில் நாயன்மார் மூவர் பாடிய நூல்கள் இருக்கின்றன. அவை பின் வருவன:—

### காரைக்கால் அம்மையார் பாடியன

(1) திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், (2) திரு இரட்டை மணிமாலை, (3) அற்புதத் திருவந்தாதி என்பன. இவற்றுட் கடைசி நூலே அம்மையார் வரலாற்றை

---

* சண்டேசர் பற்றிய குறிப்புத் திருமந்திரத்திற் காண்க.

1 Nambi Kada Nambi - Tiruvisaippa, Tillai, S 2—5.
Sundarar Tiruppallandu , S. 10.

2 Tirumular Puranam, S. 25—27.

ஓரளவு சேக்கிழார்க்கு அளித்தது. அதன் கண் (1) அம்மையார் இளமையிலேயே சிவபிரானை நினைத்திருந்தமை, (2) அவரது சிவப்பற்றின் உறுதி, (3) அவரது மனவுறுதி, (4) அவரது விருப்பம், (5) அவர் அழகும் அணிகளும், (6) அவர் கண்ட கடவுட் காட்சி முதலியவற்றை விளக்கும் பல பாக்கள் குறிக்கத் தக்கன.

## 2. ஐயடிகள் பாடிய க்ஷேத்திர வெண்பா

இப்பொழுது கிடைத்துள்ள பாக்கள் 24. ஒவ்வொன்றும் ஒவ்வொரு தலத்தைக் குறிப்பது; 'இறக்குந் தறுவாயில் துன்பங்கள் நேருமுன் இன்ன தலத்து இறைவனை நினை' என்று நெஞ்சிற்கு அறிவுறுத்துவதாக அமைந்தது. இது சேக்கிழார் காலத்தில் நன்னிலையில் முழு நூலாக இருந்திருத்தல் வேண்டும். இஃது அவர்க்கு மிகுந்த பயன்பட்டதாகலாம்.

## 3. சேரமான் பாடிய நூல்கள்

(1) பொன் வண்ணத்து அந்தாதி, (2) திரு ஆரூர் மும்மணிக்கோவை, (3) திருக்கயிலாய ஞான உலா ஆகிய இவை அனைத்தும் சொற் சுவை, பொருட் சுவை மிக்கவை. இவை சேக்கிழார்க்குச் சிறந்த இலக்கியச் செல்வமாக அமைந்தன என்னலாம். இவற்றுள் நமக்கு வேண்டுவது பொன் வண்ணத்து அந்தாதி. (1) இதன் தொடக்கமும் முடிவும் பொன் வண்ணம் என்றிருத்தல் சேக்கிழார் உள்ளத்தை ஈர்த்து, அசரீரி தந்த உலகெலாம் என்ற தொடரைப் பெரிய புராணத்தின் முதலிலும் ஈற்றிலும் அமைக்கச் செய்திருக்கலாம். இதனினும் ஒரு படி மேலே சென்று புராண இடையிலும் 'உலகெலாம்' என்பதை வைத்துப் பாடியிருப்பது, சேரமான் முறையைப் பின்பற்

---

3 Sambandar Puranam, S. 216.

றியது போலவும், ஆயின், ஒரு படி மேலே சென்றது போலவும் எண்ண இடந் தருகிறது.

(2) இந்த அந்தாதியின் கீழ் உள்ள செய்யுள்—(a) வெள்ளானை மீது சுந்தரர் இவர்ந்து கயிலை சென்றமை, (b) சேரமான் பரி மீது சென்றமை, (c) சேரமான் கயிலையில் ஆதியுலா அரங்கேற்றினமை, (d) அவர் தில்லையில் பொன்வண்ணத் தந்தாதியைப் பாடினமை என்ற குறிப்புகள் கொண்டுள்ளது.[4] இச்செய்யுள் சேக்கிழார்க்குச் சிறந்த குறிப்புகள் நல்கியதாகும்.

## நக்கீரர் பாடிய நூல்கள்

அவற்றுள் சண்டேசர், சாக்கியர், கோச்செங்கணான், இவர்தம் பக்திச் சிறப்பொன்றே பாராட்டப்பட்டுள்ளது. நக்கீரர் கண்ணப்பரைப் பற்றித் 'திருமறம்' பாடியுள்ளார். அது 157 வரிகளைக் கொண்டது. அதனில், (1) கண்ணப்பர் இயல்பாகவே நாடோறும் சிவனைப் பூசித்த பிறகே உண்ணுதல், (2) காளத்தி மலையில் அவர் நாயுடனே தங்கிப் பூசை செய்திருந்தமை, (3) சிவனது ஒரே கண்ணில் தம் இரண்டு கண்களையும் அப்ப முயன்றமை என்பன குறிக்கத் தக்கவை.

## கல்லாடர்

கண்ணப்பரைப் பற்றிப் பாடிய 'திருமறம்' 38 வரிகளை உடையது. நக்கீரர் குறியாதன சில இவர் குறித்துளர். அவை - (1) காளத்தியிற் பூசை செய்த மறையவர் பெயர் 'கோசரி' என்பது, (2) லிங்கத்தின் இரண்டாம் கண்ணில் வெளிப்பட்ட குருதியைத் தடுக்கவே கண்ணப்பர் தமது இரண்டாம் கண்ணைப் பெயர்க்க முயன்றமை என்பன.

---

[4] Tirumurai 11, Navalar edition, p. 44.

## பட்டினத்தார்

*இவர் பாடியன:—(1) கோயில் நான் மணி மாலை, (2) திருக்கழுமல மும்மணிக் கோவை, (3) திரு இடைமருதூர் மும்மணிக் கோவை, (4) திரு ஏகம்பம் உடையார் திரு அந்தாதி, (5) திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்பன. இவற்றுள் சண்டேசர், சிறுத்தொண்டர், சாக்கியர், அப்பர், சம்பந்தர், சுந்தரர் இவர்களது பக்திச் சிறப்புப் பாராட்டப் பெற்றுள்ளது.* [5] *"சம்பந்தர் தந்தையோடு (கோவிலுக்கு) வந்தபோது* பசி வருத்த *'அன்னாய்' என்று அழைப்ப, முன்னின்று சிவன் ஞான போனகம் தர, தந்தை முனிந்து 'தந்தார் யாவர்?' எனச் சிறுவராய சம்பந்தர், 'அவனைக் காட்டுவேன்' என்று கூறித் 'தோடுடைய செவியன்' என்று பாடச் சிவபிரான் காட்சி அளித்தான்" என்பது பட்டினத்தார் கூற்று.*

## நம்பி பாடிய நூல்கள் 10

*அவற்றுள் 6 நூல்கள் சம்பந்தரைப் பற்றியவை; ஒன்று அப்பரைப் பற்றியது; ஒன்று திருத்தொண்டர் திரு அந்தாதி; ஒன்று கோயில் திருப்பண்ணியர் விருத்தம். இவர்* சம்பந்தரைப் பற்றிப் பாடியவை - *(1) சம்பந்தர் திரு அந்தாதி, (2) சம்பந்தர் திருச்சண்பை விருத்தம், (3) சம்பந்தர் திரு மும்மணிக்கோவை, (4) சம்பந்தர் திருவுலாமாலை, (5) சம்பந்தர் திருக்கலம்பகம், (6) சம்பந்தர் திருத்தொகை என்பன. நம்பி பாடிய இந்த ஆறு நூல்களிலும் சம்பந்தர் வரலாற்றுக் குறிப்புகள் எல்லாம் அடங்கி விட்டன. இந்த ஆறு நூல்களும் சம்பந்தர் தேவாரமும் கொண்டே சேக்கிழார் சம்பந்தர் புராணம் பெரிதாகப் பாடினார் எனக் கொள்ளலாம். நம்பி தந்த*

---

[5] Koyil Nanmani Malai, S. 40; Tiruvidaimarudur Mummanikkovai, S. 25 & 28.

[6] Tirukkalumala Mummanikkovai, S. I.

குறிப்புகளுட் குறிப்பிடத் தக்கவை இரண்டு: (1) விடம் மேவி இறந்த பெண்ணைச் சம்பந்தர் எழுப்பினமை, [7] (2) சமணர் கழு ஏறிய செய்தி. [8]

## திரு ஏகாதச மாலை

இஃது அப்பரைப் பற்றியது. இதனில் - (1) அப்பர் ஆமூரில் பிறந்தமை, (2) அவர் தமக்கையார் நல்லுரையாற் சைவரானமை, (3) சூலை நோய் நீங்கிக் கவிகள் பாடினமை, (4) சமணர் அவருக்குச் செய்த தீங்குகள்-கல் மிதந்தமை, (5) தேவ நடன மாதர்க்கு ஈடுபடாது சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தினமை என்ற முக்கியமான குறிப்புகள் காண்கின்றன. நம்பி இவரைப் பற்றிப் பாடிய திருத்தொண்டர் திரு அந்தாதியில் —(1) அப்பர் திருநல்லூரில் திருவடி தீக்ஷை பெற்றமை, (2) மறைக்கதவு திறக்கப் பாடினமை என்பன குறிக்கப்பட்டுள. இவையும் அப்பருடைய திருமுறைகளும் அப்பர் வரலாற்றைப் பாடச் சேக்கிழார்க்குப் பெருந்துணை புரிந்தவையாகும்.

## கோயில் திருப்பண்ணியர் விருத்தம்

இதனில் (1) கண்ணப்பர் பக்திச் சிறப்பு, (2) சுந்தரரும் சேரமானும் கயிலை புக்கது, (3) சாக்கியர் கல் எறிந்து முத்தி பெற்றது, (4) அதிபத்தர் வரலாறு, (5) கலிக்காமரிடம் 6 வேலிகொண்டு திருப்புன்கூர் கடவுள் மழை பெய்வித்தது என்பன கூறப்பட்டுள. [9]

## திருத்தொண்டர் திருவந்தாதி

இது 85 பாக்களை உடையது; இந்நூலில் 63 தனியடியார், 9 தொகை அடியார் வரலாறுகள் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளன. சுந்தரர் வரலாறு 15 பாக்களில் குறிக்

---

7 Aludaiya Pillaiyar Tiruttokai, ll. 35-38.

8 Vide Chapter 10 of this Thesis.

9 S. 20, 40, 68; 31; 32, 68; 40; 54.

கப்பட்டுள்ளது. இக்குறிப்புகளும் சுந்தரர் தேவாரமும் சுந்தரர் வரலாறு பாடச் சேக்கிழார்க்குப் பெருந்துணை புரிந்தவையாகும். எல்லா நாயன்மார் வரலாறுகளையும் ஓரளவு தெளிவாக உணர்த்தத் தக்க நூல் இஃதொன்றே. இதுவே பெரிய புராணத்திற்குப் பேருதவி புரிந்த மூலங்களில் சிறப்புடையதாகும்.

## 2. கல்வெட்டுகளில் கண்ட நூல்கள்

சேக்கிழார்க்கு முற்பட்ட சோழர் காலத்தில் தோன்றிய நூல்கள் சில கல்வெட்டுகளிற் காண்கின்றன. அவை சமயத் தொடர்புடையன ஆதலின் அவற்றைச் சேக்கிழார் படித்திருக்கலாம். அவற்றைக் கீழே காண்க.

1. இராஜராஜ விஜயம்

இந்நூல் திருப்பூந்துருத்திக் கோவிலில் படிக்கப்பெற்றது. இதனைப் படித்தவனுக்கு ஊதியம் அளிக்கப்பட்டது.[10] அதனில் இராசராசன் வெற்றிகள் குறிக்கப்பட்டிருப்பினும், அவனது சமயத் திருப்பணிகளும் குறிக்கப்பட்டிருக்கலாம் எனக் கோடல் தவறாகாது. இராசராசன் நம்பியைக் கொண்டு திருமுறைகள் தொகுத்தமை தக்க இடம் பெற்றிருக்கும் எனக் கோடல் பொருந்தும்.

2. இராஜராஜேசுவர நாடகம்

இஃது, இராஜராஜன் பெரிய கோவில் கட்டிய முறையையும் அவன் அதற்குச் செய்த அறங்களின் விரிவையும் பிறர் அதற்குச் செய்த திருப்பணிகளையும் பல காட்சிகளாக விளக்கும் நூலாக இருத்தல் வேண்டும்.[11] தஞ்சை இராஜராஜேசுவரத்தில், சென்ற பகுதியிற்

---

[10] 120 of 1931; A R E. 1931, p. 44.
[11] S. I. I. 2. 67; K. A. V. Sastry's Cholas', Vol. 2, part I, p. 512.

சொன்னவாறு, அப்பர், சம்பந்தர், சுந்தரர், சிறுத்தொண்டர், சண்டேசர், மெய்ப்பொருள் நாயனுர் செப்புப் படிமங்கள் வைத்துப் பூசிக்கப்பட்டன அல்லவா?[12] ஆதலின், இந் நாடக நூலில், அப்படிமங்களைப் பற்றிய குறிப்புகள் வரும் இடத்தில் அந்நாயன்மார் வாழ்க்கைக் குறிப்புகள் விளக்கமாகவோ, சுருக்கமாகவோ குறிக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று நினைத்தல் பொருத்தமாகும். அஃதாயின், அக்குறிப்புகள் சேக்கிழார்க்குப் பயன்பட்டிருக்கலாம்.

## 3. கன்னிவன புராணம், பூம்புலியூர் நாடகம்

இவை முதற் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1070-1120) செய்யப்பட்டவை. இவற்றின் ஆசிரியர் பரசமய கோளரி மாமுனி என்பவர்.[13] இவர் பாதிரிப் புலியூரினர். இவை இரண்டும் பாதிரிப் புலியூரைப் பற்றிய புராணமும் நாடகமுமாம். நாம் அறிந்தவரையில், அவ்வூரில் அப்பர் சமணராக இருந்த காலத்தில் புகழ் பெற்ற சமணப் பள்ளிகளும் பாழிகளும் இருந்தன.[14] அப்பர் அங்குத் 'தருமசேனர்' என்ற பட்டத்துடன் சமணத் தொண்டு செய்து வந்தார். பிறகு அவர் சூலை நோய் கொண்டும் சமணருடன் மாறுபட்டும் திருவதிகை சென்று சைவரானுர்; அதனல் மகேந்திர வர்மனுடைய தண்டனை

[12] S. I. I. 7. 752 of 753; 128 & 129 of 1902.

[13] சிதம்பரம் 'தில்லை வனம்' என்றாற் போலப் பூம்புலியூர் 'கன்னிவனம்' எனப்பட்டது போலும்!

[14] இந்த இடம் திருப்பாதிரிப் புலியூர்க்கும் திருவந்திபாத்திற்கும் இடையில் சாலை ஓரத்தில் இருந்ததாகலாம். அங்கு இன்றும் சமணச் சிலை ஒன்றும் கட்டடச் சிதைவுகளும் காண்கின்றன.

—Vide C. K. S. Mudaliar's P. P. Vol. 3, p. 30 for a view of the ruins.

களைத் தாங்கினார்; இறுதியில் கடலில் கல்லைப் புணையாகக் கொண்டு திருப்பாதிரிப்புலியூர்க்கு அருகில் கரை ஏறினார்;[15] உடனே பாதிரிப்புலியூர்ச் சிவன் கோவிலை அடைந்து "ஈன்றாளுமாய்" என்று தொடங்கும் பதிகம் பாடினார். மகேந்திரன் அப்பரது பெருமை உணர்ந்து சமணத்தை விட்டுச் சைவனானான்; பாதிரிப்புலியூரில் இருந்த பள்ளிகளையும் பாழிகளையும் தகர்த்து, அச்சிதைவுகளைக் கொண்டு திருவதிகையிற் 'குணபர ஈசுவரம்' கட்டினான். இவ்வரலாறு முழுவதும் பூம்புலியூரைப் பற்றியதே ஆதலின், இது பல காட்சிகளாகப் பிரிக்கப்பட்டுக் கன்னிவன புராணத்தும் பூம்புலியூர் நாடகத்தும் இடம்பெற்றிருக்கலாம் என நினைப்பது பொருந்தும். பெரிய புராணத்துள் வரும் அப்பர் வரலாற்றில் கூறப்பட்டுள்ள இக்குறிப்புகட்குரிய மூலம் திருமுறை நூல்களிற் போதிய அளவு இல்லாமையை நோக்க, உண்மை புலனாகும். நமது ஊகம் சரியாக இருப்பின், இவ்விருநூல்களும் சேக்கிழார்க்குப் பயன்பட்டன என்னலாம்.

## நீடூரில் புராண மாளிகை

இங்ஙனம் எத்துணைப் புராணங்கள் எவ்வெத் தலங்களைப் பற்றியனவாக இருந்தனவோ, தெரியவில்லை. முதற் குலோத்துங்கன் ஆட்சியில் நீடூரில்—சொன்னவாறு அறிவார் (கழறிற்றறிவார் என்ற சேரமான் பெருமாள் ?) என்பவர்க்குக் கோவிலும், அதனுள் 'புராண நூல் விரிக்கும் புரிசை மாளிகையும்' கட்டப்பட்டன என்று கல்வெட்டுக் குறிக்கிறது.[16] இதனால், 'சேக்கிழார்க்கு முன்பே சைவசமயத் தொடர்பான புராணங்கள் சில இருந்தன; அவை கோவில் மண்டபங்களிற் படித்து விளக்கப்பட்டன' என்ற செய்தி ஐயமற விளங்குதல் காணலாம்.

---

[15] இந்த இடம் 'கரை ஏறவிட்ட குப்பம்' என இன்றும் வழங்கப்படுகிறது.

[16] 535 of 1921.

# 3. பல்லவர்-சோழர் காலத்துப் பிற தமிழ் நூல்கள்

## நந்திக் கலம்பகம்

பல்லவர் காலத்துத் தமிழ நூல்களில் நமக்கு வேண்டுவதும் இன்று அழியாதிருப்பதும் நந்திக்கலம்பகமே ஆகும். இது கழற்சிங்க நாயனர் என்று கருதப்படும் மூன்ரும் நந்திவர்மனைப் பற்றியது. இது—(1) நந்திவர்மனுடைய நல்லியல்புகள் (2) சிவபக்தி (3) தமிழ்ப்புலமை (4) போர்த்திறன் (5) பேரரசுத்தன்மை (6) அவனது வடபுலப் போர், (7) தெள்ளாற்றுப்போர் முதலியவற்றை நன்ருகக் கூறுகிறது. இந்நூலைச் சேக்கிழார் நன்கு பயன்படுத்தினவர் என்பது 3-ஆம் பிரிவில் முன்னமேயே காட்டப்பட்டது; 10-ஆம் பிரிவிலும் காட்டப்படும். ஆண்டுக் காண்க.

## சிதைந்த பாக்கள்

யாப்பருங்கல விருத்தியுரையில் (11-ஆம் நூற்ருண்டு) உள்ள சில பாக்கள் இந்நந்திவர்மனைப் பற்றியனவாகக் காண்கின்றன.[17] அவற்றில் இவனுடைய வீரம், ஈகை, தமிழ்ப்புலமை முதலியன நன்கு பாராட்டப்பட்டுள. இவை எந்நூலைச் சேர்ந்தவையோ, தெரியவில்லை. அந்நூல் சேக்கிழார் காலத்தில் நன்னிலையில் இருந்திருத்தல் கூடியதே.

## தில்லை உலா

இஃது, இன்றளவும் அச்சேருதது; சிதைந்த நிலையில் இதனைத் தமிழ்ப்பொழிலில்[18] வெளியிட்டவர் பண்டிதர்-உலகநாதப் பிள்ளை. தில்லைப்பிரான் உலாப்போகையில்

---

[17] Yapparungala Virutti, Sutras 86, 87 (Commentary)

[18] Vols. 12 and 13.

திருநீற்றுச்சோழன் பரிமீது முன் சென்றதாக இரண்டு இடங்களில் கூறப்பட்டுள்ளதும், அவன் சென்ற பரி சேரமான், வரகுணன் II இவர்கள் வாகனங்களுடன் சென்றதாகக் கூறப்படுவதும் வேறு சோழ அரசன் குறிப்பிடப்படாமையும் நோக்க, திருநீற்றுச் சோழனை முதற்குலோத்துங்கன் தில்லையில் இறைவன் உலா வருதலை முதன்முதல் சிறப்பாகச் செய்துகாட்டினவனாகலாம் எனக்கோடல் பொருந்தும். அவனைப்பற்றிய இடங்களில் அவனது படிமம் பரிமீது சென்றது என்ற பொருளே அறியக் கிடப்பதால், அவனுக்குப் பிற்பட்ட காலத்தில் இந் நூல் பாடப்பட்டதாகலாம்; ஆயின், தில்லையைப்பற்றிய இந்நூலில் தில்லையில் செய்யப்பட்ட பெரியபுராணமோ, அதனைச் செய்த சேக்கிழாரோ, அதனைச் செய்வித்த சிவநெறிச் செல்வனை இரண்டாம் குலோத்துங்கனோ குறிக்கப்படாமையின், இது சேக்கிழார்க்கு முற்பட்ட நூலெனக் கொள்ளலாம்;[19] அங்ஙனம் கொண்டு இதனை ஆராய்வோம்.

இந்நூலிற் குறிக்கப்பட்ட செய்திகளாவன:—

(1) சிற்றம்பலம் பொன்தகடு ஒவ்வொன்றன்மீதும் 'சிவாய நம' என்ற ஐந்தெழுத்துகளும் பொறிக்கப்பட்டிருந்தன.[20] (2) உலாவில் பரசமய வாதுவென்ற பிள்ளை (சம்பந்தர்), 'வஞ்சனைகள் வென்றார்' (அப்பர்), "தூது சென்று வா" என்ற தோழன் (சுந்தரர்), தென்னற்குவாய்த்த திருவாதவூரர் (மாணிக்கவாசகர்) இவர்கள் இந்த முறைப்படியே குறிக்கப்பட்டுளர்.[21] (3) ஆதி

---

19 இந்நூல் முழுதும் வெளிவாராமையால் இதன் காலம் உறுதியாகக் கூறக்கூடவில்லை.

20 kk. 6-8.

21 kk. 21—23.

சிவாகமப்படி தில்லையில் பூசை நடந்தது.[22] (4) சண்டீசர் 'தந்தை இருதாள் துணித்த சைவத்திருமேனி' எனப்பட்டார்.[23] (5) சிவன் உலாப்போகையில் முன்புறம் (a) வாகீசர் தேர் (b) சுந்தரர் தேர் (c) திருவாசகப்புலவன் தேர்கள் சென்றன; ஆதியுலாச் சொன்ன நரபதியும் வரகுணனும் சேவிப்பச் சிவன் உலாப்போனன்.[24] (6) இவர் படிமங் கட்குமுன் மூவர் தமிழும் வேதமும் முரசமுடன் முழங்கப் போயின.[25] (7) இவ்வுலாவில் (a) சிவன் சுந்தரர்க்காகத் தூது சென்றமை,[26] (b) கோட்புலியார் பிள்ளையைக் கூருக்கினமை,[27] (c) சிறுத்தொண்டர் பிள்ளையைக் கொன்று சமைத்த முழு விவரம்,[28] (d) சம்பந்தர் சைவத்தைப் பரப்பப் பாண்டிநாடு சென்றமை[29] என்பன குறிக்கப்பட்டுள.

இவற்றுள் (1) சுந்தரர்க்காக இறைவன் தூது சென்றமை, (2) கோட்புலியார் பிள்ளையைக் கூருக்கினமை, (3) சிறுத்தொண்டர் மகனை அரிந்து விருந்தளித்த முழு விவரம் ஆகிய மூன்றும் நம்பி பாக்களில் தெளிவாகக் குறிக்கப்படாதவை. ஆகவே, இவை சேக்கிழார்க்குப் பெருவியப்பு ஊட்டியிருக்கும் என்பதில் ஐயமில்லை. இக்குறிப்புகள் சேக்கிழாரால் நன்கு விளக்கப்பட்டிருத்தலை நோக்க, இச்செய்திகள் கூறும் உலாப்போன்ற அக்கால நூல்கள் சில சேக்கிழார்க்குக் கிடைத்தனவாகலாம் என்று எண்ண இடமுண்டாதல் காண்க.[30]

---

[22] k. 42.
[23] k. 66.
[24] kk. 90—96.
[25] k. 130.
[26] kk. 109—110.
[27] kk. 157—158.
[28] kk. 197—202.
[29] kk. 167, 216—217.

[30] கல்லாடம், நம்பி திருவிளையாடல் முதலியவற்றின் காலம் திட்டமாகக் கூறக்கூடவில்லை ஆதலின் அவை சேக்கிழார்க்கு முற்பட்டவை எனக் கோடற்கில்லை.
—Vide K.A.N. Sastry's Cholas, Vol. 2, part I p. 535.

# 4. வடமொழி நூல்கள்

## பக்த விலாசம்

இஃது அப்பர் காலத்து அரசனான மகேந்திரவர்மன் செய்த வேடிக்கை நாடகம். இதனில் இசை, நடனம் பாராட்டப்பட்டுள; பௌத்தர், காபாலிகர், பாசுபதர், சமணர் நிலைகள் கூறப்பட்டுள; உயர்நீதி மன்றத்து நீதிபதிகள் லஞ்சம் பெறத் தக்கவர் என்பது தெளிவாகக் குறிக்கப்பட்டுளது. இங்ஙனம் மகேந்திரனே தன் ஆட்சிக் குட்பட்ட நீதிபதிகளைப்பற்றிக் கூறுதல் கவனிக்கத் தக்கது.[31] இந்நூல் அப்பர் காலத்துச் சமயவுலகைப் படம் பிடித்துக் காட்டலால் இதனைச் சேக்கிழார் கவனித்திருக்கலாம் என்பது தவறாகாது. இஃது அடுத்த பிரிவில் விளக்கம் பெறும்.

## அவந்தி சுந்தரி கதா

இஃது இராஜசிம்மன் (கி. பி. 685-720) காலத்தில் அவன் அவைப்புலவரான தண்டி என்பாரால் வடமொழியிற் செய்யப்பட்டது. இதன் முகவுரையில் பல்லவ அரசர் வடமொழிப் புலமையும், அவராற் போற்றப்பட்ட வடமொழிப் புலவரும் அவர் பற்றிய செய்திகளும் குறிக்கப்பட்டுள்ளன.[32] இராசசிங்கன் காலத்தில் உண்டான கொடிய பஞ்சம் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது, இராசசிங்கன் நல்லியல்புகள் குறிக்கப்பட்டுள.[33] இந்த இராசசிங்கன் பூசலார் வரலாற்றிற் குறிக்கப்பட்ட 'காடவர் கோமான்' என்று அறிஞர் கருதுகின்றனர்.[34] அஃதாயின், இந்நூல் அவனைப்பற்றிய சில குறிப்புகளைச் சேக்கிழார்க்கு உதவி இருக்கலாம்.

---

31 Mattavilasam (Tamil), Sentamil Selvi, Vol.

32 R. Gopalan's 'Pallavas of Kanchi', Appendix C.

33 Dr. C. Minakshi's Ad. . . . . Pallavas', p. 114; Vide Chapter 10 of this Thesis.

34 Vide Chapter 5 of th's Thesis.

# 5. சமண-பௌத்த சமய நூல்கள்

சம்பந்தர் மதுரையிற் சமணரோடும் போதிமங்கையிற் பௌத்தரோடும் வாதிட்டார் என்று சேக்கிழார் கூறி, அச்சமயக் கொள்கைகளை மிக நுணுக்கமாக விளக்கிக் கூறியுள்ளார்.[35] அதனால் இவர் பொதுவாக மணிமேகலை, வளையாபதி போன்ற பௌத்த நூல்களையும், சிந்தாமணி, நீலகேசி போன்ற சமண நூல்களையும் படித்திருக்கலாம்; சிறப்பாகத் தம் காலத்துச் சமணப் பெரியார்களையும் பௌத்தர்களையும் நேரிற்கண்டு அவர்தம் சமயக்கொள்கைகள் பற்றிய நுணுக்கங்களைக் கேட்டறிந்தும் இருக்கலாம். இங்ஙனம் சேக்கிழார் விசாரிக்கத்தக்க நிலையில் சோழர்காலத்தில் சமணமும் பௌத்தமும் இருந்தனவா? எனின், அவை நன்னிலையில் இருந்தன என்பதைக் கல்வெட்டுகளும் பட்டயங்களும் உணர்த்துகின்றன. அவ்விவரம் கீழே காண்க.

## சோழர் காலத்துச் சமணம்

(1) கி. பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பாதியில் வட ஆர்க்காட்டுக்கோட்டம் 'வெடால்' என்ற ஊரில் பெரிய சமணப்பள்ளியும் மாழியும் இருந்தன. அங்கு 400-க்கு மேற்பட்ட குரத்தியர் (சமணப் பெண் துறவிகள்) இருந்தனர்.[36] கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் தென் ஆர்க்காட்டுக் கோட்டத்துச் சிற்றாமூரில் இருந்த சமணப்பள்ளியில் சமண சமயநூல் படித்து விளக்கப்பட்டது.[37] (3) முதற் பராந்தகன் காலத்தில் செங்கற்பட்டுக் கோட்டத்து ஆனந்தமங்கலத்தில் ஜினகிரிப்பள்ளி என்ற பெயருடன் ஒரு பள்ளி இருந்தது.[38] (4) அதே காலத்தில் திருப்பான்மலை என்ற

[35] S. 678—854; 904—925.
[36] S. I. I. 3. 92.
[37] 201 of 1902.
[38] 430 of 1922.

இடத்திற் சமணர் பலர் குடியிருந்தனர். அவர்கட்குக் குருவாக இருந்தவர் அரிஷ்டநேமி பட்டாரர் என்பவர். அவர் மாணவியாரான பத்தினிக்குரத்தி அடிகள் 'விளாப் பாக்கம்' என்ற சிற்றூரில் சமணப் பெண் துறவிகள் மடம் ஒன்று அமைத்தார்.[39] (5) முதல் இராசராசன் காலத்தில் திருநறுங் கொண்டை, திருமழமாடி, திருமலை, குஹூர், தாதாபுரம் முதலிய ஊர்களில் சமணப் பள்ளிகள் இருந்தன.[40] (6) காஞ்சி நகரின் ஒரு பகுதியான திருப்பருத்திக் குன்றம் 'ஜின காஞ்சி' எனப் பெயர் பெற்றது. அங்குக் குலோத்துங்கன் I காலத்தில் சமணத் துறவிமார் 'ரிஷி சமுதாயம்' என்ற பெயரால் இருந்துவந்தனர்.[41] அச்சமுதாயம் விக்கிரம சோழன் காலத்திலும் இருந்தது[42] சேக்கிழார்க்கும் பிற்பட்ட காலத்தும் இருந்தது.[43]

## சோழர் காலத்துப் பௌத்தம்

நாகப்பட்டினம் பல்லவர் காலத்திற் சிறந்த துறைமுகப் பட்டினமாக இருந்தது. அங்கு இராசசிங்கன் பௌத்த விஹாரம் ஒன்றைச் சீனர் (பௌத்த வாணிகர்) தொழுகைக்காகக் கட்டினான் என்று சீன நூல் கூறுகிறது.[44] அத்தகைய கோவில் ஒன்று இராசராசன் 1, இராசேந்திரன் 1, குலோத்துங்கன் 1 இவர்களாற் சிறப்பிக்கப் பெற்றது.[45] எனவே, அப்பௌத்த விஹாரம் நம் சேக்கிழார் காலத்தில் நன்னிலையில் இருந்ததென்னலாம்.

---

[39] 53 of 1900.

[40] 385 of 1902; 288 of 1917; S. I. I. 1. 67 & 68.

* I visited this place in April 1942.

[41] 382 of 1929.

[42] 381 of 1929.

[43] 43 of 1890.

[44] Dr. C. Minakshi's 'Ad . . . . . . Pallavas', p. 68.

[45] Leyden Grant.

சோழப்பேரரசின் முதல் அமைச்சரான சேக்கிழார் அச் சின வணிகருடன் அளவளாவி இருத்தல் கூடியதே என்க.

சென்ற பகுதியிற் குறித்த சோழர் கால ஓவியங்களும் சிற்பங்களும் சேக்கிழார்க்கு எங்ஙனம் பயன்பட்டன என்பது அடுத்த பிரிவிற் குறிக்கப்படும். அவர் கல்வெட்டுகளைப் பார்த்திருக்கலாம் என்பது 10-ஆம் பிரிவில் விளக்கப்பெறும். முன்னூல்களில் இல்லாத கதைக் குறிப்புகள் பலவற்றைச் சேக்கிழார் கூறலைக் காண, அவை கர்ணபரம்பரைச் செய்திகளாக இருத்தல்கூடும் என்பதை நம்பலாம். சேக்கிழார் இக்குறிப்புகளை எங்ஙனம் தொகுத்தார் என்பது அடுத்த பிரிவிற் கூறப்படும்.

## IX. மூலங்கட்கும் பெரிய புராணத்திற்கும் உள்ள வேறுபாடுகளும் அவற்றின் காரணங்களும்

### மூலங்கட்கும் பெரிய புராணத்திற்கும் உள்ள மூவகை வேறுபாடுகள்

சென்ற பகுதியில் சேக்கிழார்க்குக் கிடைத்தவாகக் கூறிய நாயனமார் பற்றிய செய்திகளையும் பெரிய புராணச் செய்திகளையும் நன்கு ஆராயின், தெளிவாக மூவகை வேறுபாடுகள் காண்கின்றன. அவையாவன :—

1. சேக்கிழார், முன்னோர் குறியாத பல புதிய செய்திகள் கூறியுள்ளார் ;

2. முன்னோர் குறிப்பாகக் கூறியவற்றைத் தெளிவாக விளக்கியுள்ளார் ;

3. முன்னோர் குறித்த சிலவற்றை மாற்றிக் கூறியுள்ளார். இனி இவற்றை ஒவ்வொன்றாகக் காண்போம்.

## 1. சேக்கிழார் குறித்த புதிய செய்திகளுட் குறிக்கத் தக்கவை :—

(1) நரசிங்க முனையரையர் சுந்தரரை மைந்தராக ஏற்று வளர்த்தமை.

(2) மூர்த்தியார் காலத்துப் பாண்டி நாட்டுக் குழப்பம்; அவர் அரசராகத் தேர்ந்தெடுக்கப் பெற்ற முறை.

(3) அப்பர் வரலாற்றில் -(1) குணபரன் சைவனானமை - அவன் சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்தமை - குணபர இசுவரம் கட்டினமை.

(4) பழையாறையில் அப்பரது உண்ணா விரதம் - சோழ அரசன் இடையீடு.

(5) அப்பூதியார் மகன் இறந்தமை - அவனை அப்பர் எழுப்பினமை.

(6) சமணர்க்கும் தண்டியடிகட்கும் நடந்த விவாதத்தில் சோழ அரசன் இருந்து கடனாற்றினமை.

(7) சிறுத்தொண்டர் பல்லவன் படைத்தலைவராக இருந்து வாதாபி அழித்தமை.

(8) சேரமான் முதன் முதல் சுந்தரரைச் சந்தித்த வரலாறு.

(9) ஐயடிகள் வெண்பாப் பாடுதற்கு முற்பட்ட வரலாறு.

(10) கழற்சிங்கன் வடபுலப் போர்-கோவில் தொண்டு செய்தமை.

(11) கோட் புலியார் போர்மீது சென்ற விவரம்.

(12) கற்றளி கட்டிய காடவர் கோன் கனவு - அவன் பூசலாரைச் சந்தித்தமை.

(13) சுந்தரரும் நம்பியும் கூறாது விட்ட நாயன்மார் வாழ்ந்த பதிகள் - அப்பதிகளைக் கொண்ட நாடுகள் ; அவ்விருவரும் குறியாது விட்ட நாயன்மார் மரபுகள் முதலியன.

2. சேக்கிழாரால் விளக்கப்பட்ட குறிப்புகள் :—

(1) திருநீலகண்டர் இளமை துறந்த வரலாறு.

(2) மெய்ப்பொருள் நாயனார் பொய்த் தவ வேடங் கொண்ட பகைவனால் ஏமாற்றிக் குத்தப்பட்டமை.

(3) சுந்தரர் - பரவையார் திருமணம் ; விறல் மிண்டர் இடை யீட்டால் திருத் தொண்டத் தொகை பாடினமை.

(4) நந்தனார் முனிவராதற்கு முன் செய்த தொண்டுகள்.

(5) சாக்கியர் காஞ்சியில் சிவனை வழிபட்டு முத்தி அடைந்தமை.

(6) கூற்றுவ நாயனார் சிவனுடைய திருவடியையே முடியாகக் கொண்டமைக்கு உரிய காரணம்.

(7) நெல் வேலிப் போர்.

(8) போதி மங்கையில் நடந்த சைவ - பௌத்த வாதம்.

3. சேக்கிழார் மாற்றிக் கூறியவை :—

(1) அமர் நீதி நாயனாரும் அவர் மனைவியாரும் அடியாரது கோவணத்துணிக்கு ஈடாகத் துலைபுக்கனர் என்று நம்பி குறித்தனர் ; ஆயின், சேக்கிழார் அமர்நீதி நாயனார், அவரது மனைவியார், அவர்கள் மகனை சிறுவன் ஆக மூவரும் துலைபுக்கனர் என்று கூறியுள்ளார்.

(2) சம்பந்தர் விடமேறிய பெண்ணை எழுப்பினார் என்று நம்பி குறித்தார். ஆயின், சேக்கிழார் எலும்பைப் பெண்ணாக்கியதாகக் குறித்துளர்.

(3) மூர்க்க நாயனார் 'திருவேற்காட்டூர் மன்னர்' என்று நம்பி குறித்தார். சேக்கிழார் அவரை 'வேளாண் குல முதல்வர்' என்றனர்.

(4) சங்கப் புலவர் 49 பேரே பொய்யடிமை இல்லாத புலவர் என்பது நம்பி கூற்று. 'சங்கப் புலவர்' என்ற தொடரே சேக்கிழார் காட்டவில்லை. அவர் கூற்றை உற்று நோக்கின், பொய்யடிமை இல்லாத புலவர் ஒருவரோ என்று ஐயுற வேண்டுவதாக வுள்ளது.

(5) காரியார் சிவனைப்பாடிக் கயிலை புக்கவர் என்பது நம்பி கூற்று. அவர் மூவேந்தர் மீது கோவை பாடிப் பெற்ற பொருளைக் கொண்டு சிவன் கோவில் கட்டி முத்தி பெற்றவர் என்பது சேக்கிழார் கூற்று.

(6) சுந்தரர் செருத்துணை நாயனாரைத் 'தஞ்சை மன்னவன்' என்று குறித்தார். சேக்கிழார் அவரை 'வேளாண் குல முதல்வர்' என்று மாற்றிக் கூறியுள்ளனர்.

## இவ் வேறுபாடுகட்குக் காரணம் என்ன?

பெரிய புராணம் பாடிய சேக்கிழார் 63 நாயன்மார் காலத்தவர் அல்லர்: இந் நாயன்மார் வரலாறுகளை விளக்கமாகக் கூறும் முதல் நூல்களைப் பெற்றவரும் அல்லர்; நாயன்மார் பெயர்களைக் கூறும் அளவில் சுந்தரர் பாடிய தொகையும், அதனினும் ஓரளவு விளக்கம் பெற்ற நம்பி செய்த அந்தாதியும் மூவர் அருளிய திருமுறைகளும் கர்ண பரம்பரை வரலாறுகளுமே இவர்க்குச் சிறப்புடை மூலங்களாகும். மூவர் பாக்களில் நாயன்மார் சிலருடைய சிவப் பணிகள் பாராட்டப்பட்டுள்ளனவே தவிர, அவர்தம் நாடு, ஊர், மரபு முதலியன தெளிவாக உணருமாறு

இல்லை. நாயன்மாருள் அப்பர் - சம்பந்தர்க்கு முற்பட்டார் பலர்; சுந்தரர்க்கு முற்பட்டார் மிகப்பலர். இந்த நிலையில் தாம் தாம் கேள்வியுற்ற அளவே அந் நாயன்மார் வரலாறுகள் மூவராலும் குறிக்கப் பெற்றன. அந்தாதி பாடிய நம்பி நிலை பின்னும் இரங்கத் 'தக்கதாகும். அவர் சுந்தரர்க்கு ஏறத்தாழ 125 ஆண்டுகள் பிற்பட்டவர். ஆதலின் அவர் மூவர் தேவாரம், தொகை, தம் காலத்து வழங்கிய கதைகள் இவற்றை உளங்கொண்டு அவரால் முடிந்த வரை திருத்தொண்டர் திரு அந்தாதி பாடி முடித்தார். இங்ஙனம் வந்த மூலங்களைக் கொண்டு, நம்பிக்கு ஏறத்தாழ 100 ஆண்டுகட்குப் பின்வந்த நம் சேக்கிழார் பெருமான் பெரியதோர் காவியம் பாடுவதெனின், அஃது எளிதில் இயலும் செயலாமோ?


சேக்கிழாரை
முதல்
அமைச்சராகப் பெற்ற
சோழப் பெருநாடு
(கி. பி. 1133–1150)
சேதிநாடு
சாளுக்கியப் பெருநாடு
(கி பி 970–1200)
மகாநதி
கோதாவரி
கலிங்கம்
கலயாணி
கிருஷ்ணை
திருபபருபபதம்
காமபிலி
வடபெணணை
திருக்காளத்தி
குன்றததூர
சோழப்
பெருநாடு
காஞ்சி
காவிரி
கஙகைகொணட
சோழபுரம
தஞ்சாவூர
நாகபபட்டினம
திருவஞ்சைககளம்
மதுரை
இலங்கை

# சேக்கிழார் பொறுப்புணர்ச்சி

சேக்கிழார் சோழப் பேரரசின் முதல் அமைச்சராதலின், அப்பதவிக்கு உரிய அரசியல் அறிவு நிரம்பப் பெற்றவர் என்று நினைத்தல் தகும். அவர் அந்த அரசியற் கண் கொண்டு 63 நாயன்மாரைப்பற்றிய சுந்தரர்-நம்பி தந்துள்ள குறிப்புகளை ஆராய்ந்தார்; கீழ்வரும் விவரங்களைக் கண்டார்.

63 நாயன்மாருள்,

1. சேரர் ஒருவர் - சேரமான் பெருமாள்.

2. சோழர் இருவர் - (1) கோச்செங்கணான், (2) புகழ்ச் சோழர்.

3. பாண்டியர் ஒருவர் - நெடுமாறன்.

4. அவர் மனைவியாரும் சோழன் மகளாருமான மங்கையர்க்கரசியார்.

5. பல்லவர் இருவர் - (1) ஐயடிகள் காடவர்கோன், (2) கழற்சிங்கர்.

6. களப்பிரர் ஒருவர் - கூற்றுவ நாயனார்.

7. சிற்றரசர் நால்வர் - (1) மெய்ப்பொருள் நாயனார், (2) இடங்கழியார், (3) நரசிங்கமுனையரையர், (4) பெருமிழலைக் குறும்பர்.

8. பல்லவர் படைத்தலைவர் - பரஞ்சோதியார் என்ற சிறுத்தொண்டர்.

9. சோழர் படைத்தலைவர் மூவர் - (1) கோட்புலியார், (2) கலிக்காமர், (3) மானக்கஞ்சாறர்.

10. பாண்டியர் அமைச்சர் - குலச்சிறையார்.

இங்ஙனம் 63 நாயன்மாருள் அரசியல் தொடர்புடையார் 17 பேர் ஆவர். இந்நாயன்மாரைப் பற்றித் தொகை -

அந்தாதி - தேவாரம் இவற்றிற் கிடைத்த குறிப்புகள் இவர் தம் வரலாறுகளை ஒழுங்காகக் கூறப் போதியன அல்ல. ஆதலின், சேக்கிழார் பல புதிய குறிப்புகள் தேட வேண்டியவரானார்.

வரலாற்றுச் சிறப்புடைய நாயன்மார் வரலாறுகள் இயன்றவரை உண்மையாக இருக்கும்படி கூறுதலே தமது முதல் அமைச்சர் பதவிக்குத் தக்கது என்ற எண்ண முடையவர் சேக்கிழார் என்பது, அவரது பேருழைப்பால் நன்கு தெரிகிறது. அவர் பிற நாயன்மார் வரலாற்று உண்மைகளையும் ஆராயப்புகுந்தபொழுது கீழ்வரும் புதிய அரசர்களைப்பற்றியும் அறியவேண்டியவரானார்.

1. அப்பர் வரலாற்றிற் குறிக்கப்படும் மகேந்திரவர்மன் என்ற பல்லவன்.

2. பூசலார் வரலாற்றிற் குறிக்கப்படும் இராசசிங்கன் என்ற பல்லவன்.

3 தண்டியார் வரலாற்றிற் குறிக்கப்படும் சோழ அரசன்.

4. அப்பர் குங்குலியக்கலயர் வரலாறுகளில குறிக்கப்படும் சோழ அரசன்

5. சுந்தரர் காலத்தில் பாண்டியனுடன் இருந்த சோழ அரசன்.

தமக்கு ஏறத்தாழ 250 ஆண்டு முதல் 700 ஆண்டு வரை (450 வருட காலம்) உள்ள பரந்துபட்ட காலத்தில் இருந்த நாயன்மார் வரலாறுகளைக் கூறவேண்டிய நிலைமை உண்டானதால், பொறுப்புணர்ச்சியுடைய அப் பெரும் புலவர் தமக்கு முற்பட எழுந்த மூலங்களை நுணுக்கமாக ஆராயத் தொடங்கினார்; அங்ஙனம் ஆராய்ந்தபொழுது தொகைக்கும் அந்தாதிக்குமே சில வேறுபாடுகள் இருப்பக் கண்டார். அவற்றுட் சிறந்தன கீழ்வருவன: —

## சேக்கிழார் சோதனை

தொகை-அந்தாதிக்குள்ள வேறுபாடுகள்:—சுந்தரர் தமது தொகையில் விளக்கமாக நாயன்மாரைப்பற்றிக் கூறுவிடினும், சிலருடைய சிறப்புடைச் செயல்களைச் சில சொற்களால் குறித்துச் சென்றுள்ளார். இந்த நுட்பத்தை நம்பி பல இடங்களில் விளக்கவில்லை. சான்றாக ஒன்று காண்க:

சுந்தரர் குறித்த 'ஆர்கொண்ட வேல் கூற்றன் களந்தைக் கோன்' என்ற தொடரில் உள்ள 'ஆர் கொண்ட' என்பது சிறப்புத் தொடராகும். இஃது 'ஆத்திமாலையைக் கொண்ட' என்று பொருள்படும். "இக்களந்தைக்கோன் 'கூற்றுவன்' என்ற பெயருடைய களப்பாளன். இவன் இறைவன் திருவடியையே முடியாகப் பெற்று உலகாண்டவன்" என்று நம்பி குறித்தார். இவ்விரண்டு கூற்றுகளையும் ஆராய்ந்த சேக்கிழார், 'ஆர் (உரிமையாற்) கொண்டவர் சோழர்; ஆயின், கூற்றுவர் களப்பாளர் எனப்படலால், சோழர் ஆகார்; சோழர் ஆகாமையால் அவர் 'ஆர் (வலிதிற்) கொண்ட'வர் ஆவர்; அஃதாவது சோழநாட்டை வென்றவராவர்; அதனாற்றான், மன்னர்க்குரிய முடி தில்லை வாழ் அந்தணரால் சூட்டப்பெற்றிலர்" என்ற உண்மையை உணரலாயினர்; அத்துடன் அவர் நிற்கவில்லை. தம் காலத்துத் தில்லைவாழ் அந்தணரை இவ்வரலாறுபற்றிக் கேட்டு, அதன்பிறகே, "கூற்றுவர்க்கு முடிசூட்ட மறுத்த தில்லை வாழ் அந்தணர் அவர்க்கு அஞ்சி ஒருவரைத் தில்லையிற் பூசைக்கென விடுத்து எஞ்சியோர் சேரநாடு புக்கனர்" எனத் தம் புராணத்துக் கூறுவராயினர். சேக்கிழார் தில்லையில் நூல் செய்தார் ஆதலாலும் தில்லைவாழ் அந்தணர்பற்றிய செய்தி அவர் மரபினரைக் கேட்டே எழுதுதல் முறையாதலாலும் இம்முறையைக் கையாண்டிருக்கலாம் என்பது பொருத்தமேயாகும்.

2. சுந்தரர், புகழ்ச் சோழர்க்குக் 'கருவூர்த் துஞ்சிய' என்ற அடையைச் சிறப்புடையதாக்கிக் கூறியுள்ளார். ஆயின், நம்பி இதுபற்றி ஒன்றுமே கூறவில்லை. இக்குறையைக் கவனித்த சேக்கிழார் தாம் பாடிய புகழ்ச் சோழர் புராணத்தில் அவர் 'கருவூர்த்துஞ்சிய' செயலையே பெரிதும் பேசியுள்ளார்.

3. சுந்தரர் நெடுமாறனை, 'நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற' என்ற தொடரால் சிறப்பித்துள்ளார். நம்பி இதுபற்றி விளக்கம் கூறவில்லை. இஃதறிந்த சேக்கிழார், நெடுமாறன் புராணத்தில் நெல்வேலிப் போர் ஒன்றையே சிறப்பித்துப் பேசியுள்ளார்.

4. சுந்தரர் கோட்புலியாரை, 'அடல்சூழ்ந்த வேல் நம்பி' என்ற தொடரால் சிறப்பித்தனர். நம்பி இதுபற்றி ஒன்றுமே கூறவில்லை. சேக்கிழார் இதனைக் கோட்புலியார் புராணத்தின் முற்பகுதியில் நன்கு விளக்கியுள்ளார்.

## 9, 11-ஆம் திருமுறைச் செய்திகட்கும் பெரியபுராணச் செய்திகட்கும் உள்ள வேறுபாடுகள்

1. கண்ணப்பநாயனாரைப்பற்றிய நக்கீரர் குறிப்புகட்கும் கல்லாடர் குறிப்புகட்கும் உள்ள வேறுபாடு சென்ற பகுதியில் நன்கு காட்டப்பட்டன அல்லவா? இவற்றை நன்கு ஆராய்ந்த சேக்கிழார் சிலவற்றைத் தள்ளினார்; சிலவற்றைக் கொண்டார். அவர் தள்ளியன—

(1) கண்ணப்பர் நாடோறும் சிவனைப் பூசித்தமை, (2) அவர் நாயுடனே காளத்தி மலைமீது இறைவன்முன் இருந்தமை, (3) லிங்கத்தின் ஒரே கண்ணில் வேடர் தம் இரண்டு கண்களையும் அப்ப முயன்றமை என்பன.

அவர் கொண்டவை—(1) கண்ணப்பர் உடல்வளம் முதலிய பற்றிக் கூறப்பட்ட செய்தி, (2) இறைவன் சிவகோசரி

யார் கனவிற் சென்று கூறிய செய்தி, (3) லிங்கத்தின் இரண்டாம் கண்ணிற்ருன் வேடர் தம் இரண்டாம் கண்ணை அப்ப முயன்றமை என்பன.

2 சம்பந்தர் பாற்போனகம் பெற்ற வரலாறு பட்டினத்தார் கூற்றிலிருந்து சென்ற பகுதியிற் காட்டப்பட்டதன்ருே? அதனை ஆராய்ந்தறிந்த சேக்கிழார், 'சம்பந்தர் பசி வந்த்த அழுதார்' என்று பட்டினத்தார் கூறியதை 'நீரில் முழுகிய தந்தையாரைக் காணுத அந்ந்தால் அழுதார்' என்று மாற்றி அமைத்தார்.

3.9-ஆந் திருமுறையில் நம்பிகாடநம்பி என்பார், சுந்தரரும் சேரமானும் வெள்ளானைமீது இவ்வுடலோடு சென்றனர்' என்று தெளிவாகக் கூறியுளர். ஆயின், நம்பி, சுந்தரர் வெள்ளானைமீதும் சேரமான் யானைமீதும் சென்றனர் என மூன்று இடங்களில் தெளிவாகக் கூறியுள்ளார். காடநம்பி சேக்கிழார்க்கும் பிற்பட்டவராகக் கோடலே தக்கது என நாம் நான்காம் பிரிவிற் கூறியிருப்பினும், அவர் கூறிய செய்திக்கேற்பத் தாராபுரத்துக் கோவில் சிற்பமும் இருத்தலைக் காண, சேக்கிழார் காலத்தில் இந்தக் கொள்கையும் நாட்டில் இருந்திருக்கலாம் என்று கோடல் தவருகாது. அங்ஙனம் இருந்திருப்பின், சேக்கிழார், இரு கூற்றுகளின் வன்மை மென்மைகளை ஆய்ந்து, நம்பி கூற்றையே பின்பற்றினுர் என்று கோடல் தகும்.

இங்ஙனம், முன்னோர் தந்த குறிப்புகளை ஆராய்ந்து, கொள்ளத்தக்கவற்றைக்கொண்டு, தள்ளத்தக்கவற்றைத் தள்ளிப் புராணம் பாடினமை முன்சொன்ன மூவகை வேறுபாடுகட்கு ஒரு காரணம் ஆகும்.

மற்ருெரு காரணம். தேவார காலத்திற்கும் நம்பிக்கும் இடைப்பட்ட காலத்திலும் நம்பிக்கும் சேக்கிழார்க்கும் இடைப்பட்ட காலத்திலும் பல கதைகள் பொது மக்களிடையே வளர்ந்திருக்கலாம். வரலாற்றுப் புகழ்பெற்ற

கோச்செங்கணானுக்கும்பிறகு உண்டான அவனைப்பற்றிய சிலந்திக் கதையன்றே சமய குரவரால் பாராட்டப்பட்டுள்ளது? அம்மட்டோ? அஃது இராசேந்திர சோழனது திருவாலங்காட்டுப் பட்டயத்திலும் குறிக்கப்பட்டுவிட்டது; பின்னர்ப் பல நூல்களில் இடம்பெற்று, இறுதியில் நம்பிபாடிய அந்தாதியிலும் பெரியபுராணத்திலும் பதிந்துவிட்டது [1] சமயத் தொடர்பாக இங்ஙனம்கூறப்பட்டுள்ள (*1*) அப்பர், அப்பூதியார் மகனை எழுப்பினமை, (2) சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கினமை, (3) சேரமான் முதன் முதலிற் சுந்தரரைச் சந்தித்தமை போன்ற கதைகள் நம்பிக்குப் பிறகும் சேக்கிழார்க்கு முன்னும் தோன்றி வளர்ந்தனவாகலாம். அவற்றை அக்கால மக்கள் மனப்பான்மை ஒட்டியும் சைவசமய உயர்வு கருதியும் அவை நாட்டில் வழங்கியவாறே சேக்கிழார் பாடினராகலாம். உண்மை எதுவாயினும், மேற்சொன்ன மூவகை வேறுபாடுகட்கு இக்கதைகள் [2] ஒரு காரணமாகும் எனக் கோடல் தவறாகாது.

மூன்றாம் காரணம். சேக்கிழார், திருமுறைகளையே அன்றிப் பிற நூல்களையும் ஆராய்ந்து குறிப்புகள் சேர்த்தமை, மேற்சொன்ன வேறுபாடுகட்கு ஒரு காரணமாகும். சான்றாக ஒன்று காண்க.

அப்பர் காலத்துப் பல்லவ வேந்தன் முதல் மகேந்திர வர்மன் என்பது அனைவரும் ஒப்புக்கொண்ட உண்மை. அப்பேரரசன் சமண முனிவர் தூண்டுதலால் அப்பருக்குத் தீங்கிழைக்கக் கருதி அவரை அழைத்துவருமாறு தன் அமைச்சரையே ஏவினான். அங்ஙனம் ஏவுகையில், "தருமசேனனிடம் பொருள் கொடுத்துவிடாது என்பால் கொண்டு

---

1 K. A. N. Sastry's 'cholas', Vol. I, p. 64—68.

2 இவ்வாராய்ச்சி நூலில் அற்புதங்களை ஆராய்வது நமது நோக்கமன்று.

வாரும்''[3] என்று எச்சரிக்கை செய்தனன் என்று சேக்கிழார் செப்பியுள்ளார். மகேந்திரன் பல்லவப் பேரரசன். அவனுடைய அமைச்சர் இவ்வளவு இழிந்தவர் என்பதை அவனே கூறினன் என்று சோழப் பேரரசனது முதல் அமைச்சராகிய ஒரு பெரியார் (சேக்கிழார்) தக்க சான்றின்றிக் கூறார். சான்றின்றிக் கூறினார் எனக்கொள்ளின் அஃது அவரது அமைச்சர் பதவிக்கும் புலமைக்கும் இழுக்குத் தருவதாகும். ஆதலின், இக்குறிப்பு அவர்க்கு எங்கிருந்து கிடைத்திருத்தல் வேண்டும் என்பதை ஆராய்தல் நலம். நாம் அறிந்தவரை மூன்று நூல்களில் ஒன்றே அவருக்கு இக்குறிப்பை உதவி இருத்தல் கூடும். அவை. (1) பூம்புலியூர் நாடகம், (2) கன்னிவனபுராணம், (3) மகேந்திரன் செய்த 'மத்தவிலாசம்' என்ற நாடக நூல் என்பன. இவற்றுள் முன்னவை இரண்டும் இப்பொழுது இல்லை. இறுதி நூல் இன்று இருப்பதாகும். அதனில் காபாலினி ஒருத்தி, "பௌத்த பிக்ஷுவைப்பற்றி நீதிமன்றத்தில் வழக்குத் தொடரல் நம்மால் இயல்வதன்று. ஏன் எனில், அவன் பௌத்த விஹாரத்திற் சேர்ந்துள்ள பணத்தைக்கொண்டு நீதிபதிகள் வாயை அடைத்துவிடுவான்''[4] என்று கூறியுள்ள கூற்றுக் கவனிக்கற்பாலது. தனது ஆட்சிக்குட்பட்ட நீதிபதிகளே கைக்கூலி பெறத்தக்கவர் என்பதை அரசனே அறிந்திருந்தான் என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்று வேண்டுவதில்லை அன்றோ? இதை நோக்க, அவ்வரசனே, தன் அமைச்சரை நோக்கி, 'தருமசேனரிடம் பொருள் கொண்டுவிடாது அழைத்துவாரும்' என்று கூறினான் என்று சேக்கிழார் கூறிய கூற்றுத் தக்க சான்றுகொண்டே கூறியதாகலாம் என்பது மத்த விலாசத்தால் உறுதிப்படுகிறதன்றோ?

---

[3] Appar Puranam, S. 90.

[4] Scene 3.

நான்காம் காரணம். சேக்கிழார் சோழப் பேரரசனது முதல் அமைச்சர் ஆதலின், அவர் தமது உத்யோக முறையில் சோழப் பெருநாடு முழுவதும் சுற்றிப் பார்த்தவராகலாம். அத்துடன், அவருக்கு இயல்பாக இருந்த சைவப் பற்றினாலும் நாயன்மார் வாழ்க்கைக் குறிப்புகள் அறியவேண்டும் என்ற ஆர்வத்தாலும் அந்நாயன்மார் வாழ்ந்த பதிகளையும், அவர்கள் வழிபட்ட கோயில்களையும் தரிசித்திருக்கலாம். அங்ஙனம் யாத்திரை செய்தபொழுது அங்கங்கு வழங்கிய நாயன்மார் வரலாற்றுக் குறிப்புகளைத் தொகுத்திருக்கலாம். இங்ஙனம் சேக்கிழார் சோழப் பெருநாட்டில் யாத்திரை செய்தனராதல் வேண்டும் என்பதை வலியுறுத்தத் தக்க சான்றுகள் பல பெரிய புராணத்தில் உண்டு. அவற்றுட் சில ஈண்டுக் காட்டுதும்.—

1. கண்ணப்பர் வரலாற்றைக் கூறிய நக்கீரர், பரணர், நம்பி முதலியோர் குறியாத பொத்தப்பி நாட்டுச் சிறப்பு, உடுப்பூர்ச் சிறப்பு, உடுப்பூருக்கும் காளத்திக்கும் இடைப்பட்ட காட்டு நிலை, கண்ணப்பர் உடுப்பூரிலிருந்து வேட்டையாடிக்கொண்டே காளத்தி வந்தமை, காளத்தி மலை வருணனை முதலியவற்றை நடுவு நிலையிலிருந்து கவனிப்பார்க்குச் சேக்கிழார் அவ்விடங்களை நேரே சென்று கண்டவராவர்; அங்குக் கண்ணப்பரைப் பற்றிய செய்திகளை விசாரித்து அறிந்தவராவர் என்பன நன்கு விளங்கும். சேக்கிழார் காலத்தில் பொத்தப்பி நாட்டை ஆண்டவன் மதுராந்தக பொத்தப்பிச் சோழ சித்தரசன் என்பவன். இம்மரபினர் காளத்தி கோவிலுக்குச் செய்துள்ள திருப்பணிகள் மிகப் பல வென்பதைக் காளத்திக் கல்வெட்டுக்களால் அறியலாம்.[5] இச்சிற்றரசர் துணைக்கொண்டு சேக்கிழார் உடுப்பூர் முதலிய இடங்களைப் பார்வையிட்டனர் எனக் கொள்வதும் பொருந்தும்.

---

[5] 572 of 1907. 102, 103 & 108 of 1922.

சேக்கிழார் கூறியுள்ள நாட்டுச் சிறப்பு முதலியன இன்றளவும் ஒத்திருத்தல் கவனிக்கத்தக்கது.[6]

2. அப்பரது தொண்டை நாட்டு யாத்திரையைக் கூறுமிடத்து, "அப்பர் திருவாலங்காடு பணிந்தார்; பிறகு பல்பதியும் நெடுங்கிரியும் படர்வனமும் கடந்து காரிக்கரை அடைந்தார்" என்று சேக்கிழார் கூறல் நோக்கத் தக்கது.[7] திருவாலங் காட்டிற்கும் காரிக்கரைக்கும் இடையில் மலைகளும் காடுகளும், அவற்றை அடுத்து ஊர்களும் இருத்தலை இன்றும் காணலாம். காரிக்கரை, இன்று 'இராமகிரி' என்ற பெயருடன் இராமகிரி மலை அடிவாரத்தில் உள்ள சிற்றூர் ஆகும். "இங்ஙனம் அப்பர் சென்ற யாத்திரை வழியைக் குறித்துச் சேக்கிழார் கூறியுள்ள குறிப்புக்கள் (செ. 341-343) சரியானவை என்பதை அறிஞர் ஒப்புகின்றனர்.[8]

[6] C. M Ramachandra Chettiar's article, C. K. S. Mudaliar's P. P. Vol. II.

[7] S. 341--343.

[8] These standzas are very good authority for the eleventh century geography of th's tract, and may not be altogether fictitious in regard to the seventh century when Appear is said to have performed the journey . . . . we know of roadways in this region in the eleventh century certainly, and references can be quoted even for the seventh and eighth centuries, to the existence of trunk roads, two of them at any rate, Vadugavali East and Vadugavalı West, one of them described in Sanskrit also as Andrapatha. Therefore then there must have been a recognized way for these pilgrims from the holy shrines of importance like Tiruppasur to perhaps the still more important shrine in Kalahasti itself"

—Dr. S. K. Ayyanga'rs 'Manimekalai in its Historical Setting', p. 46.

3. சேக்கிழார் திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில்—தொண்டை நாட்டு நிலப் பகுதிகள், அவற்றின் இயல்பு, அந்நிலப் பகுதிகளில் உள்ள சிறப்புடைத் தலங்கள், அத் தலங்களைப் பற்றிய சிறப்புகள் முதலியவற்றை மிகத் தெளிவாகக் கூறியுள்ளார்; திணை மயக்கம் பெற்ற பதிகளையும் நன்றாக விளக்கி யுள்ளார்.[9] இவற்றை ஊன்றிக் காண, இப்புலவர் பெருமான் தொண்டை நாடு முழுவதும் நன்றாகச் சுற்றிப் பார்த்தவர் என்பது உறுதிப்படும்.

4. அப்பர், சம்பந்தர், சுந்தரர்தம் தலயாத்திரைகளைப் பற்றிக் கூறுங்கால், 'இவர் இன்ன கோவிலைப் பணிந்த பிறகு இன்ன கோவிலுக்குச் சென்று பதிகம் பாடினார்; பிறகு இன்னின்ன கோவில்களைத் தரிசித்து இன்னபதியை அடைந்தார்' என்று சேக்கிழார் கொடுக்கும் இடங்கள் பல உண்டு. அம்முறை வைப்பு ஏறக்குறைய ஒழுங்காக இருத்தல் படங்கள்[10] கொண்டு உணரலாம். சான்றாக நான் கண்ட ஒன்றைக் கூறுவேன்.

தலையாலங்காடு என்பது திருவாரூர்க்கு வடக்கே 8 கல் தொலைவில் உள்ளது. அங்கிருந்து திருவாரூர்க்கு வரும் வழியில் (1) தலையாலங்காடு (2) பெருவேளூர் (3) சாத்தங்குடி (4) கரவீரம் (5) விளமர் என்ற ஐந்து தலங்கள் முறையே உள்ளன.[11] சேக்கிழார் சம்பந்தரது யாத்திரையில் இம்முறை பிறழாது கூறியிருத்தல் காணத்தக்கது.[12]

---

9 S. 1—16.

10 Map showing Sundarar's first travel to Tiruvarur, C. K. S. Mudaliar's Periyapuranam, Vol. I, p. 424.

11 I have visited all these 5 temples in April 1943 starting from a village called Enkan. (எண்கண்)

12 S. 573.

5. அப்பர் தமது யாத்திரையில் சில முக்கியமான தலங்களில் தங்கி (as head quarters), அங்கிருந்த சுற்றுத் தலங்களைத் தரிசித்துக்கொண்டு, மீட்டும் தாம் தங்கிய தலங்கட்கு வந்து சேர்ந்தனர் என்று சேக்கிழார் குறித்துள்ளார்.[13] அவர் அங்ஙனம் குறித்த ஒவ்வொரு முக்கியமான தலமும் அதனைச் சூழவுள்ள தலங்களும் அவர் கூறியவாறே இன்றும் இருத்தல் கண்டு இன்பப்படுதற்குரியது.[14] இவ்வாறே சம்பந்தர், சுந்தரர் புராணங்களிலும் பல தலங்கள் (as head quarters) கூறப்பட்டுள்ளன.

6. சம்பந்தர் திருமறைக் காட்டிலிருந்து மதுரை சென்ற வழியைக் கூறுதல்[15] முற்றும் பொருத்தமானது. இங்ஙனமே அவரது பாண்டிய நாட்டு யாத்திரையும் ஒழுங்காகக் கூறப்பட்டுள்ளது, சிவத் தலயாத்திரைப் படங்களின்[16] உதவிகொண்டு உணரத்தக்கது.

7. 'சம்பந்தர் பாண்டி நாட்டிலிருந்து மீண்டு வருகையில் திருக்களர், பாதாளீச்சரம் இவற்றைப் பணிந்து முள்ளியாற்றங் கரை அடைந்தார்; பின் அக்கரை சென்று கொள்ளம்பூதூரை அடைந்தார்'[17] என்று சேக்கிழார் குறித்தமை நோக்கத்தக்கது. இவை முறையே தெற்கிலிருந்து வடக்கில் உள்ள சோணாட்டுத் தலங்களாகும். இம்முறை பிறழாமல் சேக்கிழார் கூறலே கூர்ந்து கவனிக்கத்தக்கது.

8. 'கொள்ளம்பூதூர் பணிந்த சம்பந்தர் பல தளிகளைப் பணிந்து திருநள்ளாறு சென்றார்; பின் தெளிச்

---

13 195—198, 199—213, 228, 240, etc.,

14 Map C. K. S. Mudaliar's 'Thirunavukkarasu Puranam,' p. 293.

15 S. 622—630.

16 Pâlur N. M. Subbaroya Mudaliar's 'Tamil Veda Talayathraippadam'.

17 S. 896—900.

# சம்பந்தர் தென்னாட்டு யாத்திரை

1. திருமறைக்காடு
2. திரு அகத்தியான் பள்ளி
3. திருக்கோடிக்கரை
4. குடிக்குளம்
5. இடும்பாவனம்
6. திருவுசாத்தானம்
7. கொடுங்குன்றம் (பிரான்மலை)
8. மதுரை.

௬-க்கும் ௭-க்கும் இடையில்,

(1) பாலை நிலம்
(2) நெய்தல் நிலம்
(3) மருத நிலம் (சோணாடு முடிந்தது)
(4) முல்லை நிலம்

(5) பலயாறுகள், மலைகள்
(6) கொடுங்குன்றம்

சம்பந்தர் புராணம், சே. [illegible].



சேரி[18] பணிந்தார்; அங்கிருந்து திருக்கடவூர் செல்கையில் வழியில் போதி மங்கை குறுக்கிட்டது. அது புத்தர் வாழ் பதியாகும். அங்குச் சம்பந்தர் அவர்களுடன் ஒரு மண்டபத்தில் தங்கி வாது செய்தார்[19] என்றனர். இங்ஙனம் சேக்கிழார் கூறற்கு மூலம் என்ன? 'போதி (மங்கை)யில் சம்பந்தர் புத்தரை வென்றார்; ஒரு புத்தன் தலையைப் புவிமீது உருளுமாறு வித்தகப் பாடல் செய்தார்'[20] என்ற நம்பி தந்த குறிப்பே மூலமாகும்.

'போதி மங்கை' என்பது 'பூதமங்கலம்'. அது சேக்கிழார் குறித்தபடி தெளிச்சேரியிலிருந்து திருக்கடவூர் போகும் பாதையில் உள்ளது. அங்கு வேணுதாசன் என்றவன் கட்டிய பௌத்த விஹாரத்திற்றான் கி. பி. 5-ஆம் நூற்றாண்டினரான புத்ததத்தர் 'விநயவிநிச்சயம்' என்ற நூலை எழுதினார்.[21] எனவே, சம்பந்தர் காலத்தில் அங்குப் பௌத்தர் இருந்தனர் என்று கொள்ளற்குத் தடை இல்லை. இங்ஙனம் சேக்கிழார், 'இப்போது மங்கை இன்ன இடத்தில் உள்ளது' எனக் குறித்தமை பாராட்டத் தக்கது. அங்கு நடந்தனவாகக் கூறும் சைவ-பௌத்த சமயத் தொடர்புடைய நுட்பமான செய்திகள் பின்னும் பாராட்டத் தக்கவையாகும். இவ்விரண்டும் முறையே சேக்கிழாரது பிரயாணத்தாலும், பௌத்த—சைவ சமய நூல்களைப் படித்தமையாலும் குறிப்பிடப்பட்டவை என்று கோடல் தகும். போதி மங்கை பௌத்த

---

[18] I have visited these two places in February 1943.

[19] S. 904—936.

[20] Aludaiyapillaiyar Tiruvandadi, S. 66; Aludaiya pillaiyar Tiruttokai, lines 38—40.

[21] V. R. Dikshitar's 'Buddhism in Tamil Literature' in 'Buddhistic Studies' edited by B. C. Law,' p. 689.

ஸ்தலமாகச் சோழர் காலக் கல்வெட்டுகளில் இடம் பெறுமையால், அது சம்பந்தர்க்குப்பின் வீழ்நிலை யுற்ற தெனக் கொள்ளலாம்.

9. "அப்பர் திருப்பழனத்திலிருந்து காவிரித் தென் கரையே சென்று திருநல்லூரை அடைந்தார்;[22] சம்பந்தர் தில்லையிலிருந்து திருமுதுகுன்றம் போகையில் நிவா நதிக் கரைமீது மேற்கு நோக்கிச் சென்றார்;[23] வடகரை மாந்துறை பணிந்து பிற தளிகளையும் பாடி மழநாட்டுப் பொன்னி வடகரை மிசைப் போய்த்திருப்பாச்சில் ஆச்சிராமம் அடைந்தார்;[24] திருவீங்கோய் மலையைத் தொழுத பிறகு கொங்கிற்குடபுலம் சென்றடைந்தார்;[25] வெஞ்சமாக் கூடலைப் பணிந்த பிறகு கிழக்கு நோக்கி வந்தார்; கருவூரை அடைந்தார்:[26] காவிரிக் கரைமீது சென்றே திருத்துருத்தி (குற்றாலம்) அடைந்தார்; பிறகு அந்நதிக் கரையில் உள்ள மூவலூரைப் பணிந்தார்;[27] சுந்தரர் சேரமானுடன் சேர நாடு செல்ல ஆரூரிலிருந்து புறப்பட்டு மேற்பால் சென்றார்; காவிரித் தென்கரை போய்ச் சிவன் கோவில்கள் பல பணிந்து திருக்கண்டியூரை அடைந்தார்; வடகரையில் திருவையாறு எதிர் தோன்றியது......" என்று சேக்கிழார் பெருமான் ஆற்றின் பெயர்களையும் நாயன்மார் சென்ற கரைகளையும், அக்கரைகளில் அவர்கள் தரிசித்த கோவில்களையும், அக்கரைகள் வழியே அவர்கள் சென்ற நாடுகளையும் குறித்துள்ளமையும் அவை இன்றளவும் பொருத்தமாக இருத்தலையும் நோக்க—இப்புலவர் பெருமான் தமிழகத்து நில அமைப்பு, நாட்டு அமைப்பு, கோவில்

22 S. 213.
23 S. 177.
24 S. 310.
25 S. 323.
26 S. 338—339.
27 S. 435—436.

அமைப்பு முதலியவற்றை மிகத் தெளிவாக அறிந்த பெரியார் என்பது நன்கு விளக்கமாகும்.

நாயன்மார் பதிகள்: நாயன்மார் பதிகள் சில குழப்பத்திற்கு இடமின்றிச் சேக்கிழார் குறித்துள்ளமை கவனிக்கற்குரியது.

## 1. நந்தனார்

இவர் பதி ஆதனூர் என்பது. நம்பி தமது அந்தாதியில் இப்பெயர் மட்டுமே குறித்தார். தமிழகத்தில் 'ஆதனூர்' என்ற பெயர்கொண்ட ஊர்கள் பல உண்டு. அவை (1) திருநெல்வேலிக் கோட்டத்து ஆதனூர்,[29] (2) கரூர்க் கூற்றத்து ஆதனூர்,[30] (3) விருத்தாசலக் கூற்றத்து ஆதனூர்,[31] (4) பாபநாசக் (தஞ்சைக் கோட்டம்) கூற்றத்து ஆதனூர்[32] (5) சிதம்பரக் கூற்றத்து ஆதனூர்[33] முதலியன. இவற்றில் நந்தனார் எப்பதியினர் என்று விளக்க நம்பியும் கடமைப்பட்டவராவர்' ஆயின், அவர் கூறுதுவிட்டார். இக்குழப்ப நிலைமையை நீக்க விரும்பிய சேக்கிழார், 'கொள்ளிடத்தின் அலைகள்மோதும் இடத்திலுள்ளது ஆதனூர்; அது 'மேல் காநாடு' என்பதைச் சேர்ந்தது'' [34] என்று தெளிவாக ஐயத்திற்குச் சிறிதும் இடனின்றிக் கூறியிருத்தல் காண்க. கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள இந்த ஆதனூர்க்கு ஒன்றரைக்கல் தொலைவில் திரு ஓமாம்புலியூர் என்ற பாடல் பெற்ற பதி

[28] Seraman Puranam. S. 129—131; I have visited Kanidiyur & Tiruvaiyaru in April 1944.

[29] 434 of 1909.

[30] 189 of 1918.

[31] 125 to 130 of 1934.

[32] Tamil Polld, Vol. 10, p. 261.

[33] Nandanar's Adarur.

[34] S. I.

யுள்ளது. அப்பதி 'மேல் காளுட்டைச் சேர்ந்தது' என்று அங்குள்ள கல்வெட்டுகளிற் குறிக்கப்பட்டுள்ளது [35].

## 2. செருத்துணையார்

இவர்பதி 'மருகல் நாட்டுத் தஞ்சாவூர்' என்று நம்பி குறித்தார். சேக்கிழார் மருகல்நாடு இன்ன நாட்டின் உட்பகுதி என்று படிப்பவர்க்குத் தெரியும்படி, 'பொன்னி நீர் நாட்டு (சோழ நாட்டு) மருகல் நாட்டுத் தஞ்சாவூர் [37] என்று தெளிவுறுத்தியிருத்தல் கண்டு இன்புறத் தக்கது. இது சோழர் காலத்துக் கல்வெட்டுகளில் 'மருகல் நாட்டுத் தஞ்சாவூர்' என்றே பயின்றிருத்தல் கவனிக்கத்தக்கது [38] இம்மருகல் தஞ்சைக் கோட்டத்து நன்னிலம் கூற்றத்தில் உள்ள பதியாகும். இதுவே 'திருமருகல்' என்ற பாடல் பெற்ற பதி.

## 3. பெருமிழலைக் குறும்பர்

இவர் 'மிழலை' என்ற ஊரினர் என்பது நம்பிகூற்று [39] சுந்தரர் தமது நாட்டுத் தொகைப் பதிகத்தில், 'மிழலை நாட்டு மிழலை, வெண்ணி நாட்டு மிழலை' [40] என்று பாடியுள்ளார். இதனால் 'மிழலை' என்ற பெருடன் இரண்டு பதிகள் இருந்தமை தெளிவு. இதனைக் கவனித்த சேக்கிழார், குறும்ப நாயனரது ஊர் எஃது என்பதை ஆராய்ந்து, 'மிழலை நாட்டுப் பெரு மிழலை' [41] என்று கூறிச் சென்ருர்.

---

35 504, 506 of 1926; I hava visited these two places in April 1943.

36 Vide his Andadi, S. 66.

37 S. I.

38 S. I. 1. 2. 70; VII. 44.

39 S. 27.

40 S. 5.

41 S. 1.

இது கும்பகோணக் கூற்றத்தில் உள்ளது. இப்பொழுது 'மிழலை' என்ற பெயருடன் அழிந்த நிலையில் உளளது. அங்கு அழிந்த சிவன் கோவில் இருக்கின்றது. அதன் அறை ஒன்றில் பெருமிழலைக் கூறும்பர் படிமம் இருக்கின்றது. மிலட்டூர்—பெருமிலட்டூர் எனவும், ஆர்க்காடு—பேராார்க்காடு எனவும், அரசூர்—பேரரசூர் எனவும் வழங்கினாற்போல இன்றைய மிழலை பண்டைக் காலத்திற் 'பெருமிழலை' என வழங்கப்பட்டது போலும்! [42]

## 4. இடங்கழி நாயனார்

இவர் 'இருக்கு வேளூர்' என்ற பதியினார் என்று நம்பி குறித்தார். [43] இருக்குவேளூர் என்பது வடவெள்ளாற்றின் தென் மருங்கில் பச்சைமலைப் பக்கத்தில் உள்ளதெனத் தெரிகிறது [44]. ஆயின், சேக்கிழார் 'இடங்கழியார் பதி-கோனாடு கொடி நகரம் கொடும்பாளூர்' [45] எனத் தெளிவாகக் கூறி நம்பி கூற்றை மறைமுகமாக மறுத்துவிட்டார். கொடும்பாளூரை ஆண்ட சிற்றரசர் நாயன்மார் காலமாகிய பல்லவர் காலத்தில் சிறப்புடன் இருந்தவர் என்பது கல்வெட்டுகளாற் புலனாகும் செய்தி. சேக்கிழார் நம்பி கூறியதையும் மறுத்துக் கூறியுள்ளார் எனின், அவர் கொடும்பாளூருக்குச் சென்று இடங்கழி நாயனாரைப் பற்றி விசாரித்த பிறகே இம்முடிபுக்கு வந்தனர் என்று நினைத்தல் தவறாகாது.

## 5. கணம் புல்லர்

முன்சொன்ன இடங்கழியார் 'இருக்குவேளூரினர்' என்றும் அவ்வாறே கணம் புல்லரும் இருக்குவேளூரினர்

---

[42] Tamil Polil, Vol. IV, pp. 141—144.
[43] S, 65.
[44] N. M. V. Nattar's article, Sentamil Selvi, Vol. 21, pp. 255—56.
[45] S. 2.

என்றும் நம்பி குறித்தார். ஆயின், சேக்கிழார் பின்னதைச் சரியென்று கொண்டு, முன்னதைக் கொடும்பாளூர் என மாற்றினதை நோக்க, இவ்விடங்களைப் பற்றிய சேக்கிழார் அறிவு தெற்றென விளங்குமன்றோ? இருக்குவேளூர் யாண்டையது என்பதற்குச் சேக்கிழார் கூறும் விடை காண்க:—

"இருக்குவேளூர் செல்வம் மலிந்த மாடங்கள் பெற்றது; பெருங் குடிமக்களை நெருக்கமாகக் கொண்டது; வட வெள்ளாற்றுந் தென்கரைப்பால் உள்ளது; பொழில்களை மிக்குடையது; அப்பொழில்களில் விளையும் சுளைபொழி தேன் வயல்களிற் பாயும்." [46] சிதம்பரத்திற்கு வடக்கே ஓடும் ஆறு வெள்ளாறு என்று கூறப்படினும், சேக்கிழார் காலத்திலோ-நாயன்மார் காலத்திலோ அப்பெயர் பெற்றதில்லை. அது 'நிவா' எனப் பெயர் பெற்றிருந்தது. புதுக்கோட்டை நாட்டில் உள்ள குடுமியான் மலைக் கல்வெட்டுக்களால் அவ்வூர்க்கருகில் 'வெள்ளாறு' என்ற பெயருடைய யாறு ஒன்று ஓடுகின்றது என்பது புலனாகின்றது. [47] அதுவே, புதுக்கோட்டை நாட்டிற்கு மேற்கே மருங்காபுரிப் பக்கத்தில் உள்ள வேழமலையில் தோன்றி, அந்நாட்டின் வழியாகச் சென்று அறந்தாங்கித் தாலூகாவில் உள்ள மணமேற்குடிக்கு வடபுறத்தில் வங்கக் கடலில் கலக்கிறது. [48] அது பாண்டிநாட்டிற்கு வட எல்லையாக இருந்தல்பற்றி அதனை முற்காலத்தில் 'வட வெள்ளாறு' என வழங்கியுள்ளனர். [49] அக்காரணம் பற்றியே சேக்கிழாரும் அதனை 'வட வெள்ளாறு' என்று மேலே குறிப்பிட்டனர் என்பது இங்கு அறியத்தக்கது. [50]

[46] Kanampullar Puranam, S. I.
[47] Ins. of the Pudukkottai State, Nos. 290, 191 & 375.
[48] History of the Pudukkottai State, pp. 2—3.
[49] S. I. I. VII-1019.
[50] T. V. S. Pandarattar's article, pp. 2—3.

வட வெள்ளாற்றின் தென்மருங்கில் பச்சைமலைப் பக்கத்திலே கணம்புல்லர் பிறந்த ஊராகிய இருக்குவேளூர் உள்ளதெனத் தெரிகிறது. இப்பதி வளமிக்க மலைச்சாரலில் இருப்பது என்பது புலப்படச் சேக்கிழார் கூறியிருத்தல் படித்தின்புறத் தக்கது. [51]

## 6. கலிக்காமர்

இவர் ஊரை நம்பி குறித்திலர். [52] சுந்தரரும் குறிக்கவில்லை. ஆயின், சேக்கிழார் அதனைத் தெளிவாக விளக்கியுள்ளார்:—

"சோழ நாட்டில் பொன் கொழிக்கும் காவிரி வடகரைக் கிழ்பால் ஆடும் கொடிகளைக் கொண்ட உயர்ந்த மாடங்களை யுடைய நகரம் திருப்பெருமங்கலம் என்பது; அதுவே கலிக்காமர் என்ற சோழர் சேனைத் தலைவர் வாழ்ந்த பதி." இவ்வூர் காவிரி வடகரைக்குக் கிழக்கே திருப்புன்கூருக்கு அண்மையில் உள்ளது.

## 7. மானக்கஞ்சாறர்

இவர் ஊர் இவர் பெயர் கொண்டு ஊகிக்கக்கூடிய அளவிலேயே சுந்தரரும் நம்பியும் குறித்தனர். ஆயின், சேக்கிழார் அஃது இன்னவூர் என்பதனை 6 செய்யுட்களால் விளக்கிப்போந்தார். அவ்வூர் ஆனந்த தாண்டவபுரம் என்பது. அப்பகுதியின் கீழ்ப்பகுதியில் 'பஞ்சவடீசர்' ஆலயம் ஒன்று இருக்கின்றது. அவ்வூர்க் கோவிலுள் வைத்துப் பூசிக்கப்படுகின்ற மாவிரதியார், மானக்கஞ்சாறர் படிமங்கள் மிகப் பழையவை. அவை 45 ஆண்டுகட்கு முன் நிலத்தினின்றும் எடுக்கப்பட்டவை. அவ்வூரின் மேல்

---

[51] N. M. V. Nattar's article, Ibid. p. 256.

[52] S. 53.

[53] Kalikkamar Puranam, S. 1 & 5.

புறம் 'வல்லத்து வழி' எனப்படும் பகுதியில் உள்ள நிலங்கள் இப்போதும் கரும்புப் பயிர் மிகச் செழித்து விளைவன என்று பெயர் பெற்றவை. இது "வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்" என்ற சேக்கிழார் குறிப்பை விளக்கி நிற்கிறது என்னலாம்.[54] இதனை நோக்க, 'கரும்பஞ்சாறூர்' என்பது 'கஞ்சாறூர்'. என மருவியதோ என்று நினைக்க இடமுண்டு. அஃதாயின், இப்பதியின் பழைமை போற்றத்தக்க பழமையாகும் என்பதில் ஐயமில்லை.

## 8. இயற்பகையார்

இவர் பதி காவிரிப்பூம்பட்டினம் இந்நகரம் இன்றுள்ள பல்லவனீச்சுரம் என்ற கோவிலையும் தன் அகத்தே கொண்டிருந்தது என்பது, "பட்டினத்துறை பல்லவன் ஈச்சரம்" என்ற சம்பந்தர் தொடரால் அறியலாம்.[55] பல்லவன் ஈச்சரத்திற்கு ஏறத்தாழ அரைமைல் மேற்கே 'சாய்க்காடு' என்னும் சிற்றூர் உண்டு. அங்குள்ள கோவில் அப்பர், சம்பந்தர் பாடல்கள் பெற்றது. நகரத்திற்கும் இக்கோவிற்கும் இடையில் பழைய காலத்தில் காடு இருந்தது என்பது 'சாய்க்காடு' என்ற பெயரானே அறியலாம். அக்காட்டிற்குள் இயற்பகையாரது மனைவியுடன் புகுந்த அடியாராகிய இறைவர், 'இயற்பகை முனிவா! ஓலம்' என்று ஓலமிட்டது காட்டிற்கு வெளியே இருந்த இயற்பகையார்க்குக் கேட்டது. உடனே அவர் காட்டிற்குட் புகுந்து தம் சுற்றத்தாரை எதிர்த்தார்; அடியாராக வந்த இறைவர் சாய்க்காட்டுக் கோவிற்குள் ஓடி மறைந்தார் என்பது சேக்கிழார் கூற்று.[56] இன்று காவிரிப்பூம்பட்டினம் சென்று கடற்கரையிலோ-அன்றிக் காவிரி கடலோடு கலக்கும் இடத்திலோ நின்று சாய்க்

---

[54] K. S. Mudaliar's Periyapuranam, Vol. 2, p. p. 1117 & 1247.

[55] சம்பந்தர் தேவாரம்.

[56] S. 26—30.

காட்டுக் கோவிலைப் பார்ப்பவர்,[57] சேக்கிழார் விளக்கியுள்ள இடநிலைமை பெரிதும் பொருத்தமானதே என்பதை நன்குணர்வர். இதனை இங்கு உத்தேசமாகத் தந்துள்ள படத்தாலும் அறியலாம்.

## 9. விறல்மிண்டர்

இவர் பதி 'செங்குன்றம்' என்று நம்பி குறித்தார். அவ்வளவே: அது சேரநாட்டுச் செங்குன்றூரா? கொங்குநாட்டுச் செங்குன்றூரா? என்று படிப்போர்க்கு ஐயமுண்டாதல் இயல்பு. இவ்வையத்தை அறவே அகற்றச் சேக்கிழார், சேரர்நாட்டின்கண் உள்ள ஊர்களில் முன் வைத்து எண்ணத்தக்கது இச் செங்குன்றூர்"[58] எனத் தெளிவாகக் கூறியிருத்தல் காண்க.

திருவிசயமங்கை: இப்பெயருடன் திருப்புறம்பயத்திற்கும் திருவைகாவூருக்கும் இடையில் மண்ணியாற்றங்கரையில் ஓர் ஊர் உள்ளது. அதனில் சிவன் கோவில் ஒன்று இருக்கின்றது. அஃதன்றிக் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள கோவந்த புத்தூரில் பழைய சிவன் கோவில் ஒன்று உண்டு. அக்கோவிலின் பெயரும் 'விசயமங்கை' என்பதே. இதுவே பாடல் பெற்றது என்பது, அப்பர் பாடலால் தெளிவாகத் தெரிகிறது.[59] இந்த நுட்பத்தைச் சேக்கிழார் தெளிவாக அறிந்து, சம்பந்தர் யாத்திரை வழியைக் குறிப்பது காணத்தக்கது:

"சம்பந்தர் திருப்பழுவூரைத் தரிசித்துவிட்டு விசயமங்கையை அடைந்தார்; பிறகு திருவைகாவூரையும் அதன் பிறகு திருப்புறம்பயத்தையும் தரிசித்தார்."[60]

---

57 I have visited this place in February 1943.

58 S. 1 & 2.

59 Tirumurai 5, No. 71, S. 3,

60 S. 235—240.

இதுதான் நேரான வழியாக வுள்ளது. மண்ணியாற்றங் கரையில் உள்ள திருவிசயமங்கையாயின், மேற்கில் உள்ள திருவைகாவூருக்கு முதலில் வந்துதான் பிறகு விசயமங்




கைக்கு வரநேரும். இதனால், கொள்ளிடக் கரையில் உள்ள கோவந்தபுத்தூரில் உள்ள 'விசயமங்கை' என்ற கோவிலே சம்பந்தர் தரிசித்ததாகும். மேலும், அதுவே

அப்பர் குறித்த கோவில் என்பது அக்கோவில் கல்வெட்டுக்களாலும் உறுதிப்படுகின்றது.[61]

இங்ஙனம் மயங்கத்தக்க இடங்களை எல்லாம் தெளிவாகக் கூறிச் சென்ற சேக்கிழார் தல அறிவு நிரம்பப் பெற்றவர் எனக் கோடல் பொருத்தமே அன்றோ?

நாயன்மார் மரபுகள். நம்பி தமது திருத்தொண்டர் திரு அந்தாதியில் ஏறத்தாழ 35 நாயன்மாருடைய மரபுகள் குறித்திலர். ஆயின், சேக்கிழார் எறிபத்தர், குலச்சிறையார், திருமூலர், தண்டி, கணம்புல்லர், காரி நாயனார் ஆகிய அறுவர்க்கே மரபு கூறாது, ஏனைய அனைவர்க்கும் மரபு குறித்தார். இஃது எங்ஙனம் இயன்றது? அவர் தாம் தலயாத்திரையின்போது அவ்வந் நாயன்மார் பதிகளிற் கேட்டறிந்தனர் போலும்! அங்ஙனம் கேட்டும் மேற்சொன்ன அறுவர் மரபு அறியக்கூடவில்லை போலும்! இவ்வறுவர் மரபுகளையும் அவர் ஊகமாகக் கூறியிருக்கலாம் அல்லவா? பொறுப்புள்ள அப்பெரும் புலவர் அங்ஙனம் செய்ய விரும்பவில்லை.

நாயன்மார்பற்றிய சிலகுறிப்புகள். திருநீலகண்டர் இளமை துறந்த வரலாறு, நந்தனார் செய்த திருப்பணிகள், சாக்கியர் காஞ்சியில் சிவனைப் பூசித்து முத்திபெற்றமை, சுந்தரர் சங்கிலியார் திருமணம்போன்ற மூல நூல்களில் விளக்கமாக இல்லாத பல செய்திகள் சேக்கிழார் மூலமாகவே முதன்முதல் அறியப்படுகின்றன. இவ்விவரங்களை நோக்க, சேக்கிழார் இவற்றைத் தம் தலயாத்திரையின்போது விசாரித்தறிந்தனர் என்று நம்ப இடமுண்டாகிறது.

மடங்கள். சேக்கிழார் காலத்தில் சோழப் பெருநாட்டில் பல மடங்கள் இருந்தன என்பதை 6-ஆம் பிரிவிற் குறித்தோம் அல்லவா? அவை எல்லாம் நாயன்மார்காலத்

---

61 Kalaimagal, 1934, pp. 553—556; Tamil Polil, Vol. 7, pp. 299—303.

தில் இருந்தவை என்று சேக்கிழார் தம் நூலிற் குறிக்காமை நோக்கத்தக்கது. அவர் திருவதிகை, சித்தவடம், திருநல்லூர், சீகாழி, திருப்புகலூர், திருக்கடவூர், திருமறைக்காடு, திருப்பூந்துருத்தி திங்களூர், திருமருகல், திருவாரூர், திருவீழிமிழலை, மதுரை, காஞ்சி காளத்தி, சாத்தனூர், கொடுங்கோளூர், ஒற்றியூர் என்ற இடங்களிற்றும் நாயன்மார் காலத்தில் மடங்கள் இருந்தன என்று கூறியுள்ளார். இவற்றுள் திருவதிகை, திருப்புகலூர், சாத்தனூர், கொடுங்கோளூர், ஒற்றியூர், என்ற இடங்களில் இருந்த மடங்கள் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ள செய்தி 7-ஆம் பிரிவிற் கண்டோம் அல்லவா? அவை சோழர்காலத்தில் புதியனவாக உண்டாக்கப்பட்டன என்று அக் கல்வெட்டுகளிற் குறிக்கப்படாமையால், அவை பழையனவே எனக் கோடல் தவறாகாது. கல்வெட்டுகளிற் கண்ட மடங்கள் இருந்தாற்போலவே, சேக்கிழார் குறித்த - ஆனால் கல்வெட்டுகளில் இடம்பெறாத - பிற மடங்களும் இருந்தன எனக் கோடலில் தவறொன்றும் நேராது. (1) 'அப்பர் அமைத்த திருமடம்' என்று திருப்பூந்துருத்தியில் அழிவுற்ற நிலையில் இன்றும் ஒன்று இருக்கின்றது. (2) திருவதிகையில் 'திலகவதியார் மடம்' கோவிலுக்கு எதிரில் இடிந்து பாழடைந்துகிடக்கிறது. (3) 'அமர்நீதியார் மடம்' திருநல்லூரில் பாழ்பட்ட நிலையில் இருக்கின்றது. இச்சான்றுகளை நோக்கச், சேக்கிழார் குறித்த பிற மடங்கள் இருந்து அழிந்தன என்பதை அறியலாம்.

## சேக்கிழாரும் தஞ்சைப் பெரிய கோவில் ஓவியமும்

7-ஆம் பகுதியில் தஞ்சைப் பெரிய கோவில் ஓவியங்கள் குறிப்பிடப்பட்டன அல்லவா? அவற்றைச் சேக்கிழார் எங்ஙனம் பயன்படுத்தினார் என்பதைக் காண்போம்:
1. சுந்தரரை இறைவன் முதுமறையவனாகவந்த ஓலைகாட்டி ஆட்கொண்ட செய்தியை விளக்கும் ஓவியக் குறிப்புக்கும் சேக்கிழார் கூற்றுக்கும் வேறுபாடு இல்லை.

2. சுந்தரர் வெள்ளை யானைமீதும் சேரமான் பரிமீதும் சென்றதைச் சேக்கிழார் ஒப்புக்கொண்டார்; ஆயின், அவ்விருவரும் கடல்வழிச் சென்றனர் என்ற படக்



குறிப்பை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. என்னை? சேரர் தலைநகரிலிருந்து கடல்வழியே சென்றால் மேற்கே போகக் கூடுமேயன்றி, வடக்கே நிலப்பரப்பிலுள்ள இமயமலையை

அடையமுடியாததாலும், நம்பி பாடலும் சுந்தரரது கொடித்தான்மலைப் பதிகமும் தெளிவாகக் 'கயிலை புக்கனர்' என்பதை உணர்த்துதலாலும் என்க. நாயன்மார் கடல் வழிச் சென்றதாகத் தம் காலத்திலிருந்த வழக்கை * ஒட்டியே இராச ராசன் I காலத்து ஓவியர் வரைந்தனராதல் வேண்டும். அவ்வழக்கை நம்பியார் ஒப்பவில்லை என்பது அவர் பாக்கள் தெளிவுற வுணர்த்தும். சுந்தரரும் சேரமானும் கயிலைசென்றதாக மூன்று இடங்களில் குறிக்கும் நம்பி அவர்கள் கடல்வழிச் சென்றார் என்பதனையோ, விண்வழிச் சென்றனர் என்பதனையோ குறிக்காது விட்டமை கவனித்தற்கு உரியது. இவ்விரண்டும் கூறாதது அவரது (non-committal policy) நன்குணர்த்துகிறதன்றோ? சேக்கிழார் நம்பியைப் போல வாளாவிடாது, ஓவியக்குறிப்பையும் ஒப்புக்கொள்ளாமல் விண்வழிச் சென்றார் என்று ஒரு முடிவாகக் கூறியதற்கு கொடித்தான்மலைப் பதிகமே காரணம் என்னலாம். செங்குட்டுவன் இமயமலையடிவாரம் போகும்பொழுது அவன் படைகள் சென்ற வழியில் கடல் அலைகள் படைகளின் பாதங்களை அலம்பின என்பது சிலப்பதிகாரக் கூற்று.[62]

3. சுந்தரருவர் இசைமுழக்கமும் மலர்மாரி பெய்தலும் குறிக்கும் ஓவியத்தைச் சேக்கிழார் அப்படியே தழுவிக் கொண்டனர்.[63]

சேக்கிழாரும் சிற்பமும். சேக்கிழார் காலத்துச் சிற்பங்களில் அவரது உள்ளத்தைக் கவர்ந்தது, கங்கைகொண்ட சோழபுரத்துச் சிவன்கோவிலில் உள்ள சண்டேசர் 'சண்டே

---

*சேரமான் கடலவழிச் சென்றார் என்ற மலையாளநாட்டுக் கூற்று இங்கு நினைவிற் கொள்ளத் தக்கது.

[62] காதை 26, வரி. 80-81.

[63] S. 34.

சப் பதம்' பெற்றதைக் குறிக்கும் சிற்பமாகும். இறைவன் உமையம்மையோடு அமர்ந்து, தமது மடித்தூன்றிய வலக் கால் அடியில் சண்டேசரை அமரவைத்து, தாம் சூடியிருந்த கொன்றை மாலையை எடுத்து அவர் முடிமீது சூட்டிச் சண்டேசப் பதம் அருளும் இச்சிற்பம் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பனவாகும். இதற்கு வலப்புறம கணநாதர் ஆடிப்பாடிக் களித்தலும், இடப்புறம் பசுக்கள் நிற்றலும் (பசுக்கள்-வேதங்களைச் சுட்டுவன?) காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பம் சேக்கிழார்க்கு முற்பட்டதென்பது 6-ஆம் பிரிவில் விளக்கப்பட்டது. சேக்கிழார் காலத்தில் கங்கை கொண்ட சோழபுரமே சோழப் பெருநாட்டின் தலைநகரமாக இருந்தது. ஆதலின், சேக்கிழார் நாள்தோறும் இக்கோவிலைத் தரிசித்தார் எனக் கொள்ளலாம். அங்கிருந்த இச்சிற்பம் அவரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அதனால் அவர் இச்சிற்பத்து அமைப்பை இரண்டு பாக்களால் சித்திரித்துவிட்டார்.[64] இச்சிற்பத்தையும் சேக்கிழார் பாக்களையும் கண்டோர் இவ்வுண்மையை நன்குணர்வர்.

---

64 'அண்டர் பிரானும் தொண்டர்தமக்
அதிப னாக்கி, 'அனைத்துநாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்'
என்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினார்.
"எல்லா வுலகும் ஆர்ப்பெடுப்ப
எங்கும் மலர்மா ரிகள்பொழியப்
பல்லா யிரவர் கணநாதர்
பாடி ஆடிக் களிப்பயிலச்
சொல்லார் மறைகள் துதிசெய்யச்
சூழ்பல் லியங்கள் எழுச்சிசைவ
நல்லா(று) ஓங்க நாயகமாம்
நங்கள் பெருமான் தொழுதணைந்தார்''

—சண்டேசர் புராணம், செ. 56, 57

சேக்கிழாரும் நாயன்மார் உருவச்சிலையும்-அமர்நீதிநாயனாரும் அவர் மனைவியாரும் கோவணத்துணிக்கு ஈடாகத் துலை புக்கனர் என்று நம்பி குறித்தார்.[65] ஆயின், சேக்கிழார் அவ்விருவருடன் அவர் தம் மைந்தனும் துலைபுக்கனன் என்று மாற்றி அமைத்தார். இங்ஙனம் சேக்கிழார் மாற்றிக்கூறக் காரணம் என்ன? பழையாறை வடதளியில் அமர்நீதியார் சிலையும் அவர் மனைவியார் கைகளில் மகன் இருத்தலைக்காட்டும் சிலையும் இன்றும் காணத்தக்கனவாக உள்ளன.[66] இச்சிலைகள்சேக்கிழார்க்கு முற்பட்டனவாகிச் சேக்கிழார் கருத்தை ஈர்த்தனவாகலாம். சேக்கிழாரது புதிய சேர்க்கைக்கு (மகனைச் சேர்த்தமைக்கு) இவ்வம்மையார் சிலை ஒன்று தவிர வேறு காரணம் கூறக்கூடவில்லை. இந்நுட்பமான குறிப்பால் சேக்கிழாரது நுணுகிய ஆராய்ச்சித் திறன் நன்கு விளங்கும்.

இதுகாறும் கூறப்பெற்ற பற்பல சான்றுகளால், சேக்கிழார் தமிழகத்தை நன்றாகச் சுற்றிப் பார்த்தவராவர் என்பதும், நாயன்மார் வாழ்ந்த பதிகள் பாடல்பெற்ற கோவில்கள், அக்கோவில்களில் இருந்த நாயன்மார் திருவுருவங்கள், ஓவியங்கள், சிற்பங்கள் முதலியவற்றை இயன்ற வரை (பெரும்பாலும்) நேரிற் கண்டவர் என்பதும் தெளிவாக விளக்கமுறும் செய்திகளாம்.

ஐந்தாம் காரணம்: பெரியபுராணத்துட் கூறப்படும் வரலாற்றுச் சிறப்புடைய நாயன்மாரைப்பற்றிய குறிப்புகளைச் சேக்கிழார் அரும்பாடுபட்டுத் தொகுத்துக் கூறினமை மேற்சொன்ன மூவகை வேறுபாடுகட்கும்சிறந்ததொரு காரணமாகும். இதனை விளக்கமாக அடுத்த பிரிவிற் காண்போம்.

---

65 Andadi, S. 7.

66 C. K. S. Mudaliar's P. P, Vol. I, Plate, p. 684.

# X. வரலாற்றுச் சிறப்புடைய நாயன்மார் பற்றிய செய்திகள்

(கி. பி. 400-865)

## 1. இருண்ட காலச் செய்திகள்

(கி. பி. 400—600)

இப்பகுதியில் (1) மூர்த்தியார், (2) கூற்றுவர், (3) கோச்செங்கணன், (4) புகழ்ச்சோழர், (5) தண்டியடிகள் காலத்துச் சோழ அரசன், (6) ஐயடிகள் காடவர்கோன் என்போர் அடங்குவர். இவர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளை முறையே காண்போம்:

### 1. மூர்த்தியார்

இவ்வறுவருள் மூர்த்தியார் முற்பட்டவர் எனக் கூறலாம். 'இவர் காலத்தேதான் வடுகக் கருநாடர் வேந்தன் கடல்போன்ற தானையோடு வந்து பாண்டிய நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான்; மூர்த்தியாரது சிவத் தொண்டுக்கு இடையூறு செய்தான்; அவன் சிவ வழிபாட்டை ஒழிக்க முயன்றவன்; சமணச் சார்புடையவன்' என்பது சேக்கிழார் கூற்று.[1]

இங்ஙனம் பாண்டிய நாட்டையும் சோழநாட்டையும் கைப்பற்றியவன் அச்சுதவிக்கந்தன் என்பது புத்ததத்தர் கூற்றாலும் தமிழ் நாவலர் சரிதையில் உள்ள பழம் பாக்களாலும் முன்பு [2] அறியப்பட்டதே. அவன் காலத்தில் வைதிக சமயம் ஒடுக்கப்பட்டுப் பிரமதேயம் அழிக்கப் பட்டதும் இங்ஙனம் புதியராகப் புகுந்த இக்களப்பிர மரபினர்க்கும் குடிகட்கும் மனவொற்றுமை இல்லை என்பதும் வேள்விக்குடிப் பட்டயத்தால் நன்குணரலாம்.[3] இச் செய்தியை நோக்கச் சேக்கிழார் கூறும் மூர்த்தி

---

1 Murthiyar Puranam, S. 11—17.

2 Vide Chap. 5.

3 K. A. N. Sastry's 'Cholas', Vol. I, p.121.

யார்பற்றிய செய்தி உண்மையாக இருத்தல் கூடும் என்று எண்ண இடமுண்டாகிறது.[4]

சென்ற பகுதியில் வரலாற்றுச் சிறப்புடைய நாயன் மார் இன்னவர் என்பது கூறப்பட்டது. இங்கு, அவர்களைப் பற்றிச் சேக்கிழார் கூறும் சில குறிப்புகள் எந்த அளவு தென் இந்திய வரலாற்றுக் குறிப்புகளுடன் ஒன்று படு கின்றன (how far historical) என்பதைக் காண்போம்.

## களப்பிரர் இடையீடு

இக்களப்பிரர் தமிழகத்தைக் கைப்பற்றியதால் பல் லவர், பாண்டியர், சோழர் ஆகியோர் தம்முரிமை இழக்க நேர்ந்தது. ஆயின் பல்லவரும் பாண்டியரும் ஏறத் தாழக் கி. பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இக்களப்பிரரை ஒடுக்கித் தங்கள் நாட்டைக் கைப்பற்றி விரிவாக்கினர் என்பது சிம்மவிஷ்ணு என்ற பல்லவன் வரலாற்றாலும் கடுங்கோன் என்ற பாண்டியன் வரலாற்றாலும் அறிய லாம். ஆயின், சோழர் பலன் பெற்றிலர். அவர் நாட்டின் பெரும்பகுதி களப்பிரர் ஆட்சியிலிருந்து விடுபட்டுப் பல் லவர் ஆட்சிக்கு உட்பட்டுவிட்டது. பாவம்! இத் தாழ்ந்த நிலையில் அவர்கள் ஏறத்தாழக் கி. பி 900 வரை இருக்க வேண்டியவர் ஆயினர். அவர்கள் வடக்கே பல்லவப் பேரர சிற்கும் தெற்கே பாண்டியப் பேரரசிற்கும் இடையில் மிகச் சிறிய நிலப் பகுதியை ஆண்டுவந்தனர். அவர் தம் பழைய மரபின் சிறப்புக் கருதிப் பல்லவரும் பாண்டியரும் அவர்களைப் பெரும்பாலும் வருத்தாது விட்டனர்; அவ் வப்போது அவர்களிடம் பெண்கொண்டும் வந்தனர்; தம் மிடம் அரசியல் அலுவலை விரும்பிய சோழ மரபினர்க்கு

---

4 நம்பி திருவிளையாடலின் காலம் திட்டமாகக் கூறக்கூட வில்லை என்பது இங்கு நினைவிற் கொள்ளத் தக்கது.
—Vide K. A. N. Sastry's 'Cholas', Vol. II, part I, p. 535

உயர் பதவிகள் வழங்கியும் வந்தனர்.[5] இங்ஙனம் சோழர் பேரரசச் சிறப்பின்றி இருந்தமையாற்றான், மங்கையர்க்கரசியார் இன்னவர் மகளார் என்று சம்பந்தர்க்கு அறிமுகப்படுத்த முயன்ற குலச்சிறையார் வேறு சிறப்பொன்றும் கூருது,

"பருங்கை யானைவாழ் வளவர்கோன் பாவையார்" [5a]

என்று சோழனது யானைச் சிறப்பைமட்டுமே கூறினர் எனச் சேக்கிழார் நுட்பமாகக் குறித்திருத்தல் கவனிக்கத் தக்கது.

2. கூற்றுவ நாயனர்

இவரைப்பற்றி முன்னரே கூறப்பட்டது.

3. கோச்செங்கணன்

(1) இவருடைய பெற்ரோர் பெயர், (2) இவர் காலத்தில் தில்லை உயர்வடைந்தமை, என்ற இரண்டு குறிப்புகள் சேக்கிழார் கூறுவன.

4. புகழ்ச் சோழர்

(1) இவர் கருவூரையும் பிடித்தாண்டவர், (2) அதிகன் திறை கட்டாததால் அவனை வென்றவர், (3) கொல்லப்பட்ட பகைவருள் ஒருவன் நெற்றியில் திருநீறு கண்டு, அடியாரைக் கொன்ற பாபத்திற்கஞ்சித் தீக்குளித்தவர் என்பன சேக்கிழார் கூறும் புதிய செய்திகள்.

5. திருவாரூரில் தண்டியார்க்கும் சமணர்க்கும் நடந்த வாதில் ஒரு சோழ அரசன் நடுவனாக இருந்தான்; சமணரை ஊரைவிட்டு விரட்டினான் என்பது.

இச் செய்திகள் சேக்கிழார்க்கு முற்பட்ட நூல்களில் இல்லை. இவை சோழ மன்னர்களைப் பற்றிய செய்திகள்

---

5 Ibid. Vol. I, p. p. 120, 122.

5a Sambandar Puranam, S. 670.

ஆதலின், சோழப் பேரரசின் முதல் அமைச்சராகிய சேக்கிழார், தக்க சான்றுகள் கொண்டு உண்மைதெளிந்து இச்செய்திகளைத் தொகுத்தனர் என்று கோடலே பொருத்தமானது.

## 6. ஐயடிகள் காடவர்கோன்

இவர் (1) வடமொழி தென்மொழிகளில் வல்லவர், (2) வடபுலம் கைக்கொண்டவர், (3) மகனிடம் அரசை ஒப்புவித்துச் சிவத்தல யாத்திரை செய்தவர் என்பன நுட்பமான செய்திகள். இவை சேக்கிழார்க்கு எங்ஙனம் கிடைத்தன?

பல்லவப் பேரரசு ஒழிந்த பிறகு அம்மரபினர் ஆதித்தன் காலமுதல் சோழப் பேரரசில் உயர் அலுவலாளராக வேலை பார்த்து வந்தனர். அவருள் சேக்கிழார் காலத்துப் பல்லவன் - மோகன் ஆட்கொல்லி என்ற குலோத்துங்கசோழக் காடவராயன் என்பவன். அவன் நிலைமை சேக்கிழார் காலத்தில் படிப்படியாக உயர்ந்தது என்பது அவனுடைய கல்வெட்டுகளால் நன்கு புலனாகிறது. அவன் மரபில் வந்தவனே சோழப் பெருநாட்டைக் கி பி. 13-ஆம் நூற்றாண்டில் நடுங்கவைத்துச் சோழப் பேரரசனைச் சிறை செய்த கோப்பெருஞ் சிங்கன். அக் காடவராயன் திருநாவலூர், திருவதிகை, திருமுதுகுன்றம் முதலிய இடத்துச் சிவன் கோவில்கட்குத் திருப்பணி செய்த சிவபக்தன்.[6] அவன் காஞ்சிப் பல்லவர் மரபினன் ஆதலின், சேக்கிழார் அவன் வாயிலாக, அவன் முன்னோரான ஐயடிகள் காடவர் கோனைப்பற்றி அவன் மரபில் வழி வழியாகச் சொல்லப் பட்டுவந்த வரலாற்றைத் தெரிந்திருக்கலாம்.

இன்று சிதைந்த நிலையில் நமக்குக் கிடைத்துள்ள ஐயடிகள் பாடிய 'க்ஷேத்திர வெண்பா' சேக்கிழார் காலத்

[6] Ibid. Vol. II, part I, pp. 77—78.

தில் நன்னிலையில் இருந்திருக்கலாம்; அதன் பாயிரத்தில் ஐயடிகளைப் பற்றிய மேற்சொன்ன குறிப்புகள் எழுதப் பட்டிருக்கலாம். இவ்விரண்டில் ஒன்றின் மூலமாகவே சேக்கிழார் இக்குறிப்புகள் தொகுத்தார் எனக் கொள்ளலாம்.

# II. பிற்காலச் செய்திகள்

(கி. பி. 600—865)

## 1. அப்பர்

(1) இவர் காலத்து அரசன் குணபரன் என்ற விருதுப் பெயர் பூண்டவன்; (2) அவன் முதலில் சமணனாக இருந்தவன்: (3 பின்னர்ச் சைவனாக மாறினவன்; (4) பாடலியில் (பாதிரிப்புலியூரில்) இருந்த சமணப்பள்ளி, பாழிகளை இடித்து, அச் சிதைவுகளைக் கொண்டு திருவதிகையில் 'குணபர ஈசுவரம்' கட்டினான் என்பது சேக்கிழார் வாக்கு. இக்குறிப்புகள் சென்ற 5-ஆம் பிரிவிற் கூறப் பட்டவையே.

(1) 'குணபரன்' பல்லவன் என்ற முதலாம் மகேந்திர வர்மன் என்பதும் முற்கூறப்பட்டது. (2) அவன் முதலில் சமணனாக இருந்தவன் என்பதற்குச் சித்தன்ன வாசல் சிற்பங்களும் ஓவியங்களும், திருச்சிமலையில் சமணர் உப யோகித்த குகை ஒன்றில் உள்ள கல்வெட்டுகளும்[7] தக்க சான்றாகும். (3) திருச்சி குகைக் கோவிலிலுள்ள வட மொழிச் சுலோகமே அவன் சைவனானமைக்குத் தக்க சான்றாம். அது 5-ஆம் பிரிவிற் கூறப்பட்டது. அத்துடன் இசையைப்பற்றிய அவனது குடுமியான்மலைக் கல்வெட்டின் தொடக்கம். 'சித்தம் நமஸிவாய' என்று இருப்பதும் குறிக்

---

7 A. R. E 1938. II. pp. 78—79.

கத்தக்கது. (4) மகேந்திரனுக்கு முன்பே பல நூற்றாண்டுகளாகத் திருப்பாதிரிப்புலியூரில் சமணமடம் இருந்து வந்தது என்பது 'சர்வநந்தி' என்ற திகம்பர சமணர் அம் மடத்தில் இருந்து எழுதிய 'லோக விபாகம்' என்ற நூலைக்கொண்டு அறியலாம். அந்நூல் கி. பி. 5-ஆம் நூற்றாண்டின் இடையிற் செய்யப்பட்டது.[9] சிம்ம சூரி, சர்வநந்தி போன்ற புகழ்பெற்ற திகம்பர சமண ஆசாரியர் பலர் அம்மடத்தில் இருந்தவராவர். அம்மடம் திகம்பர சமணர் மடந்தான் என்பது அப்பருடைய பாக்கள் பலவற்றால் அறியலாம்: "காவிசேர் கண்மடவார் கண்டோடிக் கதவடைக்குங் கள்வனேன்", "நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்." இப் புகழ்பெற்ற சமண மடம், சமணத்திலிருந்து சைவனான மகேந்திர வர்மனால் அழிக்கப்பட்டது உண்மையாகலாம். என்னை? அம் மடத்தின் சிதைவுகளும் சமணர் சிலை ஒன்றும் இன்றும் பாதிரிப்புலியூர்க்கு அண்மையில் திருவந்திபுரம் போகும் பாதையருகில் காணக்கிடக்கின்றன ஆதலாலும், மகேந்திரனுக்குப் பிறகு அம்மடத்தைப்பற்றி வரலாற்றில் ஒன்றும் கூறப்படாமையாலும் என்க.[10] இவையன்றி, அச்சிதைவுகளைக் கொண்டு மகேந்திரன் கட்டியதாகக் கூறப்படும் குணபரஈசுவரம் இன்றும் திருவதிகையில் காட்சியளித்தல் காணலாம்.

## சிறுத்தொண்டர்

(1) இவர் மாமாத்திரர் மரபினர்; வைத்தியக் கலை, வடநூற்கலை படைக்கலப் பயிற்சிகளிற் சிறந்தவர்; (2) தம் மன்னற்காகப் பல போர்கள் செய்தவர்; (3) ஒருமுறை படையுடன் சென்று வாதாவித் தொன்னகரைத் தூளாக்கினர்;

---

8 38 of 1988; S. I. I. IV. p. 12.

9 Mysore Arch. Report for 1909—'10, p. 45.

10 Dr. Minakshi' —'Ad. & S. Life under the Pallavas', pp. 229—231.


பல்லவர் x சாளுக்கியர்
போர்
(கி. பி. 642)
நரசிம்மவர்மன் சிறுத்தொண்டர் x புலிகேசி ii
– வாதாபிப் போர்
ஹர்ஷன் பெருநாடு
சாளுக்கியப் பெருநாடு
கோதாவரி
கலிங்கம்
கிருஷ்ணை
வேங்கை நாடு
வாதாபி
பல்லவப் பெருநாடு
வடபெண்ணை
காஞ்சி
மாமல்லபுரம்
தென்பெண்ணை
உறையூர்
காவிரி
நாகபட்டினம்
சேரநாடு
பாண்டி நாடு
இலங்கை

(4) பிறகு அவர் தம் பதியாகிய செங்காட்டங்குடி அடைந்தார்; தமது ஊரில் கணபதீச்சரத்துக் கடவுளை இறைஞ்சி வாழ்ந்தார்.—இவை சேக்கிழார் தந்த குறிப்புகள்.'' [11]

(1) 'மாமாத்திர்' என்பது 'மகாமாத்திர்' என்பதன் மரூஉமொழி. 'மகாமாத்திரர்' என்பவர் அரசியல் மந்திராலோசனைச் சபையினர். அரசர் இவரைக் கலந்தே போர்ச் செலவு (யுத்த யாத்திரை) செய்வதோ, வேறு செயல்களிற் புகுவதோ பண்டை மரபாகும்.[12] இவ்வமைச்சர் பலகலைகளில் வல்லுநராகவும் சிறந்த போர் வீரராகவும் நற்குடிப் பிறப்புடையவராகவும் இருத்தல் வேண்டும் என்பது மநுதர்ம சாத்திரம்.[12a] சிறுத்தொண்டர் இவ்விலக்கணம் முழுவதும் அமையப்பெற்றவர் என்பதனைச் சேக்கிழார் எவ்வாறேனும் தக்க சான்று கொண்டு கூறியுள்ளமை நோக்கத் தக்கது.

(2) இவர் 'வாதாவியை அழித்தார்' என்பதால், முதலாம் நரசிம்மவர்மன் தானைத்தலைவர் என்பது பெற்றாம். இவர் அவனுக்காகப் பல போர்கள் செய்தார் என்று சேக்கிழார் கூறுவதற்கு ஏற்ப, 'அவ்வரசன் சேர, சோழ, பாண்டிய, களப்பிரருடன் போரிட்டான்' என்று கூரம் பட்டயம் குறிக்கின்றது;[13] அவன் கங்க அரசனை பூவிக்ரமனோடும் போரிட்டான் என்பது கங்கர் கல்வெட்டால் தெரிகிறது.[14] இப்போர்களில் சிறுத்தொண்டர் ஈடுபட்டிருக்கலாம்.

3. வாதாவியை அழித்தமை

வாதாவியில் நரசிம்மவர்மனது 13 ஆண்டு ஆட்சியைக் குறித்த வெற்றித் தூண் உண்டு. வாதாபிப் போர் கி. பி.

---

11 S. 2—11.

12 Arthasastra, Bk. I, Chap. 12, Sama Sastri's ed.

12a VII. 54.

13 Kuram plates of Paramesvaravarman, S. I. I. 1. pp. 144.

14 M. K. Rao's 'Gangas of Talkad', p. 48.

642-ல் நடந்ததாகக் கருதப்படுகிறது. ஆகவே, அந்நகரம் சுமார் கி. பி. 642—655 வரை பல்லவர் கையில் இருந்த தாகும். வாதாபிப் படையெடுப்பில் தோற்ற இரண்டாம் புலிகேசியின் மகனை முதலாம் விக்கிரமாதித்தனது கர்நூல்பட்டயம்,' இரண்டாம் புலிகேசி பகைவர் மூவரால் தோல்வியுற்றான்............வாதாபியில் இருந்த கோவில் கள் பகைவர் ஆட்சியில் வருவாய் இன்றித் தவித்தன''[15] என்று கூறுகின்றது. இந்த விக்கிரமாதித்தன் மகனை விநயாதித்தனது ஸோரப் - பட்டயம் "சாளுக்கியர் மர பின் அழிவிற்கும் தாழ்விற்கும் பல்லவர்களே பொறுப் பாளிகள்''[16] என்று முறையிட்டுள்ளது. இரண்டாம் கீர்த்திவர்மனுடைய வக்கலேரிப் பட்டயம், "எங்கள் சாளுக்கிய முன்னோர் சிறப்பை அழித்தவர் பல்லவர். அவர்கள் எங்கள் ஜன்மப் பகைவர்''[17] என்று குறித்துள் ளது. சேக்கிழார் கூறியாங்குத் 'தொன்னகரமாகிய வாதாபி துகளாக்கப்பட்டுப் பல்லவர் கைப்பட்டமையாற் றான், மேற்சொன்ன சாளுக்கியப் பட்டயங்களில் அவர்தம் புலம்பலோசை கேட்கப்படுகின்றது என்பதை இப் பொழுது நன்குணரலாம்.

## 5. கணபதீச்சரம்

"இக்கோவில் உத்தராபதீசர் கோவிலுக்குள் சிறிய கோவிலாக இருக்கிறது இதன் சுவர்களிற்றும் சோழர் கல்வெட்டுகள் காண்கின்றன. இதனைத் தன் அகத்தே கொண்ட உத்தராபதீசர் கோவிற் சுவர்களில் விசயநகர அரசர் கல்வெட்டுகள் காண்கின்றன. முதல் இராசராசன் காலமுதல் இக் கணபதீச்சரம் சிறப்புற்றதாகத் தெரிகி றது. சித்திரை விழாவில் அடியாரை உண்பிக்கச் சிறுத்

[15] Heras,s 'Studies in Pallava History' p. 34.

[16] Ind. Ant. Vol. 19, pp. 151—152.

[17] Ind. Ant. Vol. 8, p. 23.



சிற்பம் : சண்டேசப்பதம்
கங்கைகொண்ட சோழபுரம்.

தொண்ட நம்பி மடம் கட்டப்பட்டது. சீராளதேவர் என்ற சிவபிரானுக்கும் வீரபத்திரர்க்கும் தொண்டு செய்து வந்த சிறுத்தொண்ட நம்பிக்கு விழாச் செய்யப் பட்டு வந்தது. உத்தராபதியார் சிறுத்தொண்டர் மாளிகை யில் உபசரிக்கப்பட்டார். அதனால், இன்றைய உத்தராப தீசர் கோவில் சிறுத்தொண்டரது மாளிகை இருந்த இடம் எனவும், கணபதீச்சரப் பெருமான் சீராளதேவர் என்ற பெயர் கொண்டவர் எனவும், அக்கடவுள் பெய ரையே சிறுதொண்டர் தம் மகனுக்கு இட்டார் எனவும் கூறலாம். சிறுதொண்டர் வரலாற்றில் உள்ள தெய்வீகச் செயல் ஒழிந்த ஏனைய அனைத்தும் இங்ஙனம் கல்வெட்டுச் சான்று கொண்டனவாகக் காண்கின்றன என்பது இங்கு அறியத் தக்கது.'' [18]

திருவீழிமிழலையிற் பஞ்சம்

நம் கணக்குப்படி சம்பந்தர் சிறுதொண்டரைச் செங் காட்டங்குடியிற் சந்தித்த காலம் ஏறத்தாழக் கி. பி. 650 ஆகலாம். அவரும் அப்பரும் அதன் பிறகு திருவாரூர், திருப்புகலூர், திருக்கடவூர் தரிசித்துத் திருவீழிமிழலை அடைந்தனர். அவர்கள் அங்குத் தனித்தனி மடத்தில் தங்கி இருந்தனர். அப்பொழுது நாட்டிற் கொடிய பஞ்சம் தோன்றியது. 'சேமம் நல்குமே' என்று சம்பந்தர் வேண்டு தலால், பஞ்சத்தின் கொடுமை நன்கு விளங்கும். கோவி லில் நாளும் அப்பர் ஒரு (பொற்)காசும் சம்பந்தர் ஒரு (பொற்)காசும் பெற்று அடியாரை உண்பித்தனர். அப் பர்க்குக் கிடைத்துவந்த காசு நாளும் வட்டமின்றியே செல்லுபடி ஆயிற்று. சம்பந்தர்க்குக் கிடைத்த காசு வட்டம் கழித்தே செல்லுபடி ஆயிற்று. பிறகு சம்பந்தர் இறைவனைப்பாடி நற்காசு பெற, அது வாசியின்றிச்செல்லு

---

[18] A. R. E. 1913. II. pp. 87—88.

படி ஆயிற்று[19] இந்நிகழ்ச்சி ஏறத் தாழக் கி.பி. 650 அல்லது 651-ல் நடந்திருக்கலாம்.

இப்பஞ்சம், சேக்கிழார் கூறினாற்போல மழையில்லாமையாலும் சிறப்பாகப் பல்லவர் - சாளுக்கியர் போராட்டங்களாலும் பல்லவப் பெருநாட்டில் உண்டானது. போர்க் காலத்தில் பொன், வெள்ளி நாணயங்கள் தூய்மை குறைந்து அச்சடிக்கப்படல் அனைவரும் அறிந்ததே. அதே நிலைமை பல்லவர் ஆட்சியிலும் உண்டானது. பல்லவர் கல் வெட்டுகளிற் 'பழங்காசு', 'காணம்' 'துளைப் பொன்', 'விடேல் விடுகு பொன்' என்ற பெயர்கள் காண்கின்றன. பழங்காசு மாற்றுக் குறையாதது[20] இதனாற் போலும் பழங்காசினொடு உறைப்பத் துளைப்பொன்' என்ற தொடர் கல்வெட்டுகளில் எழுந்தது! இதன் பொருள் பழங் காசைப் போலவே மாற்றுக் குறையாதது' என்பது போலும்! 'துளைப்பொன்'[21] என்பது அரசாங்கத் தாற் சோதனை பெற்ற தூய பொன் என்பதற்கு அடையாளமாகத் துளையிடப்பட்ட காசாகும். அதன் மீது 'விடேல் விடுகு' முத்திரை இடப்பெற்றிருக்கும்[22]

இவ்விவரங்களை நோக்க, அப்பர்க்குக் கிடைத்த காசு 'பழங்காசு' என்பதும், சம்பந்தர்க்கு முதலிற் கிடைத்தது, அவர் தம் பாவிற் கூறுமாப் போலக் 'கறைகொள் காசு' (வட்டம் தரத்தக்க காசு) என்பதும் விளங்கும். இங்ங

---

19 Sambandar Puranam, S. 563—570.

20 278 of 1902.

21 'துலைப்பொன்' (முத்திரை இடப்பட்ட பொன்) என்பது வேறு.

22 297 of 1902

னம் அப்பரும் சம்பந்தரும் காசுபெற்றது கோவில்பண்டாரத்திலிருந்து என்பதை உய்த்துணர்க.[23]

## இக்காலச் சோழ அரசன்

(1) அப்பர் பழையாறை சென்றபோது லிங்கத்தைச் சமணர் மறைத்தனர். அப்பர் அங்கு உண்ணாவிரதம் இருந்தார். சோழ அரசர் சமணரை அகற்றி லிங்கத்தைத் தரிசிக்குமாறு அப்பர்க்கு வசதிசெய்து தந்தான் என்பது சேக்கிழார் கூற்று.[23a]

(2) அப்பர் - சம்பந்தர் காலத்து அடியாரான குங்கிலியக் கலயர், திருப்பனந்தாள் கோவிலில் சாய்ந்திருந்த லிங்கத்தை நிமிர்த்த முடியாது சோழ அரசன் வருந்துவதைக் கேள்வியுற்று, அங்குச்சென்று, தம் பக்தி வலிமையால் அதை நிமிர்த்து அரசன் பாராட்டுக்கு உரியராயினர் என்பது சேக்கிழார் கூற்று.[23b] இச்சோழன் மங்கையர்க்கரசியர்க்குத் தந்தை அல்லது உடன்பிறந்தானாக இருக்கலாம்.

## பழையாறை

பழையாறை கும்பகோணத்திற்கு அருகில் உள்ள ஊர். அது பல்லவர்காலச் சோழர்க்கு அமைந்த தலைநகரங்களில் ஒன்றுபோலும்! அஃது அக்காலத்தே பெரிய நகரமாக இருந்தது. பட்டீச்சுரம், திருச்சத்திமுற்றம், திருமேற்றளி, வடதளி, தென்தளி என்பன அங்கு இருந்த

---

23 கி. பி. 1152-ல் சோழநாட்டில் பஞ்சம் உண்டாயது. ஆலங்குடி மக்கள் கோவில் பண்டாரதிலிருந்து 1011 கழஞ்சு நிறையுள்ள பொன் நகைகளும், 464 பலம் நிறையுள்ள வெள்ளிப் பாத்திரங்களும் கடனாகப் பெற்று உயிர் வாழ்ந்தனர் எனவரும் ஆலங்குடிக் கல்வெட்டுச் செய்தி இங்கு நினைக்கத் தக்கது.

—5 of 1899.

23a S. 294—298.

23b Kungiliakkalaiyar Puranam, S. 22—33.

கோவில்கள். இப்பொழுது பட்டீச்சரமும் திருமேற்றளியும் தனி ஊர்களாக மாறிவிட்டன.[23c] பிற்காலச் சோழரும் பழையாறையைச் சிறப்புச் செய்தனர். அங்கு அழகிய அரண்மனை இருந்தது. சேக்கிழார் காலத்திலும் அரச மரபினர் அங்கு வாழ்ந்துவந்தனர்.[23d]

## நெல்வேலிப் போர்

(1) சம்பந்தர் பாண்டியனையும் பாண்டிய நாட்டையும் சைவ நெறியில் திருப்பிய பிறகு பல ஆண்டுகள் கழிந்தன. ஒரு பொழுது தாமாக அமர்வேண்டித் தூர நாட்டு அரசர் பாண்டியநாட்டின்மீது படையெடுத்தார்; நெல்வேலியில் போர் நடந்தது. (2) பகைவர் படை கடல் போன்றது. போரில் இருதிறத்தார் வீரரும் இரண்டு கடல்கள் போலப் போரிட்டனர்; கரிகள் கரிகளோடு போரிட்டன; பரிகள் பரிகளோடு போரிட்டன. வெற்றிமகள் இருவர் பக்கமாக ஊசலாடிக் கொண்டிருந்தாள். (3) இறுதியில் வடபுலத்து முதல் மன்னர் படை சரிந்தது; பாண்டியன் வெற்றி பெற்றான்.—இது சேக்கிழார் கூறும் விவரம்.[24]

சேக்கிழார் 'வடபுலம்' என்பது, பல்லவர் நாட்டுக்கும் வடக்கே யுள்ள சாளுக்கிய நாட்டைக் குறிக்கும் என்பது முன் சிறுதொண்டர் புராணத்துட் கூறிய 'வடபுலத்து வாதாவி' என்ற தொடரால் அறிக. அறியவே, நெடுமாறனோடு நெல்வேலியிற் போரிட்ட பகைவன் சாளுக்கிய அரசன் என்பது பெறப்படும். நெடுமாறர் காலம் கி. பி. 640—680. கி பி. 642-ல் வாதாவிப் படையெடுப்பு நடந்தது. அதுமுதல் கி. பி. 654 வரை வாதாவி பல்வர் கையில்

23c Tamil Polil, Vol. 12, pp. 300—302.

23d Tiruvalangadu plates, 463 of 1908, 350 of 1907, 271 of 1927.

24 Nedumarar Puranam, S. 1—7.

இருந்தது. அதனால், சாளுக்கியர் வலியற்றவராகக் கிடந்தனர். வாதாபிப் படையெடுப்பில் தோற்ற இரண்டாம் புலிகேசியின் மகனான முதலாம் விக்கிரமாதித்தன் காலம் கி. பி. 654—680. நெடுமாறன் காலமும் இத்துடன் ஒத்துவரலால், நெல்வேலிப் போரில் ஈடுபட்ட வடபுலத்து முதல் மன்னன் இவனாகவே இருத்தல் வேண்டும்.

இம்முதலாம் விக்கிரமாதித்தன் பரமேசுவர வர்மனை (கி. பி. 670—685)ப் போரில் தோற்கடித்துக் காஞ்சியைக் கைப்பற்றிப் பல்லவ நாட்டின் தென் எல்லையான உறையூரில் தங்கினான்; அங்ஙனம் தங்கிய ஆண்டு கி. பி. 674 என்று அவன் உறையூரிலிருந்து விட்ட கந்வல் பட்டயம் குறிக்கிறது.[25] அது, சாளுக்கியன் பரமேசுவர வர்மனை வென்றதை மட்டுமே குறிக்கிறது; பாண்டியன் எதிர்த்ததைக் குறிக்கவே இல்லை. ஆயின், அவனைப் பெருவளநல்லூரில் பரமேசுவர வர்மன் எதிர்த்துக் கடும்போர் புரிந்து வென்றான் என்பதைக் கூரம் பட்டயம் விளக்கமாகத் தெரிவிக்கிறது சாளுக்கியனுடைய கேந்தூர்ப் பட்டயங்கள் அவன் சேர, சோழ, பாண்டியருடன் போரிட்டதைக் குறிக்கின்றன.[26] இவற்றை நோக்க, முதலில் பரமேசுவர வர்மனைத் தோற்கடித்த விக்கிரமாதித்தன் உறையூரில் தங்கினான் என்பதனால், அவன் சோழநாட்டையும் வென்றவனாதல் வேண்டும். அப்பொழுதாண்ட சோழன் மங்கையர்க்கரசியின் தந்தை அல்லது உடன் பிறந்தான் ஆகலாம். உறையூர் வரை வெற்றிகொண்ட சாளுக்கியன், எஞ்சியிருந்த பாண்டியனையும் தாக்க முனைந்திருத்தல் இயல்பே. சாளுக்கியன் - பாண்டியன் போர் நெல்வேலியில்* நடந்தது. சாளுக்கியன் தோல்வி

---

[25] Ep. Ind. Vol. 10, No. 22, p. 101.
[26] Ep. Ind. Vol. 9, p. 205.
* 'சோழமண்டலத்துத-தென்கரைப் பனையூர் நாட்டு - நெல்வேலி நாட்டு 'நெல்வேலி' இதுவாக இருததல் கூடும்.—276 of 1916.

அடைந்தான். இப்போராட்டத்தின் இறுதிக் கட்டத்தில் பரமேசுவரவர்மன் பெரும்படையுடன் வந்து பாண்டியர் பக்கம் சேர்ந்திருக்கலாம். முதற்போர் நெல்வேலியில் பாண்டியற்குச் சாதகமாயிற்று. இரண்டாம் போர் பெருவளநல்லூரிற் பல்லவனுக்குச் சாதகமாயிற்று.

இப்போர்களில் நெடுமாறன் மகனான கோச்சடையனும் பரமேசுவரன் மகனான இராசசிங்கனும் பங்கு கொண்டனர் போலும்! 'ரணரஸிகன்' எனப்பட்ட விக்கிரமாதித்தனை வென்றமையால் கோச்சடையன் 'ரணதீரன்' எனப்பட்டான்; அங்ஙனமே இராசசிங்கன் 'ரணஜயன்' எனப்பட்டான். இங்ஙனம் ஒரே காலத்திற் போரில் ஈடுபட்ட பிற்காலச் சத்யாஸ்ரயனும் அவன் சிற்றரசனான குந்தமரசனும் தம்மைத் 'த்ரௌளமாரி' (தமிழர்க்குக் கொள்ளைநோய் போன்றவர்) எனக் கூறிக்கொண்டமை இங்கு நினைக்கத் தக்கது.

பல்லவனும் பாண்டியனும் ஒன்றுபட்டுச் சாளுக்கியனை வெற்றி கண்டதன் பயனாக, அவர்கட்குள் ஒற்றுமை ஏற்பட்டது. அதனால் இராசசிம்மன் தன் மகளைக் கோக்சடையற்கு மணம் செய்திருக்கலாம். என்னை? கோச்சடையன் மகன் இராசசிம்மன் எனப்படலால் என்க. மேலும் இராசசிம்ம பல்லவனை அவன் காலத்துப் பாண்டியன் பேரரசனாக மதித்தான் என்பதற்கும் சான்றுண்டு.[27]

முதலில் பரமேசுவரனைத் தோற்கடித்துப் பெருவெற்றியுடன் வந்த சாளுக்கியனை நெடுமாறன் எதிர்த்து நெல்வேலியில் தோற்கடித்தனாற்றான், பின்னர்ப் பரமேசுவரன் அவனை எளிதிற் பெருவளநல்லூரில் எதிர்த்து வெற்றிபெற்றான் என்னலாம். இப்போரில் பாண்டியன்

[27] Dr. C. Minakshi's 'Ad. & S. Life under the Pallavas' p. 90; Sentamil, Vol. 17, p. 28; Dubrail's 'Pallavas' p. 68.

தோற்றிருப்பின், முழுத் தமிழ்நாடும் சாளுக்கியர் கைப் பட்டிருக்கும். சிறந்த சைவ அரசனாகிய நெடுமாறன் வட புலத்துப் பேரரசனை வென்று தன்னாட்டு உரிமையைக் காத்ததோடு சைவத்தைத் தமிழ்நாட்டில் நிலைக்கச் செய்தான் என்ற செய்தி சுந்தரர் காலம் வரை நன்றாய்ப் பரவி இருந்ததாற்போலும் அந்நாயனார் தமது தொகையில்,

> "நிறைகொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
> நின்றசீர் நெடுமாறன்"

என்று பாண்டியனை ஏத்தெடுப்பாராயினர்!

இங்ஙனம் சுந்தரர் குறித்ததன் கருத்தை நம்பி அறியாவிடினும், அரசியல் அறிவு நிரம்பப்பெற்ற சேக்கிழார் அரும்பாடு பட்டு ஆராய்ந்து, இந் நெல்வேலிப் போரை விளக்கமாக 5 பாக்களில் விளக்கியுள்ளமை வியந்து பாராட்டற்பாலது. சேக்கிழார் குறிக்கும் நெல் வேலிப் போர் வருணனையும் கூரம் பட்டயம் குறிக்கும் பெருவளநல்லூர்ப் போர் வருணனையும் பல இடங்களில் ஒன்றுபட்டிருத்தல் படித்து இன்புறத்தக்கது. இந் நெல்வேலிப் போர் விக்கிரமாதித்தன் கத்வல்பட்டயம் வெளியிட்டபிறகு ஏறத்தாழக் கி. பி. 674 அல்லது 675ல் நடந்தது என்னலாம். இக்காலம் நாம் கொண்ட அப் பர் - சம்பந்தர் காலத்திற்குப் (கி. பி. 580 – 660) பல ஆண் டுகள் (14 அல்லது 15 ஆண்டுகள்) பிற்பட்டதாகும். இக் காலம், 'நெடுமாறன் சைவனாகிச் சைவம் தழைக்க நாட்டை ஆண்டுவருங்கால்' என்ற சேக்கிழார் கூற்றுக்கு ஒத்துவரல் காண்க.

## பூசலார்

(1) இவர் திருநின்ற ஊரினர்; மறையவர்; (2) சிவன் கோவில் கட்ட விரும்பிப் பணந்தேட முயன்றார்; முயற்சி பயன்படவில்லை; (3) மனத்தாற் கோவில் அமைத்துக் குறித்த ஒரு நாளில் கும்பாபிடேகம் செய்ய நினைத்தார்;

(4) அதே நாளைத் தான் கட்டிய கற்றளிக்குக் கும்பாபி டேக நாளாகக் காஞ்சிக் காடவர்கோமான் விதித்திருந் தான்; அதனால் சிவபிரான் அவன் கனவிற் சென்று பூச லார் குறித்த நாள் தவிர்த்து வேறொரு நாளைக் குறிக்கு மாறு கூறினார். (5) அரசன் மறுநாள் நின்றவூர் சென்று பூசலாரைக் கண்டு அவர் கட்டியது மனக்கோவில் என் பதை அறிந்து வியந்து அவரைப் பணிந்து மீண்டான். (6) கச்சிக்கற்றளி எடுத்த காடவர்கோன் அதன் பக்கத்து இடங்களையும் அக்கோவிலுக்காக்கிப் பெருஞ்செல்வமும் வைத்தான்.—இது சேக்கிழார் கூற்று.[28]

(1) கச்சியில் முதன்முதல் கற்றளி கட்டிய காடவன் இரணஜயனான இராசசிங்கன். எனவே அவனே பூசலார் காலத்தவனாதல் வேண்டும் என்பது அறிஞர் கருத்து. சிவபிரான் அவன் கனவிற் சென்று கூறியதாகச் சேக்கி ழார் குறித்ததே, அவன் 'அசரீரி கேட்டான்' என்ற கல் வெட்டுக் குறிப்பாகலாம். 'அவன் இக்கலியுகத்தில் அச ரீரி கேட்டது வியப்பே' என்று கயிலாசநாதர்கோவிற் கல்வெட்டுப் பாராட்டுகிறது.[29] அவன் சிறந்த சிவபக் தன் - ஆகமப் பிரியன் என்பன முன்பே கூறப்பட்டவை.

(2) பூசலார் கோவில் கட்ட விரும்பிப் பொருள்தேட முயன்றும் கிடைக்கவில்லை என்பது சேக்கிழார் கூற்று. இதற்கு இராசசிம்மன் காலத்தில் உண்டான கொடிய பஞ்சமே காரணமாகும். அப் பஞ்சத்தின் கொடுமையை அவனது அவைப் புலவராய தண்டி தாம் வரைந்துள்ள அவந்தி சுந்தரீ கதையில் விளக்கியுள்ளார் .—' தமிழ்நாடு வற்கடத்தால் வாடியது; குடும்பப் பெண்கள் கொடுமை யாக நடத்தப்பட்டார்கள்; வேள்விகள் குன்றின; களஞ் சியங்கள் காலியாயின; வீடுகட்குரியவர் வெளியே விரட்

---

28 Pusalar Puranam, S. 1–16.

29 S. I. I. 1. 24; R. Gopalan's Pallavas of Kanchi, p. 109.

டப்பட்டனர்; நாநயம் கெட்டது! தோட்டங்கள், யாக மேடைகள் முதலியன அழிக்கப்பட்டன; பணக்காரர் கொல்லப்பட்டனர்; சாலைகள் பழுதுபட்டன, உற்றார் உறவினர் இன்றியும் நண்பரால் துறக்கப்பட்டும் தண்டி நாடு முழுவதும் அலைய நேரிட்டது.''

இச் கொடிய - வருந்தத் தக்க பஞ்சம் முன்சொன்ன பல்லவ - சாளுக்கிய போர்களின் எதிரொலியாகும் என்ன லர் [30]

இப் பஞ்ச காலம் சுமார் மூன்றாண்டுகள் இருந்ததென் றும் கி. பி. 689-ல் காஞ்சியை அடைந்த வஜ்ரபோதி என்ற பௌத்த துறவியாரை நரசிம்ம போதவர்மன் (II) வேண்ட, அவர் பிரார்த்தனைமூலம் மழை பெய்யச் செய் தார் என்று சீன நூல் ஒன்று கூறுகிறது. இதனால், பஞ் சத்தின் காலம் கி. பி. 686 - 689 என்பது புலனும் [31]

## (3) திருநின்றவூர்

இது சென்னையிலிருந்து ஆர்க்கோணம் செல்லும் இருப்புப் பாதையில் 'திண்ணனூர்' என்ற பெயருடன் இருப்பது. 'திருநின்றவூர்' என்ற இப்பெயர் 'திண்ணனூர்' என மருவியது. இது மிகப் பழைய பதியாகும். இங்குள்ள பெருமாள் கோவில் திருமங்கை மன்னனால் பாடப்பெற் றது[32] எனின், இப்பதி கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் நன் னிலையில் இருந்ததென்பது புலனாகும். இங்குள்ள சிவன் கோவில்* முன்னுள்ள கற்கம்பத்தில் தந்திவர்மன் (கி. பி. 790 - 840) 9-ஆம் ஆட்சி ஆண்டுக் (கி. பி. 798) கல்வெட் டுள்ளது. அக்காலத்திலேயே அவ்வூர் ஒரு சபையால் ஆளப்பட்டு வந்தது. [33] அங்குள்ள சிவன் கோவில்

---

30 Dr. C. Minakshi's 'Ad . . . . Pallavas', p. 114.
31 Ibid pp 115—117.
* I have visited this temple on 10—1—1943.
32 Periya Tirumoli, 2·5·2, 7·10.5.
33 168 of 1938.

இராசசிங்கன் காலத்தது என்னும்படி அவனுடைய சிங்கத் தூண்களைப் பெற்றுள்ளது. கோவில் மூலத்தானத்தில்



காஞ்சி - கயிலாசநாதர் கோயில்

லிங்கத்திற்கு எதிரே பூசலார் சிலை வைக்கப்பட்டு நாளும் பூசை நடந்து வருகிறது. கோவில் மண்டபத்தில் இராச சிங்கன் உருவச்சிலை உள்ளது. கோவில் பெயர் 'மனக்

கோவில் கொண்டார் கோவில் (ஹிருதயாலேசுவரர் கோவில்) என்பது. இந் நின்றவூர் மிகவும் பழமை வாய்ந்ததென்பது அவ்வூரின் உள்ளும் வெளியும் சிதறிக் கிடக்கும் சிவலிங்கங்களைக் கொண்டும் கூறலாம்.[34]

(4) கச்சிக் கற்றளி* (கயிலாசநாதர் கோயில்)

இதுபற்றிச் சேக்கிழார்,

"காடவர் கோமான் கச்சிக் கற்றளி எடுத்து முற்ற
மாடெலாம் சிவனுக் காகப் பெருஞ்செல்வம் வகுத்தல்
செய்வான்"[35] என்றார்.

இஃது உண்மை என்பதை உணர்த்தும் கல்வெட்டுப் பட்டயச் சான்றுகளாவன :—

1. "இக்கோவில் இராசசிம்மனது புகழையும் சிவனது முறுவலையும் ஒத்துள்ளது; இது கயிலாயத்தை அழகில் வென்றது' —கயிலாசநாதர் கோவில் கல்வெட்டு.[36]

2. "விக்கிரமாதித்த சத்யாஸ்ரயன் (2-ஆம் விக்கிரமாதித்தன்) காஞ்சியைக் கைப்பற்றிய பிறகு, இராஜசிம்மேசுவரத்தின் செல்வத்தைப் பார்வையிட்டு மகிழ்ந்தான்; அதனை அக் கடவுளுக்கே அளித்துவிட்டான்."—கயிலாசநாதர் கோவிலில் உள்ள இரண்டாம் விக்கிரமாதித்தனது கன்னடக் கல்வெட்டு.[37]

(3) "காஞ்சியைக் கைப்பற்றிய இரண்டாம் விக்கிரமாதித்தன் இராஜசிம்மேசுவரத்துப் பெருஞ்செல்வத்தைக் கண்டு வியந்து, அதனை அக்கோவிலுக்கே தந்து மகிழ்ந்தான்"—என்று இரண்டாம் விக்கிரமாதித்தனது கேந்தூர்ப் பட்டயம் செப்புகிறது.[38]

---

[34] I have visited this place on 10—10—'44.
* Ibid on 10—1—43.
[35] S. 9.
[36] S. I. I. 1. 24.
[37] Ep. Ind. III. p. 360.
[38] Ep. Ind. IX, p. 205.

4. "காஞ்சியைக் கைப்பற்றிய இரண்டாம் விக்கிர மாதித்தன் இராஜ சிம்மேசுவரத்தில் உள்ள பெருஞ் செல்வத்தைக் கைக் கொள்ளாது, அங்குள்ள விக்கிரகங்களைப் பொன் மயமாக்கி மீண்டான."—இரண்டாம் கீர்த்திவர்மனது வக்கலேரிப் பட்டயம்.[39]

இங்ஙனம் பல்லவர்க்குப் பகையரசரான சாளுக்கியர் விடுத்த கல்வெட்டுகளாலும் பட்டயங்களாலும் கயிலாச நாதர் கோவிலுக்கு இராசசிங்கன் செய்த சிறப்பை அறியலாம். இத்தகைய சிறப்புடைய கோயில் இராசராசன் காலத்திலும் நன்னிலையில் இருந்தது.[40]

'முதல் இராசேந்திரன்காலத்தில் கயிலாசநாதர்கோவிலில் திரு அணுக்கன் வாயிலுக்குக் கிழக்கே கற்றுக் கல்லூரி இருந்தது. அக்கோயில் கணக்குகளை மேற்பார்வையிடச் சென்ற அரசியல் அதிகாரி அக் கல்லூரியில் தங்கி இருந்தான்' என்று கயிலாசநாதர் கோவில் கல்வெட்டுக் கூறிக்கிறது. அக்கோவில் சோழர் காலத்தில் "பெரிய கற்றளி" எனப் பெயர் பெற்றது.[41] ஆயின், 'முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் எக் காரணம் கொண்டோ கயிலாச நாதர் கோவில் மூடப்பட்டது; அதற்குரிய நிலங்கள் விற்கப்பட்டன; கோவில்திருவிருப்பு (வெளிப் பிரகாரம்), திருமடைவிளாகம் (environs of the temple) முதலியன அனைய பதங்கா வுடையார் கோவிலுக்குத் தரப்பட்டன. இங்ஙனம் சிறுமையுற்று மூடப்பட்ட கோவில் சக ஆண்டு 1286 ஆடி முதல் திறக்கப்பட்டு விழா நடப்பதாக. இதற்கு முருங்கையூர் சர்வமானியமாகட்டும்'[42] என்ற கம்பரை வுடையார் கல்வெட்டுக் காணத் தக்கது. இக் கல்

---

[39] Ep. Ind. V. p. 200.
[40] S. I. I. 1. Nos. 146—150.
[41] 240 of 1931.
[42] S. I. I. 1. 86.

வெட்டால், முதற் குலோத்துங்கன் காலத்தில் (கி. பி. 1070 - 1120) மூடப்பட்ட கோயில் கம்பணவுடையார் காலத்திற்றான் (கி. பி. 1364) திறக்கப்பட்டதென்பது அறியக் கிடக்கிறது. எனவே, நம் சேக்கிழார் காலத்தில் (கி. பி. 1133—1150) இப் புகழ்பெற்ற கோவில் வெளிப் பிரகாரம், திருமடைவிளாகம் முதலிய இன்றிப் பொலிவிழந்து பூட்டப்பட்டுக் கிடந்ததென்பது தெளிவாகத் தெரிகிறது. ஆயின் கோவிலைச் சுற்றி 4 வீதிகள் இருந்தன; அவற்றில் சுந்தரப்பெருமாள் மடம் முதலிய சில மடங்கள் இருந்தன.[43]

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவராய சேக்கிழார் இக் கயிலாசநாதர் கோவிலை நேரே கண்டிருத்தல் கூடியதே. அவர் காலம் கல்வெட்டுக் காலமாதலாலும், முதல் அமைச்சரான அவர்க்குக் கல்வெட்டோ - பட்டயமோ படித்தல் எளிதாதலாலும், கயிலாசநாதர் கோவிற் கல்வெட்டுகளைப் படித்து வியந்திருக்கலாம். அங்கு இருந்த சான்றோர் வாயிலாக அதன் பழைய வரலாறும் கேட்டறிந்திருக்கலாம்.

## மெய்ப்பொருள் நாயனார் (மிலாடுடையார்)

நாம் அறிந்தவரை இவரது வரலாற்றைச் சேக்கிழார் பாடத் துணை புரிந்தவை - (1) பொய்த்தவ வேடத்தவன் பகைமையாற் குத்த, குத்துண்டவர் 'தத்தா! இவர் நம்மவர் (சிவனடியார்)' எனக் காவலனிடம் கூறி இறந்தவர் என்ற நம்பி கூற்றும், (2) தஞ்சைப் பெரிய கோவிலில் இருந்த 'தத்தா! நமரே காண்' என்ற மிலாடுடையார் படிமம் ஒன்றும் ஆகும். சேக்கிழார் புதியனவாகச் சேர்த்தவை- (1) முத்திநாதன் என்ற அரசனுக்கும் நாயனார்க்கும் இருந்த பகைமை - அவன் போரில் தோற்றமை, (2) அத

43 Ibid. Nos. 87 & 88.

ஞல் அவன் சிவவேடமிட்டு எளிதாக அரசர் அறைக்குள் வந்தமை, (3) ஆகமம் உபதேசிப்பதாகக் கூறி அதை எடுப்பான் போல உடைவாளை எடுத்து அவரைக் குத்தினமை என்பன.

திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர் 'சித்தவடவர்', 'மலாடர்', 'மிலாடர்' என்றும் சேதிராயர்,, மலையமான்கள்' என்றும் கல்வெட்டுகளிற் குறிக்கப்பட்டனர். இம்மரபினர்க்கு இயைந்த 'சித்தவடம்' கோவில் அப்பர் தேவாரத்தில் வைப்புத் தலமாகக் குறிக்கப்பட்டுள்ளது.[44] (1) இரண்டாம் நந்திவர்மனது 5-ஆம் ஆட்சி யாண்டில் (சுமார் 730-ல்) வாணகோவரையர் சித்தவடவனூர் மகளார் மாதேவடிகள் மணலூர்ப் பேட்டைச் சிவன் கோவிலுக்கு ஒரு கிற்றூரைத் தேவ தானமாக விட்டவர்.[45] (2) கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் 'இராசகேசரி' என்ற சோழனது மூன்றாம் ஆண்டு திருஆமாத்தூர்க் கல்வெட்டில் இராமன் சித்தவடவன் என்ற மிலாடுடையார் பெயர் காண்கிறது.[46] (3) கண்டராதித்தர் காலத்தவரான (கி. பி. 949 - 957) சித்தவடவன் திருக்கோவலூர்க்கு 12 கல் தொலைவில் உள்ள வீரசோழபுரம் என்ற இடத்தில் பகைவருடன் போரிட்டு, அவர்தம் அஞ்சத் தக்க எருதுகளைக் கைப்பற்றிப் பெருங்கடல் போன்ற பகை வீரரையும் வென்றான். அவன் தன்னை 'ஓரி' மரபினன் என்று குறித்துள்ளான்.[47] (4) கன்னரதேவன் காலத்தில் நரசிம்மவர்மன் என்ற சத்திநாதன் என்ற மிலாடுடையான் ஒருவன் இருந்தான்.[48] (5) 'பரகேசரி' சோழனது காலத்தில் மிலாடுடையார் சித்தவடத்தடிகள் என்பவர் மனைவி சேதிமகாதேவியார் என்பவள் திருச்சோற்றுத்

---

[44] 6·7·12.
[45] 469 of 1938.
[46] 29 of 1922.
[47] 252 of 1937.
[48] A. R. E. 1937, p. 68; 362 of 1902.

துறைக் கோவிலுக்குத் தானம் செய்தனள்.[49] (6) இராசேந்திர சோழன் காலத்தில் உத்தமசோழ மிலாடுடையார் என்ற ஒருவர் வாழ்ந்தார். [50] (7) மிலாடுடையார் ஒருவர் மகளை உத்தம சோழன் மணந்துகொண்டான். [51]

நமது 4-ஆம் பிரிவில் காட்டப்பெற்ற நாயன்மார் காலக் கணக்கின்படி மெய்ப்பொருள் நாயனார் கி. பி. 660 840-க்குள் வாழ்ந்தவராவர். மேற்சொன்ன அரசருள் மேற்சொன்ன காலத்துள் வரத்தக்கவர் வாணகோவரையர் சித்தவடவனார் என்பவர் ஆவர். அவர் மகளார் 'மாதேவடிகள்' என்ற சிறப்புப் பெயர் தாங்கி இருப்பதும், அம் மகளார் ஒரு சிற்றூரையே தேவதானமாக விட்ட பக்தியின் மேம்பாடும் நோக்க, அச்சிவநெறிச் செல்வியார்தம் தந்தையாரே நமது மெய்ப்பொருள் நாயனாராக இருக்கலாம் என்று கருத இடமுண்டு. எனினும், இஃது உறுதியன்று. மேற்கூறிய மிலாடுடையார் மரபினராய ஆடவர் - பெண்டிர் சிவபக்தியும் சிவப்பணியும் மேற்சொன்ன கல்வெட்டுகளால் நன்கறியலாம் முன்சொன்ன வீரசோழபுரத்துப் போரை நோக்க, அதைப் போல நமது நாயனாரும் போரிட்டிருக்கலாம் எனக் கோடல் தவறாகாது.

இம்மிலாடுடையார் முதற் குலோத்துங்கன் கால முதல் 'சேதிராயர்' என்ற பட்டத்துடன் கல்வெட்டுகளிற் குறிக்கப்பட்டுளர். நமது சேக்கிழார் காலத்தில் மலைநாட்டை ஆண்டவர் விக்கிரமசோழச் சேதிராயர், அவன் மகன் விக்கிரமசோழக் கோவலராயர், கிளியூர் மலையமான் குலோத்துங்கசோழச் சேதிராயர் என்பவர்.[52] இவர் அனைவரும் சோழப் பேரரசனை இரண்டாம் குலோத்துங்கர்க்கு அடங்கிய சிற்றரசர் ஆவர்.

---

[49] 193 of 1931.
[50] 20 of 1905.
[51] 325 of 1907.
[52] 284 and 285 of 1902.

கழற்சிங்கர்

இவரைப்பற்றிச் சேக்கிழார் கூறும் வரலாற்றுக் குறிப்புகள் சுந்தரரோ நம்பியோ குறிக்காதவை. அவை இன்ன என்பதும் அவற்றுக்கும் கல்வெட்டு-பட்டயச் செய்திகட்கும் உள்ள ஒருமைப்பாடும் மூன்றும் பிரிவில் தெளிவாகக் கூறப்பட்டு விட்டன. அங்கு விளக்கமாகக் குறியாத ஒன்று மட்டும் இங்குக் குறிப்போம்:

'கழற்சிங்கர் பட்டத்தரசி உரைசிறந்து உயர்ந்தவள்; சாயல் மாமயிலே போல்வாள்; மதுமலர்த் திரு ஒப்பாள்; காதல் மாதேவி'' என்பன சேக்கிழார் தரும் குறிப்புகள்.[53]

(3) இவற்றை விளக்கவந்தது போல் உள்ள பாகூர்ப் பட்டயக் கூற்றுக் காண்க :—

''திருமாலுக்கு அமைந்த இலக்குமிபோல - இராட்டிரகூடர் குடும்பத்திற் பிறந்த சங்கா என்ற மெல்லியலாள் நந்திவர்மர்க்கு மனைவியாக வாய்த்தாள். அவள் பொறுமையில் நிலமகளை ஒத்தவள்; தம் 'தாய்' எனக் குடிகளாற் பாராட்டப் பெற்றவள்; அரசனது நற்பேறே உருவெடுத்தாற் போல விளங்கினவள். அவள் பேரழகி; மதிநுட்பம் வாய்ந்தவள்; பல கலைகளிலும் வல்லவள். அவள் பெற்ற மகனே (நந்திவர்மற்குப் பின் பட்டம் பெற்ற நிருபதுங்க வர்மன்.')[54]

இக்கழற்சிங்கர் பட்டத்தரசி 'உரைசிறந்து உயர்ந்தவள்' என்பதைச் சேக்கிழார் எங்ஙனம் அறிந்தனர் என்பதே வியப்புக்குரியது. இக்குறிப்பு நந்திக் கலம்பகத்திலும் இல்லை. அவர் பாகூர்ப் பட்டயத்தைப் பார்த்திருப்பாரோ?

---

[53] S. 4, 5, 6 & 13.

[54] V. 13—15.

## கோட்புலி நாயனார்

(1) இவர் சுந்தரர் காலத்தவர் (கி. பி. 840-865); நாட்டியத்தான் குடிப் பதியினர்; சோழர் சேனைத்தலைவர் (2) இவர் அரசர் ஏவலால் பகைவர்மீது சென்றார். (3) அவர் போனபிறகு வற்கடம் தோன்றிச் சோணாட்டை வருத்தியது. (4) மன்னன் பகைப் புலத்தில் தம் கடமையைச் செய்து (வெற்றி பெற்றார் எனத் திட்டமாகக் கூறாமை நோக்கத் தக்கது), அரசன்பால் பரிசுபெற்று மீண்டார்; இவையே இவர் புராணத்துள் சேக்கிழார் கூறும் வரலாற்றுக் குறிப்புகள்.[55] இவற்றுக்குத் தென் இந்திய வரலாற்றுச் செய்தி எந்த அளவு இடந்தருகிறது என்பது காண்போம்:

1. கழற்சிங்கன் காலத்து இரட்ட அரசன் (கி. பி. 814-880) அமோக வர்ஷ நிருபதுங்கன் I. மூன்றாம் நந்திவர்மன் அமோக வர்ஷன்மீது படையெடுத்துச் சென்று வென்ற செய்தி மூன்றாம் பிரிவிற் கூறப்பட்டதன்றோ? அங்ஙனம் அவன் வடக்கே வெற்றிபெற்றுத் திரும்புவதற்குள், தமிழரசர் பல்லவ நாட்டின்மீது படையெடுத்துத் தெள்ளாறு வரை சென்றுவிட்டனர். வடக்கே வாகை சூடி மீண்ட நந்திவர்மன் சேர, சோழ, பாண்டியரைத் தெள்ளாற்றுப் போரில் முறியடித்தான்; பிறகு அவர்களைத் துரத்திச் சென்று கடம்பூர், வெறியலூர், வெள்ளாறு, பழையாறு என்ற இடங்களில் தோற்கடித்தான்.[56]

2. இங்ஙனம் பல்லவருக்கும் தமிழரசர்க்கும் நடந்த பல இடத்துப் போர்களில் ஒன்றில் நமது கோட்புலியார் சோழர் படைக்குத் தலைமை தாங்கிப் போயிருக்கலாம். அவரது படை இரண்டோர் இடங்களில் வெற்றிபெற்

---

[55] S. 3—6.

[56] Nandikkalambakam, S. 25, 27, 19, 22, 61, 31 & 28.

திருக்கலாம். எனினும் தமிழரசர் தோல்வியேயுற்றனர். ஆயினும், 'கோட்புலியார் அரசன் ஆணைப்படி தம் கடமை நிறைவேற்றியதால் அரசனால் சிறப்புச் செய்யப் பெற்றார்' என்ற சேக்கிழார் வாக்குப் பொருத்தமாகலாம். தோல்வி ஏற்படினும், போரில் தம் வீரத்தைக் காட்டியோர் சிறப்புப் பெறுதல் இற்றைநாள் வழக்கமுமாகும் அன்றோ?

சுந்தரர் காலத்தில் பாண்டியனாக இருந்தவன் (கி. பி. 830-862) ஸ்ரீ மாறன் ஸ்ரீ வல்லபன். அவன் காலத்திற்றான் சுந்தரர் சேரமானுடன் மதுரை சென்றார். அப்பொழுது பாண்டியனுக்கு மருமகனான சோழ அரசனும் அங்கு இருந்தான் என்று சேக்கிழார் தெளிவாகக் கூறல் கவனிக்கத் தக்கது.[57] இவ்வளவு தெளிவாகச் சேக்கிழார் கூறினர் எனின், அவர் தம் சோழ அரசன் மரபினரைக் கேட்டே இதனைக் குறித்தனர் எனக் கோடல் வேண்டும். இது நம்பத்தக்க செய்தியாயின், சோழ அரசன் தன் படைத் தலைவராய கோட்புலியாரைப் பாண்டியன் செய்த பல போர்களிலும் ஈடுபடுத்தியிருக்கலாம் எனக் கோடல் தவறாகாது. ஸ்ரீ மாறன் ஏறத்தாழக் கி. பி. 854-ல் குடமூக்கில் நடந்த பல்லவர் பாண்டியர் போரில் வெற்றி பெற்றான்.[58] அப்போரில் பாண்டியனுக்கு உதவியாக அவன் மருமகனான சோழன் கோட்புலியாரைச் சோழப் படையுடன் அனுப்பியிருக்கலாம். அப்போரிலோ பிற போரிலோ கோட்புலி வெற்றிபெற்றதைச் சுந்தரர், "கூடாமன்னரைக் கூட்டத்துவென்ற கொடிறன் கோட்புலி"[59] எனப் பாராட்டியிருக்கலாம்.

---

[57] Seraman Puranam, S. 92.

[58] T. V. S. Pandarattar's 'Pandyar Varalaru' p. 32.

[59] Nattiathankudippadikam, S. 10.

## 3. பஞ்சம்

இனிக் கோட்புலியார் போருக்குச் சென்றிருந்த போது பஞ்சம் உண்டானது. சிவனடியார்க்கென வைக்கப் பெற்றிருந்த நெல்லை அவர் உறவினர் உண்ணவேண்டிய தேவை ஏற்பட்ட கொடிய பஞ்சம் உண்டானது; இப்பஞ்சத்தின் கொடுமை திருவாரூரிலும் உணரப் பட்டது என்பது சேக்கிழார் கூற்று.[60] நந்திவர்மன் III ஆட்சியில் நாட்டில் வறுமை உண்டானது. அவன் அதனை நீக்கினான் என்று நந்திக் கலம்பகம் கூறுகிறது.[61] இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் உண்டான சாளுக்கியர் - பல்லவர் போரும், பல்லவர் - தமிழரசர் போரும், நந்திவர்மன் காலத்தில் உண்டான இரட்டர்-பல்லவர் போர்களும், இந் நந்திவர்மன் காலத்தில் உண்டான (1) இரட்டர்-பல்லவர் போர், (2) பல்லவர்-தமிழரசர் (தெள்ளாற்றுப்) போர், (3) பல்லவர் - தமிழரசர் (குடமூக்குப்) போர் முதலியவற்றால் பல்லவநாடு பஞ்சத்தால் தத்தளித்திருத்தல் இயல்பே. பல்லவர் நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் இடைப்பட்ட சோழர் இப் போர்களில் பங்குகொள்ளவேண்டிய வற்புறுத்தலுக் காளாயினர். ஆதலின், சோழநாடும் பஞ்சத்திற்குட்பட்டது. உலகப் போர் நடந்த காலத்தில் நாம் பஞ்சத்தை அநுபவித்தமை போலக் கோட்புலியார் உறவினர் பஞ்சத்தை அனுபவித்ததில் வியப்பில்லை அன்றோ?

தென் இந்திய வரலாற்றோடு ஏறத்தாழ ஒன்றுபடும் இப்பழைய செய்திகளை எல்லாம் வல்லார்வாய்க்கேட்டும் தக்க சான்றுகள் கொண்டும் வெளிப்படுத்திய சேக்கிழார் திறமே இங்கு வியக்கற்பாலது!

---

[60] Eyarkon Puranam, S. 12. [61] S. 11

நரசிங்க முனையரையர்—(1) இம்மரபினரைப் பற்றிய கல்வெட்டுகள் சிலவாகும். அவற்றுட் பழமையானது மூன்றாம் நந்திவர்மன் மகனான நிருபதுங்கனது (கி. பி. 865-900) 16-ஆம் ஆட்சி ஆண்டுக் (கி. பி. 880) கல்வெட்டாகும். அத்திருவதிகைக் கல்வெட்டில், "முனைப்பேரரையர் மகன் முனையர்கோன் இளவரையன்" [62] என்பது காண்கிறது. நிருபதுங்கன் தந்தையரான கழற்சிங்கரும் சுந்தரரும் அவரை வளர்த்த நரசிங்கமுனையரையரும் ஏறத்தாழ ஒரு காலத்தவர் (கி பி. 840-835) என்பது சேக்கிழார் கூற்று. ஆதலின், மேற்சொன்ன கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள 'முனைப்பேரரையர்' நமது நரசிங்க முனையரையர் ஆகலாம் எனக் கோடல் தவறாகாது. 'முனையர்கோன் இளவரையன்' அவர் மகனாகலாம். இங்ஙனம் கொள்ளற்குக் காலம் (16 ஆண்டுகள்) இடந்தருதல் காண்க.

(2) அபராசிதன் ஆட்சியில் 'முனையதரையன் அபராசிதன் குலமாணிக்கப் பெருமானார்' என்று ஒருவன் இருந்தான் என்று திருநாவலூர்க் கல்வெட்டுக் குறிக்கிறது. [63] இவ்வரச மரபினர் தொடர்ந்து சோழராட்சியிலும் இருந்துவந்தனர். (3) வீரராசேந்திரன் ஆட்சியில் 'வீரராசேந்திர முனையதரையன்' [64] என்பவன் இருந்தான். (4) விக்கிரமசோழன் (கி. பி. 1118-1135) இடம் அமைச்சனாகவும் தானைத் தலைவனாகவும் ஒரு முனையதரையன் இருந்தான். [65]

எனவே, சேக்கிழார் நரசிங்க முனையரையரைப் பற்றித் தமது தலயாத்திரையின்போது திருநாவலூரிற் கேட்டதையன்றி, இம்முனையரையனையோ இவன்

[62] S. I. I. VIII. 308.

[63] S. I. I. VII. 999.

[64] S. I. I. IV. 529.

[65] V. Ula lines 139—142.

மகளையோ கேட்டுப் பல செய்திகளைப் பொதுவாகவும் நரசிங்கர் சுந்தரரைத் தம் மகனாக ஏற்று வளர்த்தனரா என்ற நுட்பமான செய்தியைச் சிறப்பாகவும் கேட்டறிந்தனர் எனக்கோடல் பொருத்தமே ஆகும்.

திருவாரூர்க் கல்வெட்டு—இது சேக்கிழார் காலத்தது. அதனில், "சுந்தரர் தாயாரான இசைஞானியார் திருவாரூரிற் பிறந்தவர்; அவர் திருவாரூர் - ஞானசிவாசாரியர் மகளார் இசைஞானியார், சடையனார், சுந்தரர் இம்மூவர் படிமங்களையும் இரண்டாம் குலோத்துங்கன் ஆரூர்க் கோவிலில் அமைத்தான்" என்பது காணப்படுகிறது. இக் கல்வெட்டுச் செய்தியால், சேக்கிழார் காலத்தில் சுந்தரர் வரலாறு அறிந்த சிவாசாரிய மரபினர் அல்லது இசைஞானியார் மரபினர் திருவாரூரில் இருந்தனர் எனக் கொள்ளலாம். கொள்ளின், சேக்கிழார், அவர்கள் வாயிலாகச் (1) சுந்தரர் முனையரையரால் வளர்க்கப்பட்டமை, (2) சுந்தரர்-பரவையர் திருமணம், (3) திருத்தொண்டத் தொகை பாடிய சந்தர்ப்பம், (4) பரவையார் ஊடல்தீர்க்க இறைவன் முயன்றமை போன்ற-வேறு நூல்களிலிருந்து அறியப்படாத பல குறிப்புகளைக் கேட்டறிந்தனர் என்பதை நம்பலாம்.

(1) சிற்றரச மரபினரான நரசிங்க முனையரையர் ஆதிசைவராகிய சுந்தரரை வளர்த்தனர் என்பதை நமக்கு முதன்முதல் அறிவிப்பவர் சேக்கிழார் தாம்.[66] (2) அவர் அத்துடன் நில்லாது, சுந்தரர் திருமணத்திற்கு ஓலை போக்கினபோதும், "கோற்றவர் திருவுக் கேற்பக் குறித்துநாள் ஓலை விட்டார்"[67] என்று கூறினார்; (3) பரவையாரை மணந்த பிறகு சுந்தரர் அரசகுமாரனைப்போல ஊர்வலச் சிறப்புடன் கோவிலை அடைந்தார்[68] என்று கூறியுள்

66 S. 5.
67 S. 9.
68 S. 186—187.

ளார். பல இடங்களில் 'நாவலூர் மன்னன்' என்று புகன்றுள்ளார். இங்ஙனம் பல இடங்களிலும் சுந்தரர் அரசர் செல்வாக்குப் பெற்றவர் என்று சேக்கிழார் தெளிவாகக் கூறற்கு அவர் முனையரையர் மரபினரிடமும் சுந்தரர் மரபினரிடமும் கேட்டறிந்த செய்திகளே தக்க சான்றாக இருத்தல் வேண்டும்.

## நரசிங்கரும் திரு ஆதிரை விழாவும்

நரசிங்க முனையரையர் கழற்சிங்கனை மூன்றாம் நந்திவர்மன் காலத்தவர் அல்லவா? அவர் திருவாதிரை விழாவில் அடியாரை உபசரித்து ஒவ்வொருவர்க்கும் 100 பொன்னுக்குக் குறையாமல் கொடுத்து உண்பித்தவர் என்பது சேக்கிழார் வாக்கு. [69] இங்ஙனம் அவர் காலத்தில் திருவாதிரை விழாச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது; அடியார்க்கு உபசாரம் செய்யப்பட்டது என்பதைக் கல்வெட்டால் அறியலாம். "வழுவூரான் என்பவன், குன்றாண்டார் கோவிலில் (புதுக்கோட்டைச்சீமை) நடைபெற்ற திருவாதிரை விழாவில் 100 பேர்க்கு உணவளிக்க அரிசி தானம் செய்தான்" [70] என்று நந்திவர்மனது 3-ஆம் ஆட்சி ஆண்டுக் (சுமார் கி. பி. 842) கல்வெட்டுக் கூறுகிறது.

## மநுச்சோழன்

சேக்கிழார் நகரச் சிறப்பைக் கூறுகையில் திருவாரூர் நகரைத் தலைநகராகக்கொண்டு சோழ நாட்டை ஆண்ட மநுச்சோழன் செங்கோன்மையை அவன் வரலாற்றால் விளக்கியுள்ளார். இச்சோழன், தன் ஒரே மகன் ஊர்ந்த தேர்க்காலில் அகப்பட்டு இறந்த

---

69 S. 4.
70 347 of 1914.

கன்றுக்காக அம்மகனை அத்தேர்க்காலில் இட்டுக் கொன்றான் என்பது இவனது வரலாற்றுச் சுருக்கம். இதனை முதல் முதல் நமக்கு அறிவிக்கும் நூல் சிலப்பதிகாரம். இது தேவாரத் திருமுறைகளிற் கூறப்படவில்லை; பிற்காலச் சோழர் காலத்துச் செய்யப்பட்ட கலிங்கத்துப் பரணி, உலா இவற்றில் கூறப்பட்டுளது. அங்கும் மநுச்சோழன் முழுவரலாறு கூறப்படவில்லை. ஆயின், சேக்கிழார் ஒருவரே முழு வரலாறு கூறியுள்ளார். இவ்வரலாறு இவர்க்கு எங்ஙனம் கிடைத்தது?

திருவாரூர்க் கல்வெட்டு. திருவாரூர் வீதிவிடங்கப் பெருமான் கோவில் இரண்டாம் பிராகாரம் வடபுறச் சுவரில் ஒரு பெரிய கல்வெட்டுக் காண்கிறது. அது விக்கிரம சோழனது 5-ஆம் ஆட்சியாண்டில் (கி. பி. 1123-ல்) வெட்டப்பட்டது. அது, திருவாரூர்ச் சிவபிரானே மநுச்சோழன் வரலாற்றைக் கூறுவதுபோல வெட்டப்பட்டுள்ளது. (1) மநுச்சோழன் மகன் பெயர் ப்ரியவ்ருத்தன்; அமைச்சன் இங்கணாட்டுப் பாலையூர் உடையான் உபயகுலாமலன் என்பவன். இறுதியிற் சிவபிரான் மநு மைந்தனையும் அவனைக் கொல்ல மனம் வராது தற்கொலை செய்து கொண்ட முன் சொன்ன அமைச்சனையும், பசுக் கன்றையும் எழுப்பினதாகக் கூறப்பட்டுள்ளது. மநு தன் மகனை அரசனாக்கி, அமைச்சன் மகனை சூரியனை அம்மகனுக்கு அமைச்சனாக்கித் தானும் தன் அமைச்சனும் தவநிலை மேற்கொண்டனராம். மநு தன் அமைச்சற்குப் பரிசாக அளித்த திருவாரூரில் இருந்த மாளிகை, அவன் மரபில் வந்தவனும் விக்கிரம சோழனது அமைச்சனுமான பாலையூர் உடையான் சந்திரசேகரன் ஆதிவிடங்கனை குலோத்துங்க சோழ மகாபலி வாணராயனுக்கு உரியது. அதனைப் பழையபடி மாளிகையாக எடுத்துக் குடிவைக்க ஏற்பாடு செய்யப் பெற்றது........... இந்த விவரங்கள் அனைத்தும் ஆரூர்ச் சிவனார் மாகேசுவரர்க்கும் கோவில்

ஆதி சைவர்க்கும் கூறியபடி கல்லில் வெட்டப்பட்டன வாம்.[71]

இக் கல்வெட்டால், விக்கிரம சோழன் காலத்தில் மநுச்சோழன் வரலாறு சிறப்பாகப் பலரும் அறியத்தக்க நிலையில் இருந்ததென்பது அறியலாம். இதிற் காணப் பெறும் பெயர்கள் பிற்காலப் பெயர்களாகும் என்பதும் அறியலாம். சேக்கிழார் பெருமான் (கி. பி. 1113-1150) இக் கல்வெட்டைப் படித்திருக்கலாம்; கதையையும் கேட்டிருக்கலாம். ஆயின், ஆராய்ச்சிப் புலவரான அப் பெரியார், கல்வெட்டிற் காணத்தக்க பிற்காலப் பெயர் களை அகற்றித் தமக்கு வேண்டிய குறிப்புகளை மட்டுமே எடுத்துக்கொண்டார் என்பது இக் கல்வெட்டையும் சேக்கிழார் கூறும் கதையையும் படித்தவர் நன்குணர லாம்.

# II. வேறு சில வரலாற்றுக் குறிப்புகள்

இதுகாறும் பேரரசர், சிற்றரசர் சம்பந்தமான வரலாற்றுச் செய்திகளைத் தக்க சான்றுகள் கொண்டே சேக்கிழார் கூறினவராவர் என்பது கூறப்பட்டது. இனி, வாணிகம், சமயம் முதலிய சமூகத் தொடர்பாகச் சேக் கிழார் கூறியுள்ளவை எந்த அளவு அந்நாயன்மார் கால வரலாற்றுக் குறிப்புகளோடு ஒன்றுபடுகின்றன என் பதைச் சிறிது காண்போம்.

## 1. கடல் வாணிகம்

காரைக்கால் அம்மையார் காலத்திற் கடல் வாணிகம் நடந்ததாகவும் அவர் கணவன் கடல் கடந்து வாணிகம்

[71] S. I. I. V. 456.

செய்தான் என்றும் சேக்கிழார் கூறியுள்ளார்; [72] அம்மையாரைப் போலவே அப்பர்க்கு முற்பட்ட அமர்நீதியாரும் பல நாடுகளிலிருந்தும் வந்த வளத்தால் பெருஞ் செல்வராக இருந்தார் என்றும் கூறியுள்ளார். [73]

வரலாறு : சங்ககாலம் முதலே மகாபலிபுரம் சிறந்த துறைமுகப் பட்டினமாக இருந்தது. [74] பூம்புகார் கடற்றுறைப் பட்டினமாக இருந்தது என்பது பட்டினப் பாலையால் அறியலாம். புகாரும் நாகப்பட்டினமும் சம்பந்தர் காலத்தில் துறைமுகப்பட்டினங்களாக இருந்தன. [75]

கி. பி. 5-ஆம் நூற்றுண்டினரான புத்ததத்தர், காவிரிப்பூம் பட்டினத்திற் பெருஞ்செல்வராய வணிகர் தம் காலத்தில் உறைந்தனர் என்றும், பூம்புகார் துறைமுகமாகவும் அழகிய வளமிக்க மாநகரமாதவும் இருந்தது என்றும் கூறியுள்ளார்.[76] "கி. பி. 5, 6, 7-ஆம் நூற்றுண்டுகளில் வரையப்பட்ட சீனர் குறிப்புகளில் தென் இந்திய வாணிகமும் இடம்பெற்றுள்ளது. அக்காலத்தில் மகாபலிபுரம், காவிரிப்பூம்பட்டினம், சாலியூர், கொற்கை என்பன கீழ்க்கரையில் சிறந்த துறைமுகப்பட்டினங்களாக இருந்தன. கிழக்குக் கடல் வாணிகத்தில் இலங்கையும் நிக்கோபார் தீவுகளும், மேலைக்கடல் வாணிகத்தில் லக்கத்தீவுகளும் மால்டிவ் தீவுகளும் கப்பல்கள் தங்கும் இடங்களாக இருந்தன.[77] இராசசிங்கன் (கி. பி. 685 - 720) சீன வணிகர்க்காக நாகையில் பௌத்த விஹாரம் ஒன்றைக் கட்டிச் சீன அரசனைப் பெருமைப் படுத்தினான்; சீன அரசனும் பல்லவனை மதித்துப் பல பரிசுகள் அனுப்பினான்

---

[72] S. 2, 32—34.
[73] S. 2.
[74] Perumpan Attruppadai, ll. 320—336.
[75] Samajam edition, pp. 106, 137.
[76] K. A. N. Sastry's 'Cholas' Vol. I, pp. 120—121.
[77] Ibid. Vol. II, part I, pp. 432—433.

என்று சின நூல்கூறுகிறது.[78] நந்திவர்மன் III காலத்தில் கடல் வாணிகம் நன்னிலையில் நடந்ததென்பதற்குத் தெளிவாகக் கல்வெட்டுத் தக்க சான்றாகும்.[79] 'நானாதேசத் திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்' என்னும் கூட்டத்தார் சோழர் காலத்திற் சிறந்த வணிகராக இருந்தவராவர். இவர்கள் கடல் கடந்து பல நாடுகளில் வாணிகம் செய்தவர்கள். இவ்வணிகக் கூட்டம் விஜயாலயச் சோழ மரபினர்க்கு முற்பட்டதாக இருக்கவேண்டும் என்று எண்ண இடமுண்டு.[80]

## 2. மறையவர் சிற்றூர்கள்

பல்லவர் காலத்தில் மறையவர் பல சிற்றூர்களிற் குடியேறி யிருந்தனர் என்பதும், அவர்கள் பலராக இருந்த சிற்றூர்கள் அவர்கள் ஆட்சியில் இருந்தன என்பதும் 6-ஆம் பகுதியிற் கூறப்பட்டன. அத்தகைய ஊர்களில் மூன்று பெரிய புராணத்தில் கூறப்பட்டன. (1) சேய்ஞலூர், (2) தில்லை, (3) திருவெண்ணெய்நல்லூர் என்பன.

### 1. சேய்ஞலூர்

இவ்வூர்ச் சபையார் மறையவர். அவர்கள் தங்கள் பசுக்களின் பாலை விசாரசர்மன் (சண்டேச நாயனார்) வீணாக்குவதை அவர் தந்தைக்கு அறிவிக்க, அவன், 'இனி அக்குற்றம் நடப்பின், அதற்கு நான் உள்ளாவேன்', என, அதற்கு அவர்கள் இசைந்தார்கள்.[81]

### 2. தில்லை

தில்லையில் தில்லைவாழ் அந்தணர் அவை இருந்தது. அவர்கள் அவ்வூரார் வழக்குகளைத் தீர்த்துவந்தனர்போலும்!

---

78 Dr. C. Minakshi's 'Ad . . . . . Pallava's, pp. 68 & 90.
79 J. O. R., Madras, Vol. 6, p, 300.
80 K. A. N. Sastry's 'Cholas' Vol. II, Part I, pp. 419—421.
81 Sandisar Puranam, S. 40—43.

திருநீலகண்ட நாயனார்க்கும் வேதியர்க்கும், ஒப்புவித்த (பொருள்) திருஓட்டினைக் காணுமற் போக்கிய வழக்கு (Breach of trust) நேர்ந்தபோது, அதனை மேற்சொன்ன அவையாரே தீர்த்து வைத்தனர்.[82]

## 3. திருவெண்ணெய்நல்லூர்

இங்கு மறையவர் அவை இருந்தது. அவர்கள் சுந்தரரையும் அவரை அடிமை என்று வாதித்த சிவனாகிய கிழ வேதியனையும் விசாரித்தனர்; ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி என்ற மூன்றையும் நன்கு சோதித்து, கிழவேதியன் காட்டிய படி ஓலை (copy), மூல ஓலைகளைச் சோதித்தனர்; அம்மூல ஓலை எழுத்தும் அரண்தருகாப்பில் (Record-room of the Village Sabha) இருந்த சுந்தரர் பாட்டனார் வரைந்திருந்த ஓலை எழுத்தும் ஒன்றாக இருத்தலைக் கண்டு, 'சுந்தரர் கிழ வேதியர்க்கு அடியவரே' எனத் தீர்ப்புக் கூறினர். அவர்தம் அவையில் 'கரணத்தான்' (Clerk) இருந்தான்.[83]

### வரலாறு

இவ்வூர் அவைகள் பல்லவர் கல்வெட்டுகளிலோ-பட்டயங்களிலோ இடம் பெற்றில. ஆயினும், இவை இருந்தில எனக் கூறவும் சான்றில்லை. நாயன்மார் குறிப்புகளைத் தக்கவாறு தொகுத்தனர் என்று நாம் நம்பும் சேக்கிழார், இச் செய்திகளைத் தம் மனம் போனவாறு கூறினார் எனக் கோடல் இயலாது. பல்லவப் பெருநாட்டில் ஏறத்தாழ 20 ஊர்களில் அவைகள் இருந்தன என்பது கல்வெட்டுகளால் தெரிகிறது.* திருநின்றவூரில் சபை இருந்ததை நோக்குழிப் புகழ்பெற்ற தில்லையில் சபை இருந்ததில்லை எனக் கூற இயலுமா?

---

82 S. 30—38. * S. I. I. Vol. 12
83 Taduttatkonda Puranam, S. 42—62.

"தன்மையினால் அடியேனைத் தாமாட்கொண்ட நாள் சபைமுன்"
"வெண்ணெய் நல்லூரில் அற்புதப்பழ ஆவணம் காட்டி..."

தம்மை இறைவன் ஆட்கொண்டதாகச் சுந்தரர் பல இடங்களிற் கூறியுள்ளார்.[84] இவ்வகச் சான்றுகளைக் கொண்டும் தாம் நேரிற் கேட்டறிந்தவற்றைக் கொண்டும் சேக்கிழார் பெருமான் சுந்தரர் வழக்கை மிகத் தெளிவாக விளக்கிச் சென்றனரே தவிரத் தம் கால நீதிமன்ற விவரங்களை மனத்தில் எண்ணிக்கொண்டு, சுந்தரர் காலத்தில் இல்லாத ஒன்றைக் கூறினார் அல்லர். கிருஷ்ணை முதல் காவிரி வரை பரந்துபட்ட பெருநாட்டை ஆண்ட பல்லவர் ஆட்சியில் கிராமச் சபைகள் இல்லை எனவோ, அச்சபை வேலைகளைக் கவனிக்கக் காணத்தான் இல்லை எனவோ, அவ்வூர்க்குரிய ஆவணங்கள் (Records) இல்லை எனவோ, கூறல் இயலாது.* அவற்றைத் தெளிவாக உணர்த்தத் தக்க கல்வெட்டுகள் இக்காலத்தில் இல்லாமையால், அவை இருந்தில எனக் கோடல் முறையன்று. சிறந்த நாகரிகக் கலைகளை வளர்த்துப் பலநூற்றாண்டுகள் பேரரசு நடத்திய பல்லவர் மேற்சொன்ன ஊராட்சி முறையைச் சிறந்த நிலையிற் கொண்டிருந்தனர் என்றெண்ணலே முறையாகும். ஆகவே சேக்கிழார் கூற்று நாயன்மார் கால முறைக்கு மாறுபட்டதாகாமை அறியப்படும்.

---

84 Sundarar Devaram, pp. 42, 136, 137, 152, 158, 164, 178, 205 250.

* "The Pandya and the Palava inscriptions of the eighth and early ninth centuries show a system, very similar, but not so quite developed, in operation throughout the Tamil country . . . . . The life and functining of rural institutions, the ultimate cells that sustained national existence, were clearly little affected by dynastic wars and the shifting of political power at the top." —Prof. K. A. N. Sastry's 'Cholas', Vol. II, Part I, p. 268.

## 3. உடன் இறத்தல்

(1) அப்பரது தாயார் தம் கணவருடன் உடன் கட்டை ஏறினார்.[85] எனவும், (2) சேரமான் விண்வழிச் சென்றதைக் கண்ட அவர் மெய்க்காவல் படையினர் வாளால் குத்திக்கொண்டு இறந்தனர் (அவர் முன் சென்று கயிலையில் சேவகம் ஏற்றனர்)[86] என்றும் சேக்கிழார் குறித்துள்ளார். இவ்விரண்டு செய்திகள் சேக்கிழார் கூற வேண்டிய தேவை இல்லை. அங்ஙனம் இருந்தும் அவர் கூறியதை நோக்கத் தக்க சான்று கொண்டே கூறினார் எனக் கொண்டு, அப்பர்-சேரமான் காலங்களில் (பல்லவர் காலத்தில்) இவ்வழக்குகள் உண்டா என்பதை ஆராய வேண்டும்.

### வரலாறு

(1) அப்பர் காலத்திற்கு முற்பட்ட நூலாகிய மணிமேகலையில், கணவனை இழந்த பத்தினிப் பெண்டிர் (1) உடனே உயிர்விடுவர், (2) தீ மூழ்குவர், (3) கைம்மை நோன்பு நோற்பர் என்ற மூவகை வழிகள் குறிக்கப்பட்டுள. இவற்றில் முதல் வழியை அப்பர் தாயார் கைக்கொண்டார்; மூன்றும் வழியை அப்பர் தமக்கையார் கைக்கொண்டார். எனவே, இப்பழக்கங்கள் கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் இருந்தவை எனக் கொள்ளலாம். மனைவி உடன் இறக்கும் பழக்கம் கி. பி. 10, 11, 12-ஆம் நூற்றாண்டுகளிலும் இருந்தது என்பது சோழர் காலத்துக் கல்வெட்டுகளாலும் அறியலாம்.[87] சுந்தரசோழனுடன் இராசராசன் தாயான வானவன் மாதேவி உடன்கட்டை ஏறினாள்.[88]

---

85 Appar Puranam, S. 27-28.

86 Vellanaic carukkam, S. 37-38.

87 376 of 1903, 141 of 1898; 174, 188 & 499 of 1911.

88 Thiruvalangadu plates, S. 65-66 and 236 of 1902.

(2) சேரமானுடன் சென்ற படைவீரர் அவர் விண்வழிச் சென்றதைக் கண்டதும், தம்மைத் தாமே வாளால் குத்திக்கொண்டு இறந்த செயல் கவனிக்கத் தக்கது. இவர்கள் இராசராசன் I காலத்து வேளைக்காரப் படையினரை ஒத்தவர் ஆவர். இப்படையினர் அரச சேவையில் அரசனது நம்பிக்கைக்கு உரியவர்; அரசரை எப்பொழுதும் சூழ இருந்து பாதுகாத்தலும் அவன் இறப்பின் உடன் இறத்தலும் இவர் தொழிலாகும். இங்ஙனம் அவனுக்காகத் தியாகம் செய்யும் வேளையை எதிர்பார்த்து நிற்றலின் இவர் 'வேளைக்காரர்' எனப்பட்டனர்.[89] இம்முறையில் 'தென்னவன் ஆபத்துதவிகள்' என்று பிற்காலப் பாண்டியரிடம் படைவீரர் இருந்தனர் என்பது மார்க்கோபோலோ குறிப்பாலும் அறியப்படும்.[90] இச்சான்றுகளை நோக்கச், சேரமானிடம் இத்தகைய வேளைக்காரப் படையினர் இருந்தனர் என்று கோடல் பொருந்தும்.

## 4. சமணர் கழுவேற்றம்

(1) சம்பந்தரிடம் வாதில் தோற்றால் பெருங்குன்றத்தைச் சேர்ந்த எண்ணாயிரம் சமணர் தாம் கழு ஏறுவதாகக் கூறினர்; சமணர் கூறியபடியே பாண்டியன் அமைச்சரைக் கொண்டு செய்வித்தான்; (2) சம்பந்தர் வேந்தன் செய்கை மிகையன்று என்றெண்ணி விலக்காதிருந்தார்—என்பன சேக்கிழார் கூற்றுகள்.[91]

---

[89] K. A. N. Sastry's 'Cholas,' Vol II, part I, p. 225.

[90] Ibid. 'Pandyan Kingdom', pp, 196-197.

[91] S. 798, 853-855.

நம்பியாண்டார் நம்பி இச் சமணா கழு ஏறியதைப் பல இடங்களிற் குறித்துள்ளார்.[92] இதனைச் சான்றாகக் கொண்டே சேக்கிழார் கூறினார் ஆதல் வேண்டும். பெரியபுராணத்தின்படி, (1) சமணர் அப்பர்க்குக் கொடுமை செய்தனர்; பல்லவ மகேந்திரவர்மன் அதற்கு உடந்தையாக இருந்தான்; (2) சமணர் சம்பந்தர் மடத்திற்குத் தீவைத்தனர்; (3) பல்லவ மகேந்திரவர்மன் சைவனாக மாறியதும் சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தள்ளினான்; (4) நெடுமாறன் சைவனாக மாறியதும் சமணரைக் கழுவேறச் செய்தான். இவற்றுள் முன்னவை இரண்டும் சமணர் சைவர்க்குச் செய்த கொடுமைகள்; பின்னவை இரண்டும் சைவர் சமணர்க்குச் செய்த கொடுமைகள். இத்தகைய கொடுமைகள் பல்லவர் காலமாகிய நாயன்மார் காலத்தில் நடந்ததுண்டா என்பது ஆராயத்தக்கது.

## வைணவர் கொடுமை – இலக்கியச் சான்று

(1) திருமங்கையாழ்வார் நாகைப் பௌத்த விஹாரத்தில் இருந்த பொன்னாற் செய்யப்பட்ட புத்தர் சிலையைக் கவர்ந்து, அதைக்கொண்டு பல கோவில் திருப்பணிகள் செய்தனர் என்று குருபரம்பரை கூறுகிறது. இவரது காலத்தவர் என்று கருதப்படும் தொண்டரடிப்பொடி ஆழ்வார் அமயம் வாய்ப்பின் பௌத்தர் - சமணர் தலைகளை அறுப்பதே நல்லதென்ற கொள்கை உடையவர் என்பது அவர் பாடலால் அறியலாம்.

---

92(1) Aludaiyapillaiyar Tiruvandadi, S. 28, 81.
(2) ,, Mummanikkovai, S. 4.
(3) ,, Tiruvulamalai, lines 145-148, 267-270.
(4) ,, Tirukkalambakam, S. 1,8,9,18,
(6) ,, Tirutthondar Thiruvandadi, S. 26, 60.

" வெறுப்பொடு சமணர் முண்டர்
விதியில் சாக்கியர்கள் நின்பால்
பொறுப்பரி யனகள் பேசில
போவதே நோய தாகிக்
குறிப்பெனக் கடையு மாகில்
கூடுமேல், தலையை ஆங்கே
அறுப்பதே கருமம் கண்டாய்
அரங்கமா நகரு ளானே!"[93]

## பட்டயச் சான்று

"தர்ம சாத்திர முறைக்கு மாறான நடவடிக்கை கொண்ட (not according to the law of Dharma) மக்களை அழித்து (destroyed) அவர்கள் நிலத்தைக் கைப் பற்றி வரியிலியாகப் பிராமணர்க்கு அளித்தான் இரண்டான் நந்திவர்மன்" என்பது உதயேந்திரப் பட்ட யத்திற் காணப்படுகிறது. இக் குறிப்பைப்பற்றி அறிஞர் தாமஸ் போக்ஸ், 'இந்த நிலத்துக்குரியவர் சமணர். அவர் களை அழித்து இந்நிலத்தைப் பிராமணர்க்களித்தலை என்பது, பல்லவ மன்னன் வரலாற்றில் ஒரு களங்கத்தை உண்டுபண்ணிவிட்டது. இச்செயல் அக்கால நிலைமையை ஒட்டியது போலும்!' [94] என்று கூறியுள்ளார். இக் கூற்றுகளால், வைணவனான பல்லவமல்லன் தன் முன் னோர் சமணர்க்கு விட்டிருந்த நிலத்தைக் கவர்ந்து, மறை யவர்க்கு உரிமையாக்கினான் என்பது பெறப்படும்.

## சிற்பச்சான்று

காஞ்சி - வைகுந்தப் பெருமாள் கோவில் உட்சுவர் மீதுள்ள சிற்பங்களில் ஒன்று பல்லவமல்லன் சமயக்

---

93 Thiruvarangap padikam, S. 8. (Thirumalai)
94 Ind. Ant. Vol. 8, p. 281.

கொடுமையைக் குறிக்கிறது: அரசன் அரியணையில் அமர்ந்துள்ளான். அவனுக்கு எதிரில் துறவிகள் இருவர் கழுவேற்றப்பட்டுளர். இச் சிற்பத்திற்கு வலப்புறம் ஒரு சிறிய கோவிலையும் அதன் வலப்புறம் வைகுந்தப் பெருமாள் கோவில் போன்ற பெரிய கோவிலையும் குறிக்கும் சிற்பங்கள் காண்கின்றன. "சமணர், பௌத்தர் போன்ற புறச் சமயத்தாரை அழித்து வைணவத்தை நிலைநாட்ட முயன்றதைத்தான் இச்சிற்பங்கள் உணர்த்துகின்றன. இச் சிற்பங்களால் பல்லவ மல்லன் நடத்தை நன்கு விளங்குகிறது. இஃது அக்காலத்தை ஒட்டிய செயல்போலும்! வென்றவர் கோவிலில் இத்தகைய நிகழ்ச்சிகளைச் சிற்பங்கள் வாயிலாகக் காட்டியிருத்தல் அக்காலத்திற்கு ஏற்றதாக இருந்ததுபோலும்!"[95]

மதுரையைக் கைப்பற்றிய களப்பிரன் என்ற கலியரசன் பிரம்மதேயத்தை அழித்தான் என்பது வேள்விக் குடிப்பட்டயத்தால் அறியலாம். இது, சமணன் அல்லது பௌத்தனை அவன் வைதிக சமயத்திற்குச் செய்த கொடுமையாகும்.

இவ்விலக்கிய - பட்டய-சிற்பச் சான்றுகளை நோக்க, சேக்கிழார் கூறிய சைவர் கொடுமையும் சமணர் கொடுமையும் நடந்திருக்கலாம் எனக் கோடலில் தவறில்லை. தோற்றோர் கழுவேறல் அல்லது ஏற்றப்படல் அக்கால நிலைக்குப் பொருந்தியதாகலாம் என்ற தாமஸ் போக்ஸ் கூறியதற்கு ஏற்பவே, "சம்பந்தர், 'மிகைபடா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்தார்' " என்று சேக்கிழார் கூறுதல் காணத் தக்கது. எனவே, சேக்கிழார் மேற்சொன்ன கொடுமைகளைத் தாமாகக் கட்டிச் சொன்னவர் அல்லர் என்பது பெறப்படும்.

---

95 Dr. Minakshi's 'Ad. - - - Pallavas', p. 172.

## நாயன்மார் காலத்து அடியவர்கள்

நாயன்மார் காலத்திற் சிவயோகியர், மாவிரதியர், பயிரவ வேடங்கொண்ட காபாலிகர் முதலியோர் இருந்தனர் என்பதும், அவர்கள் நாயன்மாரால் சிறப்பிக்கப் பெற்றனர் என்பதும் திருநீலகண்டர், மானக்கஞ்சாறர், சிறுத்தொண்டர் முதலியோர் வரலாறுகளால் நன்கறியலாம். இவ்வேடத்தினர் சேக்கிழார் காலத்தில் இருந்தனர் என்பது 7-ஆம் பிரிவிற் கல்வெட்டுச் சான்றுகளால் காட்டப்பட்டது. ஆயின் அவர்கள் அப்பர் முதலியோர் காலத்தில் இருந்தனர் என்பதற்குச் சான்றென்னை? எனின், அப்பர் பதிகமே சான்றென்னலாம்.

"விரிசடை விரதிகளந்தணர் சைவர்பாசுபதர்கபாலிகள்
தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே!" 96

அப்பர் இங்ஙனம் கூறுதலை, அவர்காலத்தவனான மகேந்திர வர்மன் தனது மத்தவிலாச நாடகத்தில் மெய்ப்பித்துள்ளான். அவன் தன் காலத்தில் காஞ்சியில் காபாலிகர், பாசுபதர் இருந்தனர் எனக் குறித்தமை காண்க. காணவே, சேக்கிழார், நாயன்மார் வரலாறுகளை, அந்நாயன்மார் கால நிலையை உளங்கொண்டே தக்க சான்றுகள் கொண்டு மிகுந்த எச்சரிக்கையுடன் பாடினார் என்பது அறியப்படும்.

## கணநாதர் சமயப் பயிற்சி

இவர் சீகாழிப் பதியினர்; தம்மை நாடி வந்தவர்க்கு, (1) நந்தவனப்பணி, (2) மலர் கொய்தல், (3) பலவகை மாலைகள் கட்டுதல், (4) திருமஞ்சனம் கொணர்தல், (5) கோவிலில் அலகிட்டு மெழுகுதல், (6) விளக்கெரித்தல், (7) திருமுறை எழுதுதல், (8) திருமுறை வாசித்தல்

---

96 4·20·3.

முதலிய பல திருப்பணிகளில் போதிய பயிற்சி அளித்துத் 'தொண்டர்' ஆக்கி வந்தார் என்பது சேக்கிழார் கூற்று.[97]

## வரலாறு

இந்தியா முழுவதும் பள்ளிகளையும் விஹாரங்களையும் வைத்துச் சமயக் கல்வியைப் புகட்டிவந்த சமண-பௌத்த சமயங்களை ஒழிக்கப் புறப்பட்ட சைவசமயத்தில் அச் சமய வுணர்ச்சியை ஊட்டி வளர்க்கும் தக்க அமைப்புகள் இருந்தாகல் வேண்டும். சமண மடத்தில் தலைவராக இருந்து சைவரான அப்பர் இத்தகைய அமைப்புகளில் வல்லர் அல்லவா? அவர் காலத்தில் சைவசமய வளர்ச்சிக்குரிய மேற்சொன்ன செயல்களில் பயிற்சி தரத்தக்க மடங்கள் இருந்தன என்று நம்பலாம். அவரே திருப்பூந்துருத்தியில் ஒரு மடம் அமைத்தார்; அங்குத் தங்கியிருந்த பொழுதுதான் பல திருப்பதிகங்கள் பாடினார் என்பது சேக்கிழார் கூற்று[98] எனவே, மேற்சொன்ன கணநாதர் போன்ற நாயன்மார் பயிற்சி அளிக்காவிடின், அப்பர்-சம்பந்தரது பிரசாரத்தால்மட்டும் சைவசமயம் தமிழகத்தில் உறுதியாக வேரூன்ற முடியாதன்றோ? சோழர் காலக் கல்வெட்டுகளில், 'ஆண்டார் என்பவர் மலர் பறிப்பவர்; அலகிடுபவர்; மெழுக்கிடுபவர்; திருவீதி தூய்மை செய்பவர்'[99] எனவரும் செய்திகளை நோக்க, அவர்கள் கணநாதர் போன்றாரிடம் பயிற்சி பெற்றவர் என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

## முடிவுரை

இதுகாறும் கூறப்பெற்ற செய்திகளை நோக்கச் சேக்கிழார், (1) திருமுறைகள், (2) வல்லார்வாய்க்கேட்ட

[97] Gananatar Puranam S. 3—4.

[98] Appar Puranam 413—415.

[99] 350 of 1919; S. I. I. Vol. 7, No. 97.

செய்திகள், (3) கல்வெட்டுகள் ஆகிய இம்மூன்றின் துணைக் கொண்டே இப்பகுதியிற் குறித்த வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்தார் எனக்கூறல் பொருந்துவதாகும். இங்ஙனம் சேக்கிழார் அரும்பாடுபட்டுக் குறிப்புகள் தொகுத்தமையாற்றான் பெரிய புராணம் வரலாற்றுச் சிறப்புடைய நூலாக மதிக்கப்படுகின்றது. சேக்கிழார் வாதாபிப் போரைக் குறியாதிருப்பின் சம்பந்தர் காலம் அறிந்திருத்தல் இயலாது; அங்ஙனமே 'குணபர ஈசுவரம்' குறித்திராவிடில் அப்பர் காலம் அறிந்திருத்தல் இயலாது. சேக்கிழார் வரலாற்று உணர்ச்சி உடையவர் என்பதற்கு இவ்விரண்டு சிறந்த வரலாற்றுக் குறிப்புகளே போதிய சான்றாகும் அன்றோ?

# XI. சேக்கிழாரது நூலாசிரியப் பண்பு

## பெரிய புராணம் பெருங் காவியம்

நாயன்மார் வரலாறுகட்குரிய மூலங்களை எல்லாம் இலக்கியம் - கர்ண பரம்பரை - கல்வெட்டு இவற்றைக் கொண்டு தொகுத்த சேக்கிழார் அவற்றைத் தம் தமிழ்ப் புலமைத் திறத்தினாலே ஒரு பெருங் காவியமாகச் செய்து, அதற்குத் 'திருத்தொண்டர் புராணம்' எனப் பெயரிட்டார் என்பது தெரிகிறது. சேக்கிழார், இந்நூலுள் சுந்தரர் வரலாற்றை நூலின் முதல்-இடை-கடைகளில் வைத்தும், சுந்தரரால் குறிக்கப் பெற்ற நாயன்மார் வரலாறுகளை இடையிடையே வைத்தும் சென்றதை நோக்க, காவியத் தலைவர் சுந்தரர் என்பது தெளிவாகப் புலனாகும். சுந்தரரது திருத்தொண்டத் தொகை பிறந்ததும் பரவையார் காதல் மணம் நிகழ்ந்ததும் ஆகிய திருவாரூரே நகரமாகக் கொள்ளப்பட்டு நகரச் சிறப்பும்,

அந்நகரைத் தன் அகத்தே கொண்டதால் சோணாட்டுச் சிறப்பும் காவிய முறைக்கேற்ப ஆசிரியராற் கூறப்பட்டன. 'சேக்கிழார், திருத்தொண்டத் தொகைப் பாடல்கள் 11-ஐயும் 11 சருக்கங்களாகக் கொண்டார். அவை யாவன: சுந்தரர் தொகையில் உள்ள 11 பாக்களுடைய முதல்களின் பெயரிட்டுச் சேக்கிழார் வகுத்துக் கொண்ட 11 சருக்கங்கள்:

| பாடலின் முதல் | சருக்கத்தின் பெயர் |
|---|---|
| 1. தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் | 'தில்லைவாழ் அந்தணர்' சருக்கம். |
| 2. இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன் | 'இலை மலிந்த' சருக்கம். |
| 3. மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன் | 'மும்மையால் உலகாண்ட' சருக்கம். |
| 4. திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட | 'திருநின்ற' சருக்கம். |
| 5. வம்பறு வரிவண்டு மணநாற மலரும் | 'வம்பறு வரிவண்டுச்' சருக்கம். |
| 6. வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே | 'வார்கொண்ட வனமுலையாள்' சருக்கம் |
| 7. பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன் | 'பொய்யடிமை இல்லாத புலவர்' சருக்கம். |
| 8. கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த... | 'கறைக்கண்டன்' சருக்கம். |
| 9. கடல்சூழ்ந்த வுலகெல்லாம் காக்கின்ற பெருமான் | 'கடல் சூழ்ந்த' சருக்கம். |
| 10. பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன். | 'பத்தராய்ப் பணிவார்' சருக்கம். |
| 11. மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல் | 'மன்னியசீர்'ச் சருக்கம். |

ஒவ்வொரு சருக்க முடிவிலும் சுந்தரரைப் பற்றிப் பாடிச் செல்வது, பெரிய புராணம் ஒரு 'தொடர் நிலைச் செய்யுள்' என்பதை வற்புறுத்தற்கே என்பது தெளிவாகும். * சுந்தரர் கதை திருமலை (கயிலாய)ச் சருக்கத்தில் தோன்றி வெள்ளானைச் சருக்கத்தில் முடிவதும் பெரிய புராணம் சுந்தரர் பற்றிய காவியமே என்பதை வலியுறுத்துவதாகும். பெருங் காவியத்து இலக்கணங்களான நாற்பொருள் கூறல் முதலியன இதன்கண் நன்முறையில் அமைந்துள்ளன என்பது கற்றவர் அறிந்ததே! இதனை ஒவ்வொன்றாகக் கூறின் விரியும். [1]

---

[1] Vide C. K. S. Mudaliar's 'Sekkilar' pp. 151—172.

*சான்றாக இரண்டு சருக்கங்களின் ஈற்றுப் பாக்களைக் காண்க :—

1. " நாட்டார் அறிய முன்னாளில்
நன்னாள் உலந்த ஐம்படையின்
பூட்டார் மார்பிற் சிறியமறைப்
புதல்வன் தன்னைப் புக்கொளியூர்த்
தாட்டா மரையின் மடுவின்கண்
தனிமா முதலை வாய்நின்று
மீட்டார் கழல்கள் நினைவாரை
மீளா வழியின் மீட்பனவே. "

—திருநின்ற சருக்கத்தின் ஈற்றுச் செய்யுள்.

2. " உளத்திலொரு துளக்கமிலோம்
உலகுய்ய இருண்டதிருக்
களத்தமுது குன்றர்தரு
கனகமாற் றினில்விட்டு
வளத்தின்மலி ஏழுலகும்
வணங்குபெருந் திருவாரூர்க்
குளத்திலெடுத் தார்வினையின்
குழிவாய்நின் றெனையெடுத்தார்."

—பொய்யடிமை...சருக்கத்தின் ஈற்றுச் செய்யுள்.

# 1. தமிழ் நூற் புலமை

*பெருங் காவிய நிலைக்கு ஒத்து விளங்கும் பெரிய புராணத்தைச் செய்த ஆசிரியர் சேக்கிழார் பெருமான், தமக்கு முற்பட்ட எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி என்ற பழைய இலக்கியங்களைப் பழுதறப் படித்த பெரும் புலவர் என்பது அவரது காவியத்தால் அறிய முடிகிறது. அவர் இந்நூற் கருத்துகளை எங்ஙனம் தம் நூலுள் எடுத்தாண்டுள்ளனர் என்பதை விளக்க, நூலுக்கு இரண்டொரு சான்றுகள் கூறிச் செல்வோம்.*

## புறநானூறு

*1. சேக்கிழார் திருநகரச் சிறப்பில் (செ. 14) 'அரசன் தன் நாட்டு உயிர்கட்குக் கண்ணும் உயிரும் போன்றவன்' என்றும், புகழ்ச் சோழர் புராணத்தில் (செ. 33) 'மன்னவன் தன் நாட்டு உயிர்கட்கு உயிர்' என்றும் கூறியிருத்தல்,*

> *"நெல்லும் உயிரன்று நீரும் உயிரன்று*
> *மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்"*

*என்ற புறநானூற்றுச் செய்யுள் (186) கூற்றோடு ஒத்து வரல் காண்க.*

*2. சேக்கிழார் சம்பந்தர் புராணத்தில் (செ. 773) 'கந்து சீறு மால் யானை' என்ற தொடர்,*

> *"கந்து முனிந்து உயிர்க்கும் யானையொடு"*

*என்ற புறநானூற்று (செ. 178)த் தொடருடன் ஒன்றுபடல் காண்க.*

## அகநானூறு

*1. சேக்கிழார் கண்ணப்பர் புராணத்தில் (செ. 9) 'இரும்புலி எயிற்றுத் தாலி' என்றமை,*

'புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி'

என்ற அகநானூற்றுச் செய்யுள் (7) தொடரோடு ஒன்றுபடல் காண்க.

2. முருக நாயனார் புராணத்தில் (செ. 4) 'வண்டு பாடப் புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் அரும்புவன' என்று கூறியிருத்தல்,

"வண்டுபோ தவிழ்க்குந் தண்கமழ் புறவு"

என்ற அகநானூற்றுச் செய்யுள் (74) தொடரை ஒத்திருத்தல் காண்க.

## நற்றிணை

கண்ணப்பருடன் சென்ற வேட்டை நாய்கள் தம் நாக்களை நீட்டியும் சுருக்கியும் தொங்க விட்டுக்கொண்டு ஓடிய காட்சி-வேடர் தம் வில்மீது பொருந்தும் வெற்றி மகளது சிவந்த பாதம் முன்போய் நீள்வதுபோல இருந்தது (செ. 69) என்ற கருத்து,

'முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய்
நன்னுப் புரையும் சீறடி'

என்ற நற்றிணைச் செய்யுள் (252) அடிகளோடு ஒத்துவரல் காண்க.

## ஐங்குறுநூறு

திருநீலகண்ட நாயனார் பரத்தையைச் சேர்ந்து மீண்டதை அறிந்த மனைவியார் அவரோடு போகம் விரும்பாராய்த் தம்மைத் தீண்டலாகாது என்று ஆணையிட்ட கருத்து (செ. 5, 6), 'என் அழகு (இளமை முதலியன) வீணாகப் போயினும் சரி,

"பிறர்தோய்ந்த உனது மார்பை யான் தழுவேன்'

என்ற ஐங்குறுநூற்றுச் செய்யுள் அடிகளின் கருத்துடன் ஒன்றுபடல் காணத்தக்கது.

கலித்தொகை

1. மானக்கஞ்சாறர் புராணத்தில் (செ. 11) வரும் 'மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி' என்ற தொடரின் கருத்தும்,

'வான்தரு கற்பினாள்', 'அருமழை தரல் வேண்டில் தருத்திற்கும் பெருமையளே'

என்று கலித்தொகைப் பாக்களில் வரும் (16, 39) தொடர்களின் கருத்தும் ஒன்றுபடல் காண்க.

2. தடுத்தாட்கொண்ட புராணத்துள் காமநோயால் வருந்திய பரவையார் கூறிய 'பொறையும் நிறையும் இறையும் (சிறிதளவும்) தரியா' என்ற (செ. 176) தொடரின் கருத்து,

'பொறையென் வரைத்தன்றிப் பூநுதல் ஈத்த நிறையழி காம நோய்'

என்ற கலித்தொகைப் பாவின் (138) அடிகளின் கருத்தும் ஒன்றுபடல் காணத்தக்கது.

திருக்குறள்

சேக்கிழார் ஆண்டுள்ள திருக்குறள் கருத்துகள் ஏறத்தாழ 50-க்கு மேற்பட்டவை என்னலாம்.[2] அவற்றுள் இங்கு மாதிரிக்குச் சில காட்டப்பெறும்.

1 அப்பரை நேரே கண்டு பழகாதிருந்தும் அப்பூதியடிகள் அவரிடம் பெருமதிப்புக் கொண்டு அவரையே எப்பொழுதும் நினைந்திருந்தனர் என்பதைச் சேக்கிழார்,

'காண்டலைகமை இன்றியுமுன் கலந்தபெருங் கேண்மையினார்'

(செ. 203) எனக் கூறுதல்,

---

[2] Tamil Polil, Vol. 8, pp. 387—398, 401—413.

'புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்'

என்ற குறட் கருத்தே அன்றோ?

2. சுந்தரர் சங்கிலியாருடன் புதுமணம் துய்த்த நிலையைச் சேக்கிழார், 'கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந் திருந்தார் காதலினால்' என்று (ஏயர்கோன், 267) கூறியிருத்தல்,

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள'

என்ற குறளைப் படித்தன்றோ?

3. "செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக"
"இயற்பகை முனிவா ஓலம் ஈண்டுநீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் என்றான்
மயக்கறு மறைஓ லிட்டு மாலயன் தேட நின்றான்"

என்ற பெரிய புராணச் (இயற் பகையார்-28, 29-ஆம்) செய்யுள் அடிகளின் கருத்தும்,

"செயற்கரிய செய்வார் பெரியர், சிறியர்
செயற்கரிய செய்கலா தார்"

என்ற குறட்பாவின் அடிக் கருத்தும் ஒத்து மிளிர்தல் காண்க.

4. "யானே இனிஇந் நிரைமேய்ப்பன்
என்றார் அஞ்சி இடைமகனும்
தானேர் இறைஞ்சி விட்டகன்றான்
தாமும் மறையோர் இசைவினால்
ஆனே நெருங்கும் பேராயம்
அளிப்பா ராகிப் பைங்கூழ்க்கு
வானே என்ன நிரைகாக்க
வந்தார் தெய்வ மறைச்சிறுவர்"

(சண்டேசுரர்-24) என்ற பெரிய புராணப் பாடலின் அடிப்பொருண்மையும்,

"விசும்பிற் றுளிவீழின் அல்லால்மற் றங்கே
பசும்புற் றலைகாண் பரிது"

என்ற குறளின் பொருட் சிறப்பும் ஒத்திருத்தல் இன்பம் பயப்பதாம்.

5. "தாழுஞ்செய லின்றொரு மன்னவன் தாங்க வேண்டும்
கூழுந்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்
சூழும் படை மன்னவன் தோளிணைக் காவ லின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையகம் என்று சொன்னார்."

(மூர்த்தியார்-28) என்ற சேக்கிழார் பெருமான் கருத்தும்,

"படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு"

என்ற வள்ளுவப் பெருந் தகையார் கருத்தும் ஒன்று படல் காணத்தக்கது.

6. "ஆறு சடைமேல் அணிந்தருளும்
அண்ணல் வைத்த படிக்காசால்
ஈறிலாத பொருளுடைய இருவ
ருடைய திருமடங்கள்
சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந்
துண்ண உண்ணத் தொலையாதே
ஏறு பெருகும் புவிபோற்ற
இன்புற் றிருக்கும் அந்நாளில்"

(நாவுக்கரசர்-261) என்ற பெரிய புராணப் பாடல் கருத்தும்,

"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்ற குறட் கருத்தும் அறிஞர்க்கு இன்பம் தரும் ஒப்புமையாம்.

## பட்டினப்பாலை

*சண்டேசர் புராணத்தில் காவிரியாற்றுச் சிறப்பு, 'பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யா தளிக்கும் புனல் நாடு' என்று (செ. 1) சேக்கிழார் பாராட்டி யிருத்தலையும்,*

*"வான்பொய்ப்பினும் தான்பொய்யா மலைத்தலைய கடற்காவிரி'*

*என வரும் பட்டினப்பாலை அடிகளை (5 & 6) யும் நோக்குக.*

## மதுரைக் காஞ்சி

*மானக்கஞ்சாறர் புராணத்தில் 'கஞ்சாறு' என்ற நகரச் சிறப்புக் கூறுகையில் வரும்*

*'புகல் முழவம் கலைசாறு மிடைவீதி'*

*என்ற (செ. 6) தொடர்ப் பொருள், மதுரைக் காஞ்சியில் வரும்*

*'முழவிமிழும் அகலாங்கண்*
*விழவுநின்ற வியன்மறுகில்'*

*என்ற (வரி 327-8) வரிப் பொருளுடன் ஒன்றுபடல் காண்க.*

## சிலப்பதிகாரம்

*பெரிய புராணத்துள் சிறப்பாக இசை பற்றிவரும் இடங்கள் அனைத்தும் சிலப்பதிகாரம் - அரங்கேற்று காதை அடிகளுடனும் அவற்றுக்கு அடியார்க்கு நல்லார் காட்டும் மேற்கோள் நூற் பகுதிகளுடனும் ஒத்துவருதல் வியக்கத்தக்கது. இதனால் இவர் சிலப்பதிகாரத்தை நல்ல முறையிற் படித்தவர் என்பது புலனாகும். இஃதன்றி வேறு பல இடங்களும் உண்டு. அவற்றுள் இரண்டு காண்க.*

*1. கண்ணப்பர் புராணத்தில் (செ. 30) கண்ணப்ப ரது கன்னிவேட்டை விழாவிற்காக வந்த வேட்டுவச்*

சிற்றரசர் குறிஞ்சி நிலப் பொருள்களை எடுத்துவந்து தம் அரசனுக்குக் காணிக்கையாகத் தந்தனர் என்ற செய்தியும்,

சிலப்பதிகாரம்-காட்சிக் காதையில் செங்குட்டுவனைக் காணவந்த வேட்டுவக் குடிகள் குறிஞ்சி நிலப் பொருள் களைக் கொண்டு வந்தனர் (வரிகள் 37-55) என்ற செய்தி யும் ஒன்றுபட்டனவாகும்.

2. கரிகாலன் இமயம் சென்று புலிப்பொறி பொறித்து மீண்ட செய்தியைச் சேக்கிழார் திருக்குறிப் புத் தொண்டர் புராணத்தி (செ. 85)லும், புகழ்ச் சோழர் புராணத்தி (செ. 1) லும் கூறியுள்ளது, சிலப்பதிகாரம் இந்திரவிழவூர் எடுத்த காதை (வரி. 17, 95-98) அடிகளுக் கும் அவற்றின் உரைக்கும் பொருத்தமாதல் காணத் தக்கது.

மணிமேகலை

1. நாட்டுச் சிறப்பில் (செ. 2) அகத்திய முனிவன் கமண்டலத்தினின்று கவிழ்ந்த நீரே காவிரியாறாகப் பெருக்கெடுத்தது என்ற சேக்கிழார்கூற்றும்,

'அமர முனிவன் அகத்தியன் தனது
கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை'

என்ற மணிமேகலை அடிகளும் (பதிகம்-வரி 11 & 12) ஒன்றேயன்றோ?

2. தடுத்தாட்கொண்ட புராணத் (செ. 174) தொடராகிய "இலவயிதழ்ச் செந்துவர்வாய்" என்பதும், 'இலவிதழ்ச் செவ்வாய் காணாயோ நீ' எனவரும் மணிமேகலைத் தொடரும் (காதை 20, வரி 51) பொருளிலும் சொல்லிலும் ஒன்றுபடல் காண்க.

3. "ஐம்படைச் சதங்கை சாத்தி"

எனவரும் பெரிய புராணச் செய்யுள் தொடரும் (தடுத் தாட்......4).

"அமளித் துஞ்சும் ஐம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்"

எனவரும் மணிமேகலை (துயில் எழுப்பிய காதை, அடி 56-57) அடிகளும் ஒப்பு நோக்கத் தக்கன.

4. "மங்கையர் வதன சீத மதிஇரு மருங்கும் ஓடிச்
சேங்கயல் குழைகள் நாடு.........."

எனவரும் (தடுத்தாட்கொண்ட புராணச் செய்யுள் 1) அடிகளை,

"செங்கயல் நெடுங்கண் செவிமருங் கோடி"

எனவரும் மணிமேகலை (பளிக்கறை......, வரி 101) அடியுடன் ஒப்பு நோக்குக.

5. "என்றுரைத்த சாரிபுத்தன் எதிர்வந் தேற்க
இருந்தவத்துப் பெருந்தன்மை அன்பர் தாமும்
'நன்றுமது தலைவன்தான் பெற்ற தென்று
நாட்டுகின்ற முத்திதான் யாவது?' என்றார்;
'நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை
நேர்நின்ற ஞானவகை நிகழ்ந்த ஐந்தும்
ஒன்றியகந் தத்தவிவே முத்தி' என்ன
உரைசெய்தான் பிடகத்தின் உணர்வு மிக்கான்"

எனவரும் பாவின் பின் இரண்டடிகள் (சம்பந்தர் புராணம் 916),

"உருவு நுகர்ச்சி குறிப்பே பாவனை
உள்ள அறிவினை ஐங்கந்தம் ஆவன"

எனவரும் மணிமேகலை (காதை 30, வரி. 189-190) அடிகளோடு ஒன்றுபடல் காண்க.

## சிந்தாமணி

சேக்கிழார் சிந்தாமணியை நன்றாகப் படித்துத் துய்த்தவர் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம். இடமஞ்சிச் சில காட்டுதும்.

1. திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் (செ. 26) வயற் சிறப்பைக் கூறும் இடத்தில், பசிய வயல்களுக்கிடையில் உள்ள தாமரை மலர்கள்மேல் சங்குகள் இருக்கும் தோற்றம்-ஊர்கோளால் (பரிவேடம்) சூழப்பட்ட மதியின் தோற்றத்தை ஒத்திருந்தது' என்று சேக்கிழார் குறித்தார். இந்த உவமையைச் சிந்தாமணி ஆசிரியர்,

"கட்டழற் கதிரை ஊர்கோள்
வளைத்தவா வளைத்துக் கொண்டார்'

என்று (1136) ஆண்டிருத்தல் காண்க.

2. கண்ணப்பர் சிவனை விட்டு நீங்காமைக்கு, நாணன் (செ. 116),

'வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான்'

என்று கூறிய உடும்பைப் பற்றிய உவமையே, சிந்தாமணியில் (செ. 2887),

'தணக்கிறப் பறித்த போதும் தானனை விடுத்தல் செல்லா
நிணப்புடை உடும்பன் னாரை'

என்று கூறப்பட்டிருத்தல் காண்க.

3. "சாலிநீள் வயலின் ஓங்கித்
தந்நிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக்
கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு
சுருள்விரித் தாணுக் கன்பர்
ஆயின சிந்தை போல
அலர்ந்தன கதிர்கள் எல்லாம்."

(பெ. பு. நாட்டுச் சிறப்பு, செ. 21) என்ற சேக்கிழார் பாடல்,

"சொல்லரும் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்

செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே''

என்ற சிந்தாமணிப் பாடலின் (53) எதிரொலி யன்றோ?

4. "மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருதம்"

என்பது பெரிய புராணச் செய்யுள் அடி (திருக்குறிப்பு ...10.) இத்துடன், "கிளிவளர்பூ மருதணிந்து" என்ற சிந்தாமணி (செ. 64)த் தொடரை ஒப்புநோக்குக.

5. "கற்பகப்பூந் தளிரடிபோய் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடும் கைபெயரப்
பொற்புறுமங் கையின்வழிப் பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி ஆடுவபோல் ஆடுவார்''

என்ற (அப்பர்-420) பெரிய புராணப் பாடற் குறிப்பு,

"மாணிழை வளைக்கை தம்மால்
வட்டணை போக்கு கின்றள்'' (1264)
"கார்க்கோசி கொம்பு போலப்
போந்துகைத தலங்கள் காட்டி''

என்ற சிந்தாமணித் தொடர்களுடன் ஒப்புநோக்குக.

6. "யாழிலெழும் ஓசையுடன் இருவர்மிடற் றிசைஒன்றி''

எனவரும் பெரிய புராணக் (சம்பந்தர்...136) கருத்தும்,

"இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்தவள் பாடி னளோ
நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ என்று ஐயந்தார்''
(செ. 662)

'வீணைச் சுகிர்புரி நரம்பும் நம்பி
ஊழ்மணி மிடறும் ஒன்றாய்ப் பணிசெய்த வாறு'' (செ. 733)

எனவரும் சிந்தாமணி அடிகள் கருத்தும் ஒப்பு நோக்கிச் சுவைக்கத் தக்கன அல்லவா?

## தொல்காப்பியம்

சேக்கிழார் தொல்காப்பியத்தை நன்றாகப் படித்தவர் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம்.

1. தொல்காப்பியம் உவமவியல் 11-ஆம் சூத்திரத்தில் வரும் 'பல்குறிப்பினவே' என்ற மிகையை இளம்பூரணர் விளக்கி "'அந்து' என்பதும் உவமவுருபாக வரும்" எனக் கூறி, அதற்குக் கலித்தொகை 14-ஆம் செய்யுளில் உள்ள, 'துணைமலர் எழில்நீலத் தேந்தெழில் மலருண்கண்' என்ற அடியில் வரும் 'அத்து' என்பது 'போல' என்ற பொருளில் வந்த உவமை வுருபு என்றார். சேக்கிழார்,

'செய்யகோல் அபயன் திருமனத் தோங்கும்
திருக்கயி லாயநீள் சிலம்பு'

என்று திருமலைச் சிறப்பினைக் கூறும் இடத்தில் (செ.12) 'அத்து' என்பதை உவமவுருபாக அமைத்துள்ள நயம் பாராட்டற் பாலது. இளம்பூரணர் ஏறத்தாழக் கி. பி. 11-ஆம் நூற்றாண்டினர் என்பர் அறிஞர். அது கோடற் பாலதாயின், சேக்கிழார் தொல்காப்பியத்தையும் அதற் குள்ள இளம்பூரணர் உரையையும் நுட்பமாகப் படித்த வர் என்று கொள்ளலாம்.

2. "மாயோன் மேய காடுறை உலகம்" என்பது தொல் காப்பியச் சூத்திர வரி (அகத்திணை இயல் சூ. 5). இக் கருத்தினைச் சேக்கிழார் திருக் குறிப்புத் தொண்டர் புரா ணத்தில் (செ. 18),

'............ முல்லையின் தெய்வமென் றருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்'

என்று விளக்கியிருத்தல் காண்க. இங்கு 'அருந்தமிழ்' என்பது தொல்காப்பியம் என்பதனையாதல் இறையனார் களவியலாதல் குறிப்பதாகலாம்.

## இறையனார் களவியல் உரை

இதன் காலம் கி. பி. 7-ஆம் நூற்றாண்டென்பது அறிஞர் கொள்கை; சிலர் பிற்பட்டது என்பர். அஃது எங்ஙனமாயினும், இது சேக்கிழார்க்கு முற்பட்டது என்

பதை அனைவரும் ஒப்புவர். இந்நூலைச் சேக்கிழார் அழுத்தமாகப் படித்தவர் என்பது நன்கு தெரிகிறது.

1. சடங்கவி சிவாசாரியார், சுந்தரர் குலம் முதலியவற்றை ஆராய்ந்து,

'ஒத்த பண்பினால் அன்பு நேர்ந்தார்'

என்பது கூறப்பட்டுள்ளது (தடுத்தாட். செ. 8). இதனுடன், 'இவனும் பதினாறாட்டைப் பிராயத்தனாய் இவளும் பன்னீராட்டைப் பிராயத்தளாய் ஒத்த பண்பும் ஒத்த நலனும் ஒத்த அன்பும் ஒத்த செல்வமும் ஒத்த கல்வியும் உடையவராய் ..... ..' எனவரும் களவியல் உரை (சூ. 1) ஒப்பு நோக்கத்தக்கது.

2. சுந்தரரை முதன்முதல் கண்ட பரவையார்க்கு, 'மனத்தில் அடக்க முடியாத—இதற்குமுன் அநுபவத்தில் வாராத ஒரு வேட்கை (புதிய விருப்பம்) தான் கைக்கொண்டு ஒழுகிய நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்ற பெண்மைக் குணங்கள் நான்கினையும் அடக்கி மேலே எழுந்தது' என்று சேக்கிழார் (தடுத்தாட்-143) கூறியுள்ளார். இக்கருத்து,

"வேட்கை என்பது என்னோ வெனின், ஒருவரை ஒருவர் இன்றியமையாமை. அவ்வின்றியமையாது நின்ற வேட்கை எல்லா உணர்வினையும் நீக்கித் தானேயாய் நாண் வழிக் காசுபோலவும் நீர்வழி மிதவை போலவும் பான்மை வழிக் கூடி இருவர் உயிரையும் புணர்விக்கும்......... நாணம் முதலிய நான்கும் புனல் ஓடு வழியிற் புல் சாய்ந்தாற்போல வேட்கையால் மீதூரப்பட்டுச் சாய்ந்து கிடப்பன," என்ற களவியல் உரை (சூ, 2)யிற் காண்க.

# சமய நூற் புலமை

## திருமுறைகள் 1-7

சேக்கிழார் முதல் ஏழு திருமுறைகளையும் அழுத்தந் திருத்தமாகப் படித்து இன்பப்பட்டவர் என்பது அவர் கூறியுள்ள மூவர் புராணங்களிலிருந்து நன்குணரலாம். சேக்கிழார் அத்திருப்பதிகங்களைத் தம் புராணத்தில் கையாண்டுள்ள சில முறைகளைக் காண்போம்.

*1.* பல இடங்களில் பதிக முதற்குறிப்பே தரப்பட்டுள்ளது.

(1) "பித்தாபிறை சூடி'எனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல கெல்லாம்உய எடுத்தார்."

(2) ' " மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும்' என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால்
குலவு திருப்பதி கங்கள்"

(3) "அருவிகண் வார்வுறப் பாடலுற்றார்
'அங்கமும் வேதமும்' என்றெடுத்து" [3]

*2.* சில இடங்களில் பதிகத்தின் முதலும் இறுதியும் குறிக்கப்பட்டிருக்கும்.

(1) " 'ஒன்றனு மாய்எனக் கெந்தையு
மாகி' எனவெடுத்துத்
' தோன்றத் துணையாய் இருந்தனன்
தன்னடி யோங்கட் கென்று

---

[3] தடுத்தாட்கொண்ட புராணம், செ. 74; திருநாவுக்கரசர் புராணம், செ. 384; சம்பந்தர் புராணம், செ. 486.

வான்தான் புனற்கங்கை வார்சடை
யானைமற் றெவ்வுயிர்க்கும்
சான்றாம் ஒருவனைத் தண்டமிழ்
மாலைகள் சாத்தினரே.''

(2) '' 'பந்தனாய்ப் பாடமாட்டேன்'
என்றுமுன் எடுத்துப் பண்ணால்
'அத்தாவுன் ஆடல் காண்பான்'
அடியனேன் வந்த வாறென்'(று)
இத்திறம் போற்றி நின்றே
இன்தமிழ் மாலை பாடிக்
கைத்திருத் தொண்டு செய்யும்
காதலிற் பணிந்து போந்தார்.''

(3) ''செம்மைபெற எடுத்ததிருத்
தோடுடைய செவியன் எனும்
மெய்மைமொழித் திருப்பதிகம்
பிரமபுரம் மேவினார்
தம்மைஅடை யாளங்க
ளுடன்சாற்றித் தாதையார்க்(கு)
எம்மைஇது செய்தபிரான்
'இவனன்றே' எனஇசைத்தார்.''[4]

**3. நாயன்மார் பதிகச் செய்யுளே புராணச் செய்யுளில் அமைக்கப்பட்டுள்ளது.**

(1) ''செய்யமா மணிஒளிசூழ் திருமுன்றின்
முன்தேவா சிரியன் சார்ந்து,
'கோயுலா மலர்ச்சோலைக்
குயில்கூவ மயில்ஆலும் ஆரூரரைக்

---

[4] அப்பர் புராணம், செ. 134, 169; சம்பந்தர் புராணம் செ. 76.

கையினல் தொழாதொழிந்து கனியிருக்கக்
காய்கவர்ந்த கள்வ னேன்' என்
றெய்தரிய கையறவால் திருப்பதிகம்
அருள்செய்தங் கிருந்தார் அன்றே."

(2) "சடையானை எவ்வுயிர்க்கும் தாயா னானைச்
சங்கரனைச் சசிகண்ட மவுலி யானை
விடையானை வேதியனை வெண்ணீற் றானை
விரவாதார் புரமூன்றும் எரியச் செற்ற
படையானைப் பங்கயத்து மேவி னானும்
பாம்பணையில் துயின்றானும் பரவும் கோலம்
உடையானை 'உடையானே தகுமோ இந்த
ஒள்ளிழையாள் உள்மெலிவென்' றெடுத்துப்
[பாட."

(3) " 'மீளா அடிமை' எனஎடுத்து
மிக்க தேவர் குலமெல்லாம்
மாளா மேறஞ் சுண்டருளி
மன்னி இருந்த பெருமானை
'தாளா தரிக்கும் மெய்யடியார்
தமக்காம் இடர்நீர் தரியீர்' என்(று)
ஆளாந் திருத்தோ ழமைதந்
றத்தால் அஞ்சொற் பதிகம் பாடினார்." [5]

4. (a) பதிகத்தின் கருத்துப் பல பாக்களில் விளக்கப் பட்டிருக்கும். சம்பந்தர் 'தோடுடைய' என்று தொடங் கிப் பாடிய முதற் பதிகத்தின் கருத்தைச் சேக்கிழார் பல பாக்களில் விளக்கிக் கூறல் காண்க:

(1) "எல்லையிலா மறைமுதல்மெய்
யுடனெடுத்த எழுதுமறை
மல்லல்நெடுந் தமிழாலிம்
மாநிலத்தோரக் குரைசிறப்பப்
பல்லுயிருங் களிகூரத்
தம்பாடல் பரமர்பால்
செல்லுமுறை பெறுவதற்குத்
திருச்செவியைச் சிறப்பித்து,

[5] Ibid. செ. 224; சம்பந்தர் புராணம், செ. 482; ஏயர்கோன் புராணம், செ. 209.

(2) " செம்மைபெற எடுத்ததிருத்
'தோடுடைய செவியன்' எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம்
பிரமபுரம் மேவினர்
தம்மைஅடை யாளங்க
ளுடன்சாற்றித் தாதையார்க்
'கெம்மையிது செய்தபிரான்
இவனன்றே' எனஇசைத்தார்."

(3) "மண்ணுலகில் வாழ்வார்கள்
பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை
கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன்
எடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த
ஆக்கப்பா டருள்செய்தார்."

(4) "தொழுவார்க்கே அருளுவது
சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே
மாலாய மாலயனும்
இழிவாகு கருவிலங்கும்
பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந்
துதித்துய்ந்த படிவிரித்தார்.

(5) "வேதகா ரணராய
வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார்
தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலா சமண்கையர்
புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே எனமொழிந்தார்
எங்கள்பிரான் சம்பந்தர்."[6]

---

[6] சம்பந்தர் புராணம், செ. 75-79.

(b) தாம் இருந்த மடத்திற்குச் சமணர் வைத்த தீயைச் சம்பந்தர் 'பையவே சென்று பாண்டியற்காக' என்று ஏவிய பொழுது 'பையவே' என்று குறித்தமைக்குச் சேக்கிழார் காரணங் காட்டல் படித்தின்புறத்தக்கது:

"பாண்டிமா தேவியார் தமது பொற்பில்
பயிலுநெடு மங்கலநாண் பாது காத்தும்,
ஆண்டகையார் குலச்சிறையார் அன்பி னாலும்
அரசன்பால் அபராத முறுத லாலும்
மீண்டுசிவ நெறியடையும் விதியி னாலும்
வெண்ணீறு வெப்பகலப் பகலே வேந்தன்
தீண்டியிடப் பேறுடையன் ஆத லாலும்
தீப்பிணியைப் 'பையவே செல்க' என்றார்".[7]

**5.** (a) சேக்கிழார், நாயன்மார் பதிக வகைகளை அப்படியே தம் பாக்களில் வைத்துப் பாடியுள்ளார். சான்றாக, 'அப்பர் திருப்பூந்துருத்தி மடத்தில் தங்கி இருந்தபொழுது (1) பல்வகைத் தாண்டகம், (2) பரவும் தனித்தாண்டகம், (3) அடைவு திருத்தாண்டகம், (4) திரு அங்கமாலை முதலியவற்றைப் பாடினார்' என்று சேக்கிழார் ஒரே பாட்டில் இவ்வகைகளை அடக்கிக் கூறியிருத்தல் காண்க. [8]

(b) சம்பந்தர் அப்பரை முதன்முதல் சீகாழியிற் சந்தித்துத் தங்கியிருந்த பொழுது பலவகைப் பதிகங்கள் பாடினார் என்று சேக்கிழார் கூறியுள்ளது காண்க.

(1) "செந்தமிழ் மாலை விகற்பச்
செய்யுட்க ளான்மொழி மாற்றும்
வந்தசொற் சீர்மாலை மாற்றும்
வழிமொழி எல்லா மடக்கும்
சந்த இயமகம் ஏகபாதம்
தமிழி ருக்குக்குறள் சாத்தி
எந்தைக் கெழுகூற் றிருக்கை
ஈரடி ஈரடி வைப்பு.

---

7 Ibid. செ. 705.

8 அப்பர் புராணம், செ. 390.

(2) "நாலடி மேல்வைப்பு மேன்மை
நடையின் முடுகுமி ராகம்
சால்பினில் சக்கரம் ஆதி
விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல இலக்கிய மாக
எல்லாப் பொருள்களும் முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப்
பாடினார் ஞானசம் பந்தர்." [8a]

6. நாயன்மார் பதிகச் சந்தத்திலேயே அப்பதிகங்களைக் குறிக்கும் இடங்களில் சேக்கிழார் பாக்களும் அமைந்திருத்தல் இன்பமூட்டுவதாகும்.

(1) 'பித்தா பிறைசூடி' என்ற பதிகத்தைச் சுந்தரர் பாடினார் என்பதைக் கூறும் பெரிய புராணச் செய்யுட்கள் இந்தளப் பண்ணில் அமைந்திருத்தல் படித்தின்புறத் தக்கது:

(i) "கொத்தார்மலர்க் குழலாளொரு
கூறாய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ்
வியன்நாவலர் பெருமான்
'பித்தாபிறை சூடி'எனப்
பெரிதாம்திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல
கெல்லாம்உய எடுத்தார்"

(ii) "முறையால்வரு மதுரத்துடன்
மொழிஇந்தள முதலில்
குறையாநிலை மும்மைப்படி
கூடுங்கிழ மையினால்

[8a] சம்பந்தர் புராணம், செ. 276-277.

நிறைபாணியின் இசைகோள்புணர்
நீடும்புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன்
எல்லாம்நிகர் இல்லான்.'' [9]

(2) அப்பர் திருவையாற்றைத் தரிசிக்கையில் பாடிய "மாதர்ப் பிறைக் கண்ணி" என்ற திருப்பதிகத்தைக் குறிக்கையில் சேக்கிழார் அதே சந்தத்தில் செய்யுள் செய் திருத்தல் படித்துச் சுவைக்கத் தக்கது.

(i) ' ''மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும்' என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால்
குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வரை யாற்றில்
விரவுஞ் சராசரம் எல்லாம்
காதல் துணையொடும் கூடக்
கண்டேன்' எனப்பாடி நின்றார்.

(ii) ''கண்டு தொழுது வணங்கிக்
கண்ணுத லார்தமைப் போற்றிக
கொண்ட திருத்தாண்ட கங்கள்
குறுந்தொகை நேரிசை அன்பில்
மண்டு விருத்தங்கள் பாடி
வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்திரு ஐயா
றமர்ந்தனர் நாவுக் கரசர்.'' [9a]

7. நாயன்மார் பாடலைக் கவி கூற்றாக அங்கங்கே அமைக்கும் வன்மையும் சேக்கிழார்க்கு உண்டு. சான்றாக ஒன்று காண்க. நமிநந்தி யடிகள் சிறப்பை அப்பர் திருவாரூர்ப் பதிகத்திற் பாடியுள்ளார்.

---

[9] தடுத்தாட்கொண்ட புராணம், செ. 74-75.

[9a] அப்பர் புராணம், செ. 384-5

"ஆராய்ந் தடித்தொண்டர் ஆணிப்பொன்
ஆரூர் அகத்தடக்கிப்
பாரூர் பரிப்பந்தம் பங்குனி
உத்திரம் பாற்படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதன்
அடித்தொண்டன் நம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை
நீணு டறியுமன்றே.' [10]

இதனை நினைவிற்கொண்டு சேக்கிழார் நமிநந்தி யடிகள் புராணத்தில்,

"நீறு புனைவார் அடியார்க்கு
நெடுநாள் நியதி யாகவே
வேறு வேறு வேண்டுவன
எல்லாம் செய்து மேவுதலால்
ஏறு சிறப்பின் மணிப்புற்றில்
இருந்தார் தொண்டர்க் காணியெனும்
பேறு திருநாவுக் கரசர்
விளம்பப் பெற்ற பெருமையினர்." [10a]

8. சேக்கிழார் சில இடங்களில் தேவாரப் பதிகங்களின் உட்குறிப்பை எடுத்துக் காட்டுவர்:

(1) "கரிய கண்டர்தங் கோயிலை
வலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியும் உள்ளத்தர் உள்ளனைந்
திறைவர்தம் பூங்கழல் இணைபோற்றி
அரிய செய்கையில் அவனியில்
விழுந்தெழுந் தலைப்புறம் மனைவாழ்க்கை
சரிய வேதலைக் குத்தலை
மாலை'என் றெடுத்தனர் தமிழ்மாலை."

---

[10] நான்காந் திருமுறை, 102-திருவாரூர்ப் பதிகம், 2.
[10a] நமிநந்தியடிகள் புராணம், செ-31.

"எடுத்த அத்திருப் பதிகத்தின் உட்குறிப்(பு)
'இவ்வுலகினிற் பாசம்
அடுத்த வாழ்க்கையை அறுத்திட
வேண்டும்' என் றன்பரன் பினிற்பாடக்
கடுத்த தும்பிய கண்டர்தம்
கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்
தடுத்த செய்கைதான் முடிந்திடத்
தங்கழற் சார்பதந் தளிக்கின்றார்." [10b]

9. தேவாரத்திற்கு உரை காண்பதற்குச் சிறந்த துணையாகவுள்ளது பெரிய புராணம். திருஞான சம்பந்தர் தம் பதிகங்கள் ஒவ்வொன்றிலும் இராவணன் கயிலையை எடுக்க முயன்று நசுக்குண்டு சாமம் ஓதி உய்ந்தது, அரியும் அயனும் தம்முள் தருக்கி அனற் பிழம்பின் அடிமுடி காணாது தோற்றது, சமணர் புத்தர் அவமொழி கூறி அவநெறி நிற்பது, தேவாரம் அரனடியில் ஆன்மாவைச் சேர்ப்பது ஆகிய செய்திகளை முறையே 8, 9, 10, 11-ஆம் பாசுரங்களில் வைத்தோதுவதின் உட்கருத்தைச் சேக்கிழார் மிக்க அழகாக, "மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும்", "தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான்", "சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும் ஏதமே" என்று கூறுகிறார். [10c] ஆற்றில் எதிர்சென்ற பதிகத்தின் பொருளை மிக்க விரிவாகச் சேக்கிழார் கூறல் கவனிக்கத்தக்கது [10d] திருவாலங்காட்டுப் பதிகத்தின் முதற்பாட்டின் முதற் பகுதியிற் கூறப்பட்டுள்ள செய்தி பெரிய புராணத்தின் துணைக்கொண்டல்லது

---

[10b] வெள்ளானைச் சருக்கம், செ. 29-30.

[10c] சம்பந்தர் புராணம், செ.77-79. [10d] Ibid. செ.821-843.

விளங்காது. காரைக்கால் அம்மையார் தலையாலே நடந்து சென்ற தலத்தைத் தாம் மிதிப்பதற்கு அஞ்சித் திருஞான சம்பந்தர் திருவாலங்காட்டின் எல்லைக்கு வெளியே தங்கினர். அவரது தூக்கத்தில்-கனவில் ஆலங்காட்டப்பன் தோன்றி, "நம்மை அயர்த்தனையோ பாடுதற்கு?" என்று அருள் செய்தான். இவ்வாறு பெரிய புராணத்துட் கூறப்படுவதை அறிந்தாலன்றி இத்தலத் தேவாரத்துட் காணப்படும் "துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய், நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்" என்ற தொடரின் பொருள் விளங்காது [10e]

திருவாசகம்

சேக்கிழார் திருவாசகத்தில் நன்கு பயின்று அதனைப் பாராட்டியவர் என்பதற்குப் பல சான்றுகள் அவர் நூலிற் காண்கின்றன.

1. சண்டேசர் வரலாற்றைப் பற்றி இரண்டு செய்யுட்களில் (திருத்தோள் நோக்கம்-6, 7) கூறிச் 'சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும் அத்தன்...' எனக் கூறியதைச் சேக்கிழார் தமது சண்டேசர் புராணத்தில் (செ. 59)

"....................................ஈறிலாதார் தமக்கன்பு
தந்த அடியார் செய்தனவே தவமாம் அன்றோ சாற்றுங்கால்"

என்று ஆண்டிருத்தல் காணலாம்.

2. சிந்தனை உனக்காக்கி, என்கண்ணிணை நின் தாமரை போன்ற பாதங்களுக்காக்கி, என் வந்தனையும் அப்பாதங்கட்கே ஆக்கி, வாக்கினை உன் மணிவார்த்தைக் காக்கி...'[11] என வருவது திருவாசகம். இதன் கருத்து

---

10e மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு—திருமுறைத் திருநாள் வெளியீடு (தருமபுர ஆதீனம்), pp. 229-230.

11 Tirucatakam, S. 26.

முழுவதுட் நேச நாயனர் புராணத்துச் செய்யுளில் [12] அமைந்திருத்தல் காணலாம். இங்ஙனம் சொல்லும் பொருளும் ஒன்றுபடும் இடங்கள் பல ஆகும். [13]

திருமந்திரம்

இதனையும் சேக்கிழார் நன்கு படித்தவர் என்பதற்குச் சான்றுகள் பல காட்டலாம்.

1. தில்லைவாழ் அந்தணர் புராணத்தில் (செ. 1) இறைவனது இலக்கணம் கூறும்,

"ஆதியாய் நடுவு மாகி அளவிலா அளவு மாகிச்
சோதியாய் உணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகி......"

என வருதற்கும்,

"யாரறி வாரெங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வாரந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே"

எனவரும் திருமந்திரச் செய்யுட்கும் உள்ள பொருள் தொடர்பு காணத்தக்கது.

2. சண்டேசர்க்கு ஐந்து வயதானதும் ஞானவுணர்வு பெருகியது என்பதைச் சேக்கிழார்,

"முந்தை அறிவின தொடர்ச்சியினால்
முகைக்கு மலரின் வாசம் போல்
சிந்தை மலர உடன்மலரும்
செவ்வி உணர்வு சிறந்ததால்." [14]

என்று உவமை வாயிலாக விளக்கினர். இவ்வுவமையும் பொருளும்,

"பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" [15]

என்ற திருமந்திரத்தில் உள்ளமை காண்க.

---

[12] S. 3.
[13] Vide C. K. S. Mudaliar's 'Sekkilar', pp. 193-196.
[14] S. 13.
[15] Yogam, S. 4.

திருமூலர் வரலாறு திருமூலரது வாக்குக்கொண்டே சேக்கிழார் பாடினர் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம்.[16] விரிவஞ்சி அவை விடுக்கப்பட்டன.

## சைவ சித்தாந்தம்

சைவசித்தாந்தக் கருத்துகள் பெரிய புராணம் முழுவதும் காண்கின்றன. சான்றுகள் இரண்டு காண்க.

1. கண்ணப்பர் காளத்தி மலைமீது ஏறும்பொழுது அவரது மனமாற்றத்தை விளக்கும் செய்யுள் சைவ சித்தாந்த நுட்பங்கள் பொருந்தியதாகும். அதனில் 'ஆணையாம் சிவம்' என்பது, 'அருளாகிய சிவம்' அல்லது 'சத்தியாகிய சிவம்' எனப் பொருள்படும். இக்கருத்துச் சேக்கிழார்க்குப் பின் எழுந்த சிவஞான போதத்துட் (சூ. 2) காணலாம்

2. மானக்கஞ்சாறரது அடியார் பக்தியைக் கூறுமிடத்து, 'அவர் சிவன் அடியாரைச் சிவபெருமானாகக் கருதி வழிபட்டவர்' என்று கூறிய கருத்து,[17] சிவஞான போதத்துட் 12-ஆம் சூத்திரத்தும் அதன் உரையினும் காணத்தக்கது.

3 'சிவனடியாராதலே பெரும்பேறு'[18] என்று மானக்கஞ்சாறர் புராணத்தில் சேக்கிழார் கூறியுள்ளார்; சேக்கிழார்க்குப் பிற்பட்ட சிவஞான சித்தியார்,

> "வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
> தாழ்வெனும் தன்மை யோடு சைவமாம் சமயம் சாரும்
> ஊழ்பெறல் அரிது"[19]

என்று இதனை விளக்கிக் கூறல் காண்க.

---

16 Tirumular Puranam, S. 23; 25; 26; 27.
Tirumantram, Payiram, S. 81; 79, 727, 86: 99.

17 S. 9.

18 S. 8.

19 Sutram, 2—11.

4. அரிவாள் தாயர் புராணத்துள் (செ. 20) வரும் தாடியிடைப் பாகமான 'தூயநற் சோதி' என்ற தொடரில் உள்ள உமைபற்றிய குறிப்பு அருளைக் காட்டுவது. அருளைப் பெண்ணாகக் கூறுவது மரபு. இக்கருத்தினை,

"அருளது சத்தி யாகும் அரன்றனக் கருளை யின்றித்
தெருள்சிவ மில்லை; அந்தச் சிவமின்றிச் சக்தி இல்லை" [20]

என்ற சிவஞான சித்தியார் அடிகளிற் காண்க.

பெரிய புராணத்துட் கூறப்படும் சைவசித்தாந்தக் கருத்துகள் பிற்காலச் சிவஞான போதம் முதலிய நூல்களிற் காண்கின்றன. ஆயின், சேக்கிழார் இக்கருத்துகளை எந்நூல்களிலிருந்து கொண்டார் என்பது ஆராயத் தக்கது. 'இராச சிங்கன் (கி. பி. 685-720) சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றுபவன்' [21] என்று கல்வெட்டுக் கூறலை நோக்க, கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டுகளில் வடமொழியிலோ - தமிழிலோ சைவசித்தாந்த நூல்கள் இருந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது. அவற்றுள் திருமந்திரம் ஒன்றெனக் கொள்ளலாம. இத்தகைய சமய நூல்கள் வளமுற்று இருந்தமையாற்றான சேக்கிழார் சைவசித்தாந்தக் கருத்துகளைத் தம் நூல் முழுவதும் குறித்துப் போந்தார்.

## பல கலைப் புலமை

### இசைக்கலை

தேவார காலமுதல் பிற்காலச் சோழராட்சி முடியத் தமிழகத்தில் திருமுறைகள் பெரு வழக்கில் இருந்தன. கோவில்களில் திருப்பதிகங்கள் பண்ணோடு பாடப்பட்டு வந்தன. அதனால் தமிழிசை பற்றிய பல நூல்கள் * இருந்திருத்தல் வேண்டும் என்பது தெரிகிறது. அங்ஙனம்

---

20 Sutram, 5—9.

21 S. I. I. 1. p. 20.

* Sambandar Puranam, S. 447.

இசை பற்றிய நூல்கள் மிக்கிருந்தமையாற்றான் அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரம்-அரங்கேற்று காதைக்குச் சிறந்தவுரை எழுத முடிந்தது. அவ்விசை நூல்களைச் சேக்கிழார் படித்தவர் என்பது அவர் இசைபற்றிக் கூறும் பல பாக்களிலிருந்து நன்குணரலாம். சான்றாக இரண்டு இடங்களைக் காண்போம்.

1. இறைவனால் தடுத்து ஆட்கொள்ளப்பட்ட சுந்தரர் முதன்முதல் திருவெண்ணெய் நல்லூர்க் கோவிலில் பாடிய 'பித்தா பிறைசூடி' என்று தொடங்கும் பதிகத்தை 'இந்தளம்' என்ற பண்ணில் பாடினார் என்பதைக் கூறும் இடத்து, சேக்கிழார் விளக்கும் பண்வகை முதலியன இசைப் புலமை உடையவரே நன்குணர்ந்து இன்புறக் கூடும்.[22]

"முறையால்வரு மதுரத்துடன் மொழியிந்தளம் முதலில்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழமையினால்
நிறைபாணியின் இசைகோள்புணர் நீடும்புகழ் வகையால்
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாமநிகர் இல்லான்"

இப்பாட்டில் இசைபற்றிக் கூறப்படும் நுட்பங்களின் விளக்கம் திரு C. K. S. முதலியார் பெரிய புராணத்திற் கண்டு மகிழலாம்.[23]

2. ஆனாயர் புராணத்தில் புல்லாங்குழலைத் தேர்ந்தெடுத்துச் செய்யும் முறை.[24] அக்குழல் வைத்து ஆனாயர் பாடிய முறை[25] அக்குழல் இசையால் உலகத்து உயிர்கள் அடைந்த இன்பம்[26] என்பவற்றை மிக்க விளக்கமாகக் கூறியுள்ளதை நோக்க, சேக்கிழார் இத்துறையிற் பண்பட்ட புலமையுடையார் என்பதை நன்குணரலாம்.

---

22 S. 75.
23 C. K. S. Mudaliar's P. P., Vol. I, pp. 248—254.
24 S. 13.
25 S. 22—28.
26 S. 29—36.

(1) "முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை எழுந்தவேய்
அந்தமுதல் நாலிரண்டில் அரிந்துநரம் பறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின் அங்குலிஎண் களிலமைத்து"

(2) "முத்திரையே முதலனைத்தும் முறைத்தானம் சோதித்து
வைத்ததுளை ஆராய்ச்சி வக்கரனை வழிபோக்கி
ஒத்தநிலை உணர்ந்ததற்பின் ஒன்றுமுதல் பலமுறையாம்
அத்தகைய ஆரோசை அமரோசை களினமைத்தார்.

(3) "மாறுமுதற் பண்ணின்முன் வளர்முல்லைப் பண்ணாக்கி
ஏறியதா ரமும்உழையும் கிழமைகொள இடுந்தானம்
ஆறுலவும் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினில்நிறுத்தி,

(4) " ஆயஇசைப் புகல்நான்கின் அமைந்தபுகல் வகைஎடுத்து
மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரல்நிரையிற்
சேயவொளி இடையலைய திருவாளன் எழுத்தஞ்சும்
தூயஇசைக் கிளைகொள்ளும் துறையஞ்சின் முறைவிளைத்தார்."

## நடனக்கலை

சேக்கிழார் நடனக்கலை நுட்பத்தையும் நன்கறிந்தவர் என்பது அப்பர் புராணச் செய்யுட்களால் அறியலாம். அப்பர் திருப்புகலூரில் தம் இறுதி நாட்களைக் கழிக்கை யில் அவரது உள்ளத்தைப் பரிசோதிக்கச் சிவன் ஏவலால் தேவலோக நடன மாதர் வந்து அப்பர்முன் ஆடல்பாடல் கள் நிகழ்த்தினர் என்ற இடத்தில், அரிவையர்தம் ஆடல் பாடல் நுட்பங்கள் நன்கு விளக்கப்பட்டுள.[27]

" 'பாதங்கள் சாரியை செய்ய, கை வட்டணையோடும் பெயர, கண் கையின் வழிப் பெயர' என்ற இம்மூன்றாலும் ஆடலின் இயல்பை எல்லாம் வடித்து எடுத்துக் காட்டிய வாறுகும். கால்-கை-கண் என்ற இம்மூன்றாலும் ஒன் றித்த அகப்பொருளைக் காட்டுவதே ஆடலின் நுட்பமும்

[27] S. 417—421.

அமைதியும் ஆகும்.'' [28] இங்ஙனக் கலை நுட்பங்கள் சிலப்பதிகாரம் போன்ற பண்டை நூல்களைக் கொண்டு சேக்கிழார் அறிந்தவராதல் வேண்டும்.

### வானநூற் கலை

சம்பந்தர் திருவலஞ் சுழியில் தங்கியிருந்த பொழுது இளவேனில் முதுவேனில் ஆயிற்று என்பதைச் சேக்கிழார் கூறல் நோக்கத்தக்கது. அது, "சூரியன் மிதுனராசியிற் சேர்ந்ததால், வெங்கதிர் பரப்பினன்; அதனால் முது வேனிற் காலம் தொடக்கமாயிற்று'' என்பது. மிதுனம் இரட்டையாதலின் சேக்கிழார் அதனைத் 'துணைப்புணர் ஓரை' என்று குறித்தது, [29] அவரது வானநூற் புலமையை நன்கு உணர்த்துகிறது. இங்ஙனமே சேக்கிழார் கார்காலம், [30] பனிக்காலம், [31] இளவேனில் [32] முதலிய பற்றிக் கூறும் இடங்களில் எல்லாம் அவரது வானநூற் புலமை நன்கு விளங்கக் காணலாம்.

"மகிழ்ந்த தன்தலை வாழுமந் நாளிடை வானில்
திகழ்ந்த ஞாயிறு துணைப்புணர் ஓரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையில் நிலவுமேழ் கடல்நீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வெனில்.''
—சம்பந்தர் புராணம், செ. 384.

---

[28] C. K. S. Mudaliar's P. P. Vol. 3, p. 729.
[29] S. 384; See T. V. Mudaliar's P. P. p. 643.
[30] Anayar Purañam, S. 19.
[31] Sambandar Puranam, S. 328—330.
[32] Eyarkon Puranam, S. 270.

## மருத்துவக் கலை

சேக்கிழார், தாம் பாடிய புராணத்தில் (1) சூலை நோய், [33] (2) கண்ணோய் [34] (3) பாம்புக்கடி, [35] (4) முயலகன் என்ற நோய் [36] (5) பனிநோய், [37] (6) வெப்பு நோய் [38] என்பவற்றைத் தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார். அவர் கூறியன மருத்துவ நூல்களில் கூறப்பட்ட உண்மைகளே யாம் என்பதை விளக்கச் சில சான்றுகள் தருவோம்.

### 1. பாம்புக்கடி

அரவு தீண்டப்பட்ட அப்பூதியடிகளின் மகன் உடலில் விஷவேகம் ஏறியதைச் சேக்கிழார் கூறுகையில், 'எரி விடம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம் வேகம்' என்பதைக் குறிப்பிட்டு, 'அம்மகனுடைய பல், கண், உடல் கருகித் தீய்ந்தன; உரை குழறியது; ஆவி விடக்கொண்டு மயங்கி வீழ்ந்தான்' என்று முடித்தனர்.

"பாம்பின் விடம் இரத்த ஓட்டத்திற் கலந்து விடுகிறது; அவ்வோட்டம் கடித்த இடத்திலிருந்து இரத்தக் குழாய்களின் வழியே இரத்தாசயத்திற்குப் போய், அங்கிருந்து மீள வெளிவந்து உடம்பிற் பரவுவது ஓர் 'ஓட்டம்' ஆகும். அதற்கு ஒரு 'வேகம்' என்பது பெயர். அவ்வாறு ஒருமுறை ஓட்டம் வந்து முடிந்தால் உடம்பில் உள்ள ஏழு தாதுக்களில் ஒரு தாது வலிகெடும். இப்படி 7 முறை சுற்றிவந்தால் ஏழாம் வேகம் தலைக்கேறியதாகச் சொல்லப்படும். அப்பொழுது 7 தாதுக்களும் வலிகெடும்.

---

[33] Appar Puranam, S. 49—78, Eyarkon Puranam, S. 389—390.

[34] Kannappar Puranam, S. 176.

[35] Appudi Adigal ,, S. 25—28.

[36] Sambandar ,, S. 311—319.

[37] Ibid. S. 333—336.

[38] Ibid. S. 704, 711—713, 714—770.

பல், கண், உடல் விடத்தினால் கருகும். உணர்வு நீங்கும்'' [39] என்பது மருத்துவர் கூற்று. இனி இந்த வேகங்களின் தன்மையை ஒவ்வொன்றாகக் காண்போம்.

## முதலாம் வேகம்

விஷம் ரஸ தாதுவில் கலக்கிறது. உடனே நிகழ்வன வாய் நீர் வடிதல், வாந்திவரல், உடம்பெரிச்சல், பல எண்ணங்கள் தோன்றல், பல் அடிக்கடி கிட்டிக்கொள்ளுதல், களைப்புண்டாதல்.

## இரண்டாம் வேகம்

இரத்தம் கெடுதல், உடல் நடுங்குதல், நிறம் மாறுதல், உடல் மறத்துப்போதல், கண் இருண்டு போதல், தலை சுற்றுதல், மூர்ச்சை அடைதல்.

## மூன்றாம் வேகம்

தசை கெடுதல், அரிப்புண்டாதல், வீங்குதல், உடம்பில் தடிப்பு உண்டாதல், வட்டமான தழும்புகள் தோன்றுதல்.

## நான்காம் வேகம்

புள்ளிகள் உண்டாதல், முள்போலத் தழும்புகள் கிளம்பல், வீக்கம் உண்டாதல், மூச்சுத் திணறல், மருண்ட பார்வை.

## ஐந்தாம் வேகம்

பார்வை மழுங்கல்,

## ஆறாம் வேகம்

விக்குள் உண்டாதல்.

---

[39] C. K. S. Mudaliar's 'Sekkilar', pp. 101—102.

ஏழாம் வேகம்

உடல் முழுவதும் செயலற்று விடுதல், உடல் சில் விட்டுவிடல்.

எட்டாம் வேகம்

இறப்பு.[40]

இவற்றின் சாரம் அப்பூதி அடிகள் புராணத்துள் (செ. 25-28) தெளிவாகக் கூறப்பட்டுவிட்டது அன்றோ?

2. கண்நோய்

கண்நோய்க்கு மூலிகைகள் பிழிதல் மரபு என்று சேக்கிழார் குறித்தமை மருத்துவ முறைக்கு ஒத்ததே ஆகும். (1) நந்தியாவட்டை மலர் (Tabernaemontana Coronaria Flower), (2) தேள் கொடுக்கு இலை (Heliotropium Indicum), (3) பிரமதண்டுப் பால் (Argemone Mexicana Milk) முதலியன சிறந்த மருந்துகளாகும். இவற்றுட் பிரமதண்டுப் பாலினால்,

> ''கண்கூச்சல் கண்ணுருகல் கண்ஒழுகல் கண்ணோதல்
> கண்சிவத்தல் எல்லாம் கடிதேகும்.''

என்று மருத்துவ நூல் கூறும்.[41]

3. வெப்பு நோய்

இது வடமொழியில் 'ஆகந்துக ஜ்வரம்' எனப்படும். 'ஆகந்துகம்' என்பது திடீரென்று அடி முதலிய தாக்குவதாலும் (அடிபடுதல்) சாபம் முதலியவற்றாலும் ஓர் ரூபம் இல்லாமல் திடீரென்று உண்டாகும் ஜ்வரம்.[42] இந்த

---

[40] P. Venkataranga Kavi's 'Visha Vaidya Cintamani' (Telugu), pp. 8—9.

[41] Padarthaguna Vilakkam ed. by Kannusamy Pillai, pp. 434, 440—1, 521.

[42] Sarngadara Samhitai (Tamil), p. 38.

ஜ்வரம் நான்கு வகைப்படும். அவை (1) அபிகாத ஜ்வரம், (2) அபிஷங்க ஜ்வரம், (3) சாப ஜ்வரம், (4) அபிசார ஜ்வரம் என்பன. இவற்றுள் சாப ஜ்வரம் ரிஷிகள், ஆசாரியர், தேவதைகள் முதலியவர்களால் இடப்படும் சாபத்தினால் உண்டாவது. இது பொறுக்க முடியாத கொடிய ஜ்வரம்.[43] இது வாய் பிதற்றலும் உடல் நடுக்கமும் உண்டாக்கும்.[44]

நெடுமாறனுக்கு உண்டான வெப்பு நோய் சாப ஜ்வரமாகும். 'அது சம்பந்தரால் ஏவப்பட்டது. அஃது அரசனுக்கு உடல் நடுக்கத்தையும் கொடிய உஷ்ணத்தையும் உண்டாக்கிவிட்டது. மருத்துவப் புலவரால் அதனை ஒழிக்க முடியவில்லை. அரசன் வாய் பிதற்றலானான் ...'[45] எனவரும் சேக்கிழார் வாக்கு மேற்சொன்ன மருத்துவக் கூற்றுடன் பொருந்தி நிற்றல் காண்க.

## 4. சூலை நோய்

இது ஒருவகைக் கொடிய வயிற்றுவலி. இது, வாத-பித்த-கபங்கள் என்னும் மூன்றும் தம் நிலை மாறுவதால் உண்டாவது. இது பல துன்பங்களோடு கூடியது; சிகிச்சைக்கு வசப்படாதது. இந்நோய்க்குரிய துன்பங்கள்—வயிற்றுக் குடைச்சல், இரைச்சல், நாவரட்சி, மூர்ச்சை, பொருமல், வயிறு மந்தமாக இருத்தல், வாய் சுவையுணர்வு அற்று இருத்தல், கபம் அதிகரித்தல், பெருமூச்சு விடல், விக்குள் உண்டாதல் என்பன.[46]

இத்துன்பங்கள் சூலைநோயால் வருந்திய அப்பர்க்கு உண்டாயின என்பது அப்பர் பதிகத்தாலும் சேக்கிழார்

---

43 Ashtanga Hridaya (Tamil), pp. 394—5.

44 Madava Nidanam, (Tamil), p. 12.

45 Sam. P., S. 704, 711—713.

46 Madava Nidanam (Tamil), p. 88.

பாக்களாலும் [47] நன்குணரலாம். இந்நோயின் கொடுமை கலிக்காமர் புராணத்தாலும் அறியலாம். [48]

## 5. முயலகன் நோய்

"கொல்லிமழவன் மகள் இந்நோயால் வருந்தினள்; இது பெரும்பிணி; இது மெய்யை வருத்தியது; மூர்ச்சை யடையச் செய்தது; உற்றார் உறவினர் அக்கோர நிலையைக் கண்டு புலம்பினர்" என்று சேக்கிழார் கூறியுள்ளார். [49] இது 'குமரகண்ட வலி' என்று சிலர் கூறுவர். [50] 'இந்நோயினால் கண்ணும் வாயும் கோணும்; கையும் காலும் ஒரு பக்கம் விட்டு விட்டு வலிக்கும்; ஜ்வரம் காயும்; தலை வலிக்கும்; மூர்ச்சை காணும்' என்பர் மருத்துவ நூலார். [51] இதனினும் வேறுபட்டது முயல்வலி என்பது. இவ் வலிப்புடையார் வாய் மண்ணைக் கவ்வும்; வாயில் நுரை தள்ளும்; விழி விட்டும் சேர்ந்தும் நட்டமாய் நிற்கும்; உடல் துள்ளத்துள்ள வலிக்கும்; தோள் மார்பு பக்கமாகக் கூட்டிச் சுருக்குவிக்கும்; சோகமும் துயரமும் மிகும்; உணர்வு நீங்கும் [52] என்பது மருத்துவ நூற் கூற்று. 'முயல்வலி' என்ற இந்நோயின் பெயருக்கும் பெரிய புராணம் கூறும் 'முயலகன்' என்ற பெயருக்கும் உள்ள ஒற்றுமையும், இந்நோய் பற்றி இருநூல்களும் குறிப்பிடும் விவரங்களும் காண—சேக்கிழார் குறித்த 'முயலகன்' என்பது மருத்துவ நூல் குறிக்கும் 'முயல் வலி' யாக இருக்கலாம் என்று நினைக்க இடமுண்டு.

---

47 Appar Puranam, vv. 49—51, 57.

48 S·390.

49 Sam. P. vv. 311, 317.

50 Sekkilar, p. 100.

51 Madava Nidanam.

52 Vaidya Sara Sangraham (Tamil), p. 253.

### உடல் நூற் புலமை
(Physiology)

மூர்த்தி நாயனுர் புராணத்துள், அந்நாயனுர் தம் முழங்கையைச் சந்தனத்திற்காகப் பாறையில் தேய்த்த போது 'கட்டும் புறந் தோல்நரம் பென்பு கரைந்து தேய்ந் தன' என்று கூறப்பட்டுள்ளது கவனிக்கற்பாலது. 'உள்ளே நின்ற எலும்பு, நரம்பு, தசை, இரத்தம் முதலி யவற்றை ஒன்ருகப் பொதிந்து (மூடி) மேலே கட்டிய புறந் தோல் முதலில் தேய்ந்தது; அதனை அடுத்து நரம்பும் அதன்பின் எலும்பும் தேய்ந்தன' என்பது இதன் பொருள். இம்முறை வைப்பு உடல் நூலுக்கு இயைந்ததே யாகும். சேக்கிழாரது இவ்வுடல் நூற் புலமை அடுத்த செய்யுளி லும் காணலாம்; [53] அப்பர் புராணத்தில், அப்பர் கயிலை மலை அடிவாரத்தில் உடல் குறைந்து துன்புற்ற நிலையை விளக்குமிடத்தும் காணலாம். [54]

### நீதி நூற் புலமை

சேக்கிழார் சோழப் பெருநாட்டின் முதல் அமைச்ச ராதலின், அவர் நாட்டுச் சட்டங்களை நன்கு அறிந் திருந்தார் என்பது உறுதி. அவற்றைத் தடுத்தாட்கொண்ட புராணத்தும் கண்ணப்பர் புராணத்தும் பிற இடங்களி லும் குறித்துச் செல்லல் படித்தின்புறத் தக்கது.

### 1. தடுத்தாட்கொண்ட புராணத்தில்

*1.* ஆட்சி (Oral Evidence), *2.* ஆவணம் (Documentary Evidence), *3.* அயலார் காட்சி (circumstancial Evidence) எனவும்; *1.* படி ஓலை (copy of the document), *2.* மூல ஓலை (Original document)

---

[53] S. 20 & 21; C. K. S. Mudaliar's P. P., Vol. II, pp. 1276—' 77.

[54] S. 357—'8.

எனவும்; 1. அரண்தரு காப்பு (Safe custody of the village court), 2. கரணத்தான் (clerk of the village court), 3. மறையவர் அவையோர் (village panchayat) எனவும் கூறப்பட்டுள்ள வழக்குப் பற்றிய நுட்பமான செய்திகள் பெரும்பாலும் இந்நாள் நீதிமன்ற நடை முறைகளோடு ஒத்துவரல் காணத்தக்கது.[55] இங்ஙனம் சேக்கிழார் கூறியுள்ள செய்திகள் அவர் காலத்துச் சோழப் பெருநாட்டு நீதிமன்றங்களில் நாடோறும் கையாளப்பட்டன வாகலாம். கிழ வேதி யரை மனிதராகவே கொண்டு இவ்வழக்கினைக் காண்போமாயின், இஃது இயல்பான நீதிமன்றத்தில் தீர்க்கப்பட்ட அற்றை நாள் வழக்கு என்பது நன்கு புலனாகும்.[56]

## 2. கண்ணப்பர்

'கண்ணப்பருடன் சென்ற வேடர்கள் (செ. 86) உடுக்கைபோன்ற கால்களை யுடையனவும் மடிந்த காதுகளை யுடையனவுமான யானைக் கன்றுகளையும், சிறிய விலங்குக் குட்டிகளையும், தள்ளாடி நடந்துவரும் சூல் கொண்ட பெண் விலங்குகளையும் வேட்டையாடவில்லை' என்று சேக்கிழார் கூறியது கவனிக்கத்தக்கது. இப்பாட்டினால் வேட்டையின் நீதி முறை எடுத்துக் காட்டப்பட்டது. இது கருணையை அடிப்படையாகக் கொண்ட நீதி, தமது நீடித்த நலம் கருதி வேடர்கள் அவற்றைக் கொல்லாது விட்டனர் என்பது வெளிப்படைக் காரணம் என்னலாம். யானைகளின் பாதுகாப்புச் சட்டம் (The Elephants Preservation Act), வேட்டை விலங்குகளின் பாதுகாப்புச் சட்டம் (Games Preservation Act), விலங்குகளைக் கொடுமை செய்வதனைத் தடுக்கும் சட்டம் Prevention of cruelty to Animals Act) முதலியன

55 C. K. S. Mudaliar's 'Sekkilar', pp. 66—71.

56 K. A. N. Sastry's 'Cholas', Vol. II. Part I, p. 259.

இந்நாளிலும் அரசாங்கத்தார் விதித்துள்ளவையும் இக் கருத்தே பற்றியன. இச்சட்டங்களிலும் பெண்மான் முதலியவற்றைச் சுடலாகாதென்னும் விதி இருத்தலும் கவனிக்கத்தக்கது.[57]

## சேக்கிழார் செய்யுட் சிறப்பு

1. சேக்கிழார் பாடிய செய்யுட்கள் பொதுமக்கள் உளங்கனிய ஆதலின், எளிமையும் இனிமையும் அமைந்துள்ளன. அவை செம்பாகமானவை; ஆற்றொழுக்குப் போல அமைதியான நடை கொண்டவை. "எளிய நடை வேண்டும்" என்று கூவும் இக்காலத்தார் சேக்கிழார் செய்யுட்களைப் படித்து மகிழ்வாராக. இங்குச் சான்றாகச் சில செய்யுட்களைத் தருதும் :

(1) "உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்".

—கடவுள் வாழ்த்து.

(2) "எம்பிரான், யான்செயும் பணிஎது?" என்றனர்;
வம்புலா மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்
உம்பர்நா யகனும் 'இவ் வோடுன் பால்வைத்து
நம்பி, நீ தருகநாம் வேண்டும் போ'தென்று."

—திருநீலகண்டர் புராணம், 15.

(3) "'பன்முறை உயிர்கள் எல்லாம்
பாலித்து ஞாலங் காப்பான்
தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம்
நெறிகளில் சரித்து வாழும்

---

[57] C. K. S. Mudaliar's P. P., Vol. II, p. 926.

மன்னவை இன்றி வைகும்
மன்னுல கெண்ணுங் காலை
இன்னுயிர் இன்றி வாழும்
யாக்கையை ஒக்கும்' என்பார்."

—மூர்த்திநாயனார் புராணம், 29.

(4) "அன்பினுக் களவு காணார்
ஆனந்த வெள்ளம் மூழ்கி
என்புநெக் குருக நோக்கி
இறைஞ்சிநேர் விழுந்து நம்பர்
முன்புநிற் பதுவும் ஆற்றார்
மொழிதடு மாற வத்தி
மின்புரை சடையார் தம்மைப்
பதிகங்கள் விளம்பிப் போந்தார்."

—சம்பந்தர் புராணம், 585.

(5) "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே."

—மங்கையர்க்கரசியார் புராணம், செ. 1.

2. சேக்கிழார் பாடியுள்ள பாக்கள் எளிய நடையில் இயன்றவை; அங்கங்கே 'நிறுத்தக் குறிகள்' பெய்யப் படின் சிறு வாக்கியங்களாக அமைதலைக் காணலாம். சான்றாகச் சில காண்க.

(1) "சென்னியால் வணங்கி நின்ற
தொண்டரைச் செயிர்த்து நோக்கி,
'என்னிது மொழிந்த வாறு?
யான்வைத்த மண்ணோ டன்றிப்

பொன்னினால் அமைத்துத் தந்தாய்
ஆயினும் கொள்ளேன்; போற்ற
முன்னைநான் வைத்த ஓடே
கொண்டுவா' என்றான் முன்னோன்."
—திருநீலகண்டர் புராணம், 24.

(2) "மற்றவர் தம்மை நோக்கி,
'மானுடம் இவர்தாம் அல்லர்;
நற்பெருந் தெய்வ மாதல்
நானறிந் தகன்ற பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப்
பேரிட்டேன்; ஆத லாலே
பொற்பதம் பணிந்தேன்; நீரும்
போற்றுதல் செய்மின்' என்றான்."
—காரைக்கால் அம்மையார் புராணம், 47.

(3) "'வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் தாமன் எந்தை;
மருமகன்மற் றிவனவற்கு; மகளிர் நல்ல
இளம்பிடியார் ஓரெழுவர்; இவரில் மூத்தாள்
இவனுக்கென் றுரைசெய்தே ஏதி லானுக்(கு)
உளம்பெருகத் தனம்பெறுக கொடுத்த பின்னும்
ஒரொருவ ராகஎனை ஒழிய ஈந்தான்;
தளர்ந்தழியும் இவனுக்காத் தகவு செய்தங்(கு)
அவரைமறைத் திவன்தனையே சார்ந்து போந்தேன்.
"'மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்;
மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போல நின்றேன்;
சுற்றத்தார் எனவந்து தோன்றி என்பால்
துயரமெலாம் நீங்கஅருள் செய்தீர்' என்னக்,
கற்றவர்கள் தொழுதேத்தும் காழி வேந்தர்
கருணையினால் காரிகையாள் தனக்கு நல்கப்
பற்றியவான் அரவுவிடம் தீரு மாறு
பணைமருகற் பெருமானைப் பாட லுற்றார்."
—சம்பந்தர் புராணம், 480 - 481.

8. பல பாக்கள் சொற் சிதைவு நேராது சீர்கள் அமைந்திருத்தலைக் காணலாம்:

(1) "அப்பொழுதே அம்பலத்துள் ஆடுகின்ற
கழல்வணங்கி அருள்முன் பெற்றுப்
பொய்ப்பிறவிப் பிணியோட்டும் திருவீதி
புரண்டுவலம் கொண்டு போந்தே
எப்புவனங் களும்நிறைந்த திருப்பதியின்
எல்லையினை இறைஞ்சி ஏத்திச்
செப்பரிய பெருமையினார் திருநாரை
யூர்பணிந்து பாடிச் செல்வார்."

—அப்பர் புராணம், 179.

(2) " 'காயமும் மனமும் மாசு
கழுவுதல் செய்யார் செய்யும்
மாயமும் இந்த நோயை
வளர்ப்பதே வளர்வெண் திங்கள்
மேயவே ணியர்பால் ஞானம்
பெற்றவா விரும்பி நோக்கில்
தீயஇப் பிணியே அன்றிப்
பிறவியும் தீரும்' என்றார்."

—சம்பந்தர் புராணம், 720.

(3) "காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலம் கொண்டருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியதன் உட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடனானார்."

—சம்பந்தர் புராணம், 1253.

(4) "செந்நெல்லும் பொன்னன்ன செழும்பருப்பும் தீங்கரும்பின்
இந்நல்ல அமுதுமுதல் எண்ணில்பெரும் பலவளங்கள்
மன்னியசீர் வன்தொண்டர்க் கமுதாக வழுவாமல்
பன்னெடுநாள் பரவையார் மாளிகைக்குப் படிசமைத்தார்."

—ஏயர்கோன் புராணம், 11.

(5) "அன்பு மிக்க பெருங்கற்பின் அங்ஙகு திருவெண் காட்டம்மை
முன்பு வந்து சிறுத்தொண்டர் வரவு நோக்கி முன்னின்றே
இன்பம் பெருக மலர்ந்தமுகங் கண்டு பாத மிசைஇறைஞ்சிப்
பின்பு கணவர் முகநோக்கிப் பெருகுந் தவத்தார் செயல்வினவ"
—சிறுத்தொண்டர் புராணம், 53.

4. சில ஆசிரியர்களைப்போல் வீணுக நூலைப் பெருக்குந் தன்மை சேக்கிழாரிடம் காணல் அருமையாம். அத்தகை இடங்களுள் ஒன்றிரண்டினைக் காட்டுதும்.

(1) கண்ணப்பரைக் காளத்தி மலையிலிருந்து அழைத்தேக வந்த பெற்ருேர் வறிதே மீண்டதை ஆசிரியர் 2 வரிகளில் கூறியது பாராட்டத் தக்கது.

"நாணனெடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணுமுறக் கமுமின்றி அணங்குறைவா ளையுங்கொண்டு
பேணுமகனுர்தம்பால் வந்தெல்லாம் பேதித்துங்
காணுநெறி தங்கள்குறி வாராமல் கைவிட்டார்."
—கண்ணப்பர் புராணம், 153.

(2) சேரமான் தம்மூரிலிருந்து தில்லைவந்த யாத்திரையை 3 பாக்களில் கூறியுள்ளமை போற்றத் தகுந்தாம்:

(i) "அந்நாட் டெல்லை கடந்தணைய
அமைச்சர்க் கெல்லாம் விடையருளி
மின்னூர் மணிப்பூண் மன்னவனார்
வேண்டு வாரை உடன்கொண்டு
கொன்னூர் அயில்வேல் மறவர்பயில்
கொங்கர் நாடு கடந்தருளிப்
பொன்னாட் டவரும் அணைந்தாடும்
பொன்னி நீர்நாட் டிடைப்போவார்."

(ii) "சென்ற திசையிற் சிவனடியார்
சிறப்பி னேடும் எதிர்கொள்ளக்
குன்றுங் கானும் உடைக்குறும்பர்
இடங்கள் தோறுங் குறைவறுப்பத்

துன்று முரம்பும் கான்யாறும்
துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையார் இடம்பலவும்
மேவிப் பணிந்து செல்கின்றார்.''

(iii) "பொருவில் பொன்னித் திருநதியின்
கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவும் தீர்த்தம் மகிழ்ந்தாடி
மருங்கு வடபாற் கரையேறித்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச்
செம்பொன் மன்றுள் நடம்போற்ற
உருகு மனத்தி னுடன்சென்றார்
ஒழியா அன்பின் வழிவந்தார்.''

—கழறிற்றறிவார் புராணம், 50—52.

(3) சேரமான் தில்லையிலிருந்து திருவாரூர் சென்றதை 2 பாக்களில் குறித்திருத்தலையும் காண்க :

(i) "அறிவின் எல்லை யாயதிருத்
தில்லை எல்லை அமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப்
பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்
செறியும் ஞான போனகர்வந்
தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல
வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார்.''

(ii) "வழியிற் குழியிற் செழுவயலின்
மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றராளந் திரைசொரியுந்
துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார்
விரும்பு மிடங்கள் இறைஞ்சியுகக்
கழிவிர் பெருவெள் ளமுங்கொள்ளாக்
கழனி ஆரூர் கண்ணுற்றார்.''

—கழறிற்றறிவார் புராணம், 61—62.

**5. சேக்கிழார் அவ்வத் தலத்தைப்பற்றிக் கூறுகையில் அத்தலத் தொடர்பான கதைகளை மறவாது கூறும் இயல்புடையவர் என்பதைக் கீழ்வரும் சில எடுத்துக் காட்டுகளால் அறிக.**

(1) "நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுதொண்டர் நவைவந்
துற்ற போததம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு."

(2) "ஆணை யாமென நீறுகண் டடிச்சேரன் என்னும்
சேணு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணி லாவபூண் வயவர்கள் மைந்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு."

(3) "கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபு ரிந்திட நேரிழை அறம்புரிந் ததனால்
பிறையு ரிஞ்செயிற் பதியில் பெருந்தொண்டை நாடு
முறைமை யாமென உலகினில் மிகுமொழி உடைத்தால்."

(4) "தீது நீங்கிடத் தீக்கலி யாமவு ணற்கு
நாதர் தாமருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர் தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதி சாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும்."

(5) "மருட்கொ டுந்தொழில் மன்னவன் இறக்கிய வரியை
நெருக்கி முன்திரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர் தம்பெருங் கோயிலின் ஒருபுறஞ் சூழ்ந்த
திருப்ப ரப்பையும் உடையதத் திரைக்கடல் வரைப்பு."

—திருக்குறிப்புத் தொண்டர் புராணம், 3—5, 30, 39.

(6) "தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளும்
தொல்லை வண்புகழ் முல்லைநா யகரைக்
'கொண்ட வெந்துயர் களை'கெனப் பரவிக்
குறித்த காதலின் நெறிக்கொள வருவார்

*வண்டு லாமலர்ச் சோலைகள் சூழ்ந்து*
*மாட மாளிகை நீடுவெண் பாக்கம்*
*கண்ட தொண்டர்கள் எதிர்கொள வணங்கிக்*
*காயும் நாகத்தர் கோயிலை அடைந்தார்.''*

—ஏயர்கோன் புராணம், செ. 278.

**6. (1) ஆதனூர்ச் சேரி வருணனை, (2) நாகை நுளைப் பாடி வருணனை, (3) உடுப்பூர் வேடர் சேரி வருணனை இவற்றைச் சொல் ஓவியங்களாகச் சேக்கிழார் தீட்டியுள்ள அருமைப்பாடு அறிந்து இன்புறற்பாலது.**

(1) ஆதனூர்ச் சேரி வருணனை :

(i) *''மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையில்*
*சுற்றம்விரும் பியகிழமைத் தொழிலுழவர் கிளைதுவன்றிப்*
*பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்*
*புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி.''*

(ii) *''கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்*
*வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்*
*காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட*
*ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி.''*

(iii) *''வன்சிறுதோல் மிசையுழத்தி மகவுறக்கு நிழல்மருதும்*
*தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழல்*
*மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்*
*புன்தலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கும் உடைத்*
*தெங்கும்.''*

(iv) *''செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்*
*குறியளக்க உளைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை*
*வெறிமலர்த்திண் சினைக்காஞ்சி விரிநீழல் மருங்கெல்லாம்*
*நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும்.''*

(v) "புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடையெங்கும்
தள்ளுந்தாள் நடையசையத் தளையவிழ் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நெல் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும்."

—திருநாளைப்போவார் புராணம், 6 - 10.

(2) நாகை நுளைப்பாடி வருணனை :

(i) "அந்நெ டுந்திரு நகர்மருங் கலைகடல் விளிம்பில்
பன்னெ டுந்திரை நுரைதவழ் பாங்கரின் ஞாங்கர்
மன்னு தொன்மையின் வலைவளத் துணவினில் மலிந்த
தன்மை வாழ்குடி மிடைந்தது தடநுளைப் பாடி."

(ii) "புயல ளப்பன எனவலை புறம்பணை குரம்பை
அயல ளப்பன மீன்விலைப் பசும்பொனி னடுக்கல்
வியல ளக்கரில் விடுந்திமில் வாழ்நர்கள் கொணர்ந்த
கயல ளப்பன பரத்தியர் கருநெடுங் கண்கள்."

(iii) "உணங்கல் மீன்கவர் உறுநசைக் குருகுடன் அணைந்த
கணங்கொள் ஓதிமம் கருஞ்சினைப் புன்னையங் கானல்
அணங்கு நுண்ணிடை நுளைச்சியர் அசைநடைக் கழிந்து
மணங்கொள் கொம்பரின் மருங்குநின் றிழியல மருளும்."

(iv) "வலைநெ டுந்தொடர் வடம்புடை வலிப்பவ ரொலியும்
விலைப கர்ந்துமீன் குவைகொடுப் பவர்விளி யொலியும்
தலைசி றந்தவெள் வளைசொரி பவர்தழங் கொலியும்
அலைநெ டுங்கட லதிரொலிக் கெதிரொலி அனைய."

—அதிபத்தர் புராணம், 5 - 9.

(3) உடுப்பூர் வேடர் சேரி வருணனை :

(i) "குன்றவ ரதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்திரள் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றில் ஐவனம் உணங்கும் எங்கும்."

21

(ii) "வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்தலைச் சிறும கார்கள் புரிந்துடன் ஆடல் அன்றி
அன்புறு காதல் கூர அணைபுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும்."

(iii) "வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறும்
கொல்எறி குத்தென் றார்த்துக் குழுமிய ஓசை அன்றிச்
சில்லரித் துடியும் கொம்பும் சிறுகணு குளியுங் கூடிக்
கல்லெனும் ஒலியின் மேலும் கறங்கிசை அருவி எங்கும்."

(iv) "ஆறலைத் துண்ணும் வேடர் அயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் உருவின் மிக்க விரவுமான் நிரைக ளன்றி
ஏறுடை வானந் தன்னில் இடிக்குரல் எழிலி யோடு
மாறுகொள் முழக்கங் காட்டும் மதக்கைமா நிரைகள் எங் [கும்."

—கண்ணப்பர் புராணம், 3 - 6.

7. சேக்கிழார் இயைதைக் கூற அஞ்சும் இயல்பினர் என்பது, 'நினைந்த அப்பரிசே செய்தான்' [58] என்று முத்தி நாதன் செயலைக் குறித்ததாலும், ஏனாதி நாதரது பகைவன் அவர் தலையை வாளால் வெட்டினான் என்பதற்குப் பதிலாகத் 'தன்கருத்தே முற்றுவித்தான்' [59] என்று குறித்ததனாலும் பிற [60] வற்றாலும் அறியலாம்.

8. சேக்கிழார் இடத்திற்கு ஏற்பச் சந்தங்கள் அமைத்துப் பாடலில் வல்லவர் என்பதைக் கீழ்வரும் பகுதியால் அறியலாம்.

(1) கண்ணப்பரின் கன்னிவேட்டைப் புறப்பாடு:

(i) "தாளில்வாழ் செருப்பர்தோல் தழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபம்மேவு கையர்வெய்ய வன்கணார்
ஆளியேறு போலவருக் அண்ணலார்முன் எண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்டம் மிக்குமேல் எழுந்ததே."

---

[58] V. 15. [59] V. 40.
[60] அரிவாள் தாயர் புராணம், செ. 19.

(ii) "நண்ணிமா மறைக்குலங்கள் நாடவென்று நீடுமத்
தண்ணிலா அரும்புகொன்றை தங்குவேணி யார்தமைக்
கண்ணில்நீடு பார்வையொன்று கொண்டுகாணும் அன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேடர் எம்மருங்கும் எகினார்."
—கண்ணப்பர் புராணம், 68, 71.

(2) கண்ணப்பரின் வேட்டை:

(i) "தாளறுவன இடைதுணிவன தலைதுமிவன கலைமான்
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா
நீளு ல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படுமுடலெழ விழுவனபல உழையே."

(ii) "பினமறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்நடுமுக மிசையுருவிட முடுகியவிசை புடனக்
கொன்முனையடு சமினமெதிர் குறுகியமுகம் உருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள்."
—கண்ணப்பர் புராணம், 79, 81.

(3) அப்பரைக் கொல்லவந்த யானை நிலை:

(i) "பாசதொடை நிகளதொடர் பறியத்தறி முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா
ஊசற்கரம் எதிர்சுற்றிட உரறிப்பரி உழறா
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால்."

(ii) 'இடியுற்றெழும் ஒலியில்திசை இபமுட்கிட அடியில்
படிபுகக்குற ரெளியப்படர் பவனக்கதி விசையில்
கடிதுற்றடு செயலிற்கிளர் கடலிற்படு கடையின்
முடிவிற்கனல் எனமுற்சினம் முடுககடு கியதே."

(iii) "மாடுற்றணை இவுளிக்குலம் மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டுறு குறைதைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதில்தெற்றிகள் சரியப்புடை அணிசெற்
றாடுற்றகல வெளியுற்றதவ் வடர்கைக்குல வரையே."

(iv) "பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்
ஏவிச்செறு பொருகைக்கரி யினைவுய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழல் தெளிவுற்றனர் பெரியோர்."

—அப்பர் புராணம், 111—114.

(ⅰ) புகழ்ச் சோழருடைய வீரரது போர்ச் சந்தம்:

(i) "கயமொடு கடமெதிர் குத்தின
அயமுடன் அயமுனை முட்டின
வயவரும் வயவரும் உற்றனர்
வியனமர் வியலிடம் மிக்கதே."

வேறு

(ii) "மாறும் றவிறற் படைவாள் அதிகன்
தூறுற் றபெரும் படைநூ ழில்படப்
பாறுற் றஎயிற் பல்பற் றறவிட்
டேறுற் றனன்ஒ டிஇருஞ் சுரமே."

—புகழ்ச் சோழர் புராணம், 20 & 29.

*9.* 'நயம்பட வுரைத்தல்' என்பது சேக்கிழார்பால் சிறந்து விளங்கக் காணலாம். திருநீலகண்டர் பரத்தை பால் நண்ணியிருந்தார் என்பதை ஆசிரியர் முதலில் வெளிப்படக் கூறாது, "இளமை மீதூர இன்பத் துறையி னில் எளியர் ஆனார்," [61] என்று குறித்தனர். "சிவபிரானால் இளமைப் பருவம் பெறப்போகும் பேறுடையர் ஆதலால் 'இன்பத் துறையினில் எளியர் ஆனார்; அவர்மீது குற்ற மில்லை" என்பதொரு பொருளும் கொள்ளக்கிடத்தல் காணலாம். இங்ஙனம் நயம்பட வுரைத்து இருபொருள் தோன்றக் கூறும் ஆற்றல் சேக்கிழார், கம்பர் போன்ற பெரும் புலவர்கள்பால் காணத்தக்கது.

*10.* நானிலம் - ஐந்திணை இவற்றின் சிறப்பியல்பு களைச் சேக்கிழார் கூறிச் செல்லல் கவனிக்கத்தக்கது.

---

[61] V. 3.

திருக்குறிப்புத் தொண்டர் புராணத்தில் ஏறத்தாழ 42 (6-46) செய்யுட்கள் தொண்டை மண்டலத்து நிலப் பிரிவுகள் - திணை வகைகள் - அந்நிலங்களில் அமைந்த தலங்கள், அவற்றின் சிறப்புகள் முதலியவற்றை விளக்கிச் செல்லுதல் படித்தின்புறத் தக்கது.

(1) சேக்கிழார் 6 முதல் 10 செய்யுள்வரை ஒவ்வொரு பாட்டிலும் குறிஞ்சி - முல்லை - மருதம் - நெய்தல் என்ற நானில இயல்பைப் பொதுவகையாகக் குறித்துச் சென்றுள்ளார் ;

(2) பிறகு ஒவ்வொரு தலத்தையும் சிறப்பு வகையாற் கூறத் தொடங்கி அந்நிலத்துப் பண்பும் அங்குள்ள சிறப்புடைத் தலங்களும் சுட்டிச் சென்றுளார்.

(i) குறிஞ்சி நிலத்தியல்பு (செ. 11), அந்நிலத்துச் சிறப்புடைய தலங்கள் (12-14)- திருக்காளத்தி, திரு இடைச்சுரம், திருக்கழுக்குன்றம்.

(ii) பாலை நிலத்தியல்பு (செ. 15) கூறப்பட்டுள்ளது.

(iii) முல்லை நிலத்தியல்பு (செ. 16, 17), அந்நிலத்துச் சிறப்புடைத் தலங்கள் (18-19)- திருமுல்லைவாயில், கலிகை மாநகர்.

(iv) மருதம்: மருதநில அமைப்பு (செ. 20), பாலாற்று வருணனை (செ. 21-22), மருதநிலச் சிறப்பு (23-27), வேளாளரைக் கொண்ட மூதூர்கள் (செ. 28), சதுர்வேதி மங்கலங்கள் (செ. 29), திருவல்லம், திருமாற்பேறு, திருப்பாசூர் என்ற தலங்கள் (செ. 30-32).

(v) நெய்தல்: நெய்தல் நில அமைப்பு (செ. 33), அந்நிலத்துத் தொழில்கள் (34, 35), மலர்கள் (36, 37), யாழ் (38), திரு ஒற்றியூர், மயிலாப்பூர், திருவான்மியூர் என்ற தலங்கள் (39-40).

(3) இவற்றுடன் சேக்கிழார் விட்டிலர்; இனித் திணை மயக்கம் (நிலங்கள் ஒன்றுடன் ஒன்று மயங்கல்) கூறலுற்றார்:

(i) நெய்தலும் குறிஞ்சியும் மயங்குதல்—அங்குள்ள தலம் மாமல்லபுரம் (செ. 41).

(ii) மருதமும் குறிஞ்சியும் மயங்குதல் (செ. 42).

(iii) முல்லையும் குறிஞ்சியும் மயங்குதல் (செ. 43).

(iv) முல்லையும் நெய்தலும் மயங்குதல் (செ. 44).

(v) முல்லையும் மருதமும் மயங்குதல் (செ. 45).

(vi) நெய்தலும் மருதமும் மயங்குதல் (செ. 46).

இங்ஙனம் குறிப்பிட்ட ஒரு முறையை வைத்துக் கொண்டு இவ்வளவு தெளிவாகவும் அழகாகவும் நானிலத் தியல்பும் ஐந்திணை இயல்பும் திணை மயக்கமும் வேறு தமிழ்க் காவியங்களில் காணல் அரிதாகும். இவ்வருமைப் பாட்டைத்,

"திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைந்
திணைவளமும் தெரிந்துக் காட்ட
மருத்தொண்டை ஆய்ச்சியர்சூழ் துன்றைநகர்
துலகவியே வல்லான் அல்லால்
கருத்தொண்டர் எம்போல்வார் எவ்வாறு
தெரிந்துரைப்பார்!" [62]

என்று சிவஞான முனிவரே பாராட்டுவாராயின், சேக்கிழார் பெருமானது செய்யுட் சிறப்பும் நிறைந்த புலமையும் சிறுவனுகிய நான் எங்ஙனம் எடுத்துரைக்க வல்லேன்?

---

[62] Kanchi Puranam, Nattuppadalam, V. 130.

# பிற்சேர்க்கை 1-10

## I. அறுபத்துமூவர் ஊர்—மரபு—தொண்டு—காலம்

1. அதிபத்தர்—பரதவர் - நாகபட்டினம் (சோ) - முதல் மீன் நாளும் சிவனுக்கு விட்டவர்; ஒரே மீன் கிடைத்தபொழுது அதனைச் சிவனுக்கு விட்டுப் பட்டினி கிடந்தவர்; பொன் மீன் ஒன்றே கிடைத்த அன்றும் அதனைச் சிவனுக்கு விட்ட சிறந்த பக்தர்—கி. பி. 660-840

2. அப்பூத்தியார் — பிராமணர் - திங்களூர் (சோ) - அப்பரையே தெய்வமெனக் கொண்டவர்; இறந்த மகனை மறைத்து அப்பருக்கு உணவு படைத்தவர் - கி. பி. 600-660.

3. அமர்நீதியார்—வணிகர் - பழையாறை (சோ) - சிவபிரான் தந்த கோவணச் சண்டை; மனைவி மகனோடு துலை புக்கவர்; அப்பர்க்கு முற்பட்டவர்; பாடல் பெற்றவர்; கி. பி. 400 - 600.

4. அரிவாள்தாயர்—வேளாளர் - கணமங்கலம் (சோ) - பிரசாதம் கரல் இடறிக் கீழே விழத் தம் தலையை அரிய முயன்றார்; உடனே லிங்கத்திலிருந்து கைவந்து தடுத்தது; அப்பரால் பாடப்பெற்றவர் - கி. பி. 400 - 600.

5. ஆனாயநாயனார்—இடையர்-மங்கலவூர் (சோ)-பஞ்சாக்ஷரத்தை 7-சுங்கள் பொருந்தக் குழலில் வாசித்தவர்-கி. பி. 660-840.

6. இசைஞானியார் — ஆதிசைவர் - திருநாவலூர் (ந) - சுந்தரர் தாயார்; சிவனடியார் - கி. பி. 840-865.

7. இடங்கழியார்—சிற்றரசர்-கொளும்பாளூர் (சோ)-ஆலயப் பூசனைகள் நடத்தினார்; நெல் திருடவந்த அடியார்க்கு வழங்கினார்; பலர்க்கும் தம் உடைமையெல்லாம் வழங்கினார்-கி. பி. 600 - 840.

8. இயற்பகையார்—வணிகர் - புகார் (சோ) - சிவனுக்கு மனைவியைத் தரத் துணிந்தவர்; எதிர்த்த உறவினரைக் கொன்றவர் கி. பி. 660 - 840.

9. இளையான்குடி மாறர்—வேளாளர் - இளையான்குடி (சோ) - விதையைக் குற்றிச் சமைத்துச் சிவனடியாரை உண்பித்தவர் - கி. பி. 660-840.

10. உருத்திர பசுபதியார்—பிராமணர் - திருத்தலையூர் (சோ) - கழுத்தளவு நீரில் நின்று உருத்திர மந்திரம் செபித்தவர் - கி. பி. 660 - 840.

11. எறிபத்த நாயனார்—மரபு கூறப்படவில்லை - கருவூர் (சொ) - புகழ்ச்சோழர் யானையைக் கொன்றவர் - கி. பி. 400-600.

12. ஏயர்கோன் கலிக்காமர்—வேளாளர் - பெருமங்கலம் (சோ) - ஏயர் தலைவர் ; சோழர் சேனைத்தலைவர் ; சுந்தரரை வெறுத்தவர் ; அவரைப் பார்க்க மறுத்துத் தம்மை மாய்த்துக் கொண்டவர் ; சுந்தரரால் எழுப்பப் பெற்றவர் - கி. பி. 840 - 865.

13. ஏனாதிநாதர்—சான்றார் - எயினனூர் (சோ) - வாள்வித்தை பயிற்றுவிப்பவர்; அவரைப் பகைவனை அதிசூரன் நீறு பூசி வந்து கொன்றான் - கி. பி. 660 - 840.

14. ஐயடிகள் காடவர்கோன்—பல்லவ அரசர்-காஞ்சீபுரம் (தொ)- பல நாடுகளையும் வென்றார்; சைவத்தைப் பரப்பினார் ; அரசை வெறுத்துத் தலங்களைத் தரிசித்து வெண்பாப் பாடினார் ; 11-ஆம் திருமுறையில் உள்ள 'க்ஷேத்திர வெண்பா'க்கள் இவர் பாடியன - கி. பி. 400 - 600.

15. கணநாதர்—பிராமணர் - சீகாழி (சோ) - சைவசமயப் பணிகட்கு ஆட்களைத் தயாரித்தவர் ; சம்பந்தரைப் பூசித்துப் பேறு பெற்றவர் - கி. பி. 600 - 660.

16. கணம்புல்ல நாயனார்—மரபு கூறப்படவில்லை - இருக்குவேளூர் (சோ) - விளக்கெரித்தவர்; கணம்புல்லை அறுத்து விற்று எண்ணெய் வாங்கி விளக்கு எரித்தவர்; அப்பரால் புகழப் பட்டவர் - கி. பி. 400 - 600.

17. கண்ணப்பர்—வேடர் - (தொ) - கண்ணை இடந்து அப்பியவர்; அப்பரால் புகழப்பட்டவர் - கி. பி. 400 - 600.

18. கலிக்கம்பர்—வணிகர் - பெண்ணாகடம் (ந) - வேலையாள் காலைக் கழுவ, நீர் வார்க்கத் தாமதித்த மனைவியின் கையை வெட்டினவர் - கி. பி. 660 - 840.

19. கலிய நாயனார்—வாணியர் - திருவொற்றியூர் (தொ) - விளக்கெரித்தவர்; மனைவியை விற்கத் துணிந்தவர்; உதிரத்தால் விளக்கு எரிக்கத் தலை அறுக்கச், சிவனால் ஆட்கொள்ளப் பட்டவர் - கி. பி. 660 - 840.

20. கழற்சிங்க நாயனார்—பல்லவ அரசர்-காஞ்சிபுரம் (தொ)-சிவத் தலங்கள்தோறும் மனைவியோடு சென்று தரிசித்துத் திருப்பணி செய்தவர் - இவர் மனைவி திருவாரூரில் பூ முகர்ந்ததால் செருத்துணை நாயனார் மூக்கறிந்தார்; இவர் உடனே மனைவியின் கையை வெட்டினார் - கி. பி. 840 - 865.

21. காரி நாயனார்—மரபு குறிக்கப்படவில்லை (பிராமணர்?) -திருக் கடவூர் (சா) கோவைபாடி மூவேந்தரிடமும் சென்று பொருள் பெற்றுக் கோவில் கட்டியவர் - கி. பி. 660-840.

22. காரைக்கால் அம்மையார்—வணிகர் - காரைக்கால் (சோ) - பேய்வடிவம் கொண்டவர்; (1) மூத்ததிருப்பதிகம் (2) இரட்டை மணிமாலை (3) அற்புதத் திருவந்தாதி முதலியன பாடியவர் (11-ஆம் திருமுறை.); சம்பந்தரால் பாடப் பட்டவர் - கி. 400-600.

23. குங்குலியக் கலயர்—பிராமணர் - திருக்கடவூர் (சோ) - தாலி விற்றுக் குங்குலியப்பணி செய்தவர்; சிவனால் அளப்பருஞ் செல்வம் பெற்றவர் ; திருப்பனந்தாளில் சாய்ந்திருந்த லிங்கத்தைத் தாமே இழுத்து நிறுத்தியவர்; சோழன் மதிப் பைப் பெற்றவர்; சம்பந்தர்க்கு விருந்தளித்தவர் - கி. பி. 600 - 6 60.

24. குலச் சிறையார்—மரபு கூறப்படவில்லை - மணமேற்குடி(பா)-அடியாரை ஆதரித்தவர்; பாண்டியன் மந்திரி; சம்பந்தரை வரவழைத்துப் பாண்டியனைச் சைவர் ஆக்கினவர் - கி. பி. 640 - 680.

25. கூற்றுவ நாயனார்—அரசர் - களந்தை (சோ) - பல அரசர் நாடுகளைக் கவர்ந்து ஆண்டவர்; பஞ்சாக்ஷரம் உச்சரித்தவர்; இறைவனால் முடி சூடப்பெற்றவர்; முடிசூட மறுத்த தீக்ஷிதர் அஞ்சிச் சேரநாடு சென்றனர் - களப்பிளர் காலம்- கி. பி. 400 - 600.

26. கோச்செங்கட்சோழர்—சோழ அரசர் - சிதம்பரம் (சோ) - சிவனருள் பெற்றவர்; பேரரசர்; கோவில்கள் கட்டியவர் - தீக்ஷிதர்க்கு மாளிகைகள் கட்டியவர்; அப்பர்-சம்பந்தரால் பாடப்பட்டவர் - கி. பி. 400 - 600.

27. கோட்புலி நாயனார்—வேளாளர்; சோழர் சேனாதிபதி - திருநாட்டியத்தான் குடி (சோ) - சிவனடியார்க்கென வைத்திருந்த நெல்லை உறவினர் காவலில் விட்டுப் பகைவரோடு போராடச் சென்றார்; உறவினர் நெல்லைத் தின்றுவிட்டனர்; அவர் அனைவரையும் நாயனார் கொன்றார்; அவர் புதல்வியரைச் சுந்தரர் புதல்வியாக ஏற்றார் - சுந்தரர் காலத்தவர்; கி. பி. 840 - 865.

28. சடைய நாயனார்—ஆதிசைவர்-திருநாவலூர் (ந)-சுந்தரர் தகப்பனார் - கி. பி. 840 - 865.

29. சண்டேசுரர்—பிராமணர் - திருச்சேய்ஞலூர் (சோ) - மணல் லிங்கத்திற்குப் பால் அபிஷேகம் செய்தவர்; தந்தை காலை வெட்டியவர்; அப்பர் சம்பந்தராற் புகழப்பட்டவர் - கி. பி. 400 - 600.

30. சத்தி நாயனார்—வேளாளர் - விரிஞ்சியூர் (சோ) - சிவனடியாரை இகழ்பவரை நாவறுத்தவர் - கி. பி. 660 - 840.

31. சாக்கிய நாயனுர்—வேளாளர் - சங்கமங்கை (சோ) - காஞ்சி சென்று பல சமயங்களை ஆராய்ந்தவர் ; பௌத்த வேடத்துடனே சிவலிங்க வழிபாடு செய்தவர் ; கல்லெறிந்து வழி பட்டவர் - கி. பி. 400 - 600.

32. சிறப்புலி நாயனுர்—பிராமணர் - திருஆக்கூர் (சோ) - பஞ்சாக்ஷரம் செபித்தவர் ; யாகம் செய்தவர் - கி. பி. 660 - 840

33. சிறுத்தொண்டர்—(மாமத்தியர்) - திருவெண்காடு (சோ) - பல்லவர் சேனைத்தலைவர் ; அடியார் உபசாரணையில் தேர்ந்தவர் ; பிள்ளைக்கறி சமைத்துப் பைரவர்க்குப் படைத்தவர்; வாதாபியை வென்றவர்; சம்பந்தர் காலத்தவர் - கி. பி. 600-660.

34. சுந்தரமூர்த்தியார்—ஆதிசைவர் - திருநாவலூர் (ந) - கோவிலில் மணம் செய்தார் ; இரு பெண்களை மணந்தவர் ; தலங்கள் தோறும் சென்று பாடியவர் - கி. பி. 840 - 865.

35. செருத்துணையார்—வேளாளர் - ஆரூர் (சோ) - கழற்சிங்க நாயனுர் மனைவியின் மூக்கறுத்தவர் - கி. பி. 840 - 865.

36. சேரமான் பெருமாள்—அரசர் - கொளுங்கோளூர் (சே) - பல தலங்களைத் தரிசித்தவர் ; சுந்தரரோடு கயிலை சென்றவர் ; பாணபத்திரற்குப் பொன் தந்தவர் ; (1) பொன் வண்ணத்து அந்தாதி (2) மும்மணிக்கோவை (3) திருக்கயிலாய ஞானவுலாப் பாடினவர் - கி. பி. 840 - 865.

37. சோமாசி மாறர்—பிராமணர் - திருவம்பர் (சோ) - சாதி பேதம் காணுதவர் ; வேதவிதிப்படி யாகம் செய்தவர் ; சுந்தரரைப் பூசித்தவர் - கி. பி. 840 - 865.

38. தண்டியடிகள்—மரபு கூறப்படவில்லை - திருவாரூர் (சோ) - குளம் வெட்டல் முதலிய தொண்டுகள் செய்தவர் ; சமணரோடு வர்திட்டுக் கண் பெற்றவர் ; சமணரைத் திருவாரூரில் இருந்து விரட்டினுர் ; சமணப் பாழிகளை அழித்துக் குளம் கட்டினுர் ; நமிநந்தி அடிகள் காலத்தவர்; அரசர் முன் சமணர் வாது கூறினர் - கி. பி. 400 - 600.

39. திருக்குறிப்புத் தொண்டர்—வண்ணார் - காஞ்சீபுரம் (தொ) - சிவனால் ஆட்கொள்ளப் பட்டவர்; மழையால் அடியார் து ஆடை காய முடியாததால் பாறையில் தம் தலையை மோதிச் சிவனார் தடுத்து ஆசீர்வதித்தார் - கி. பி. 660 - 840.

40. திருஞான சம்பந்தர்—பிராமணர் - சீகாழி (சோ) - சமணரை வென்றவர்; பாண்டியனைச் சைவனாக்கினவர்; தோற்ற சமணர் கழு வேறினர் - கி. பி. 600 - 660.

41. திருநாவுக்கரசர்—வேளாளர் - திருவாமூர் (தொ) - தொண்டை நாட்டைத் தூய்மைப் படுத்தியவர்; பல்லவனைச் சைவனாக்கினவர் - கி. பி. 600 - 600.

42. திருநாளைப்போவார்—பறையர் - ஆதனூர் (சோ) - தோல், வார் முதலியன கோவிலுக்கு உதவியவர்; பல தலங்களைத் தரிசித்தவர்; சிதம்பர தரிசனம் கண்டவர்; எரி மூழ்கிப் புகழ் உடம்பு பெறறவர் - கி. பி. 660 - 840.

43. திருநீலகண்டர்—குயவர் - சிதம்பரம் (சோ) - சிவன் திருவோட்டுச் சண்டை; தொண்டர் பாத்திரத்தைதயிடம் போனதால் உண்டான ஊடல் சிவனால் தீர்க்கப் பெற்றவர்-கி. பி. 660 - 840.

44. திருநீலகண்ட யாழ்ப்பாணர்—பாணர் - எருக்கத்தம் புலியூர் (தொ) - பல தலங்களைத் தரிசித்தவர்; பஞ்சாக்ஷரத்தை யாழிலே வாசித்தவர்; மதுரையில் சிவ கட்டளையால் திருமுன் சென்றவர்; பொற்பலகையில் இருந்து யாழ் வாசித்தவர்; சம்பந்தர் காலததவர் - கி. பி. 600 - 660.

45. திருநீலநக்க நாயனார்—பிராமணர் - சாத்தமங்கை (சோ)-லிங்கத்தின்மீது விழுந்த சிலந்தியை ஊதிய மனைவியைத் துறந்தவர்; மறுநாள் கடவுள் கட்டளைப்படி மனைவியைச் சேர்த்துக்கொண்டவர்; சம்பந்தர் காலத்தவர்; சம்பந்தர் மணத்தில் சோதியிற் கலந்தவர் கி. பி. -600 - 660.

46. திருமூலர்—மரபு கூறப்படவில்லை - வடநாடு - 'மூலன்' என்னும் இடையன் உடம்பிற் புகுந்தவர்; தமிழ் கற்றுத் 'திருமந்திரம்' பாடியவர் - கி. பி. 400 - 600.

47. நமிநந்தி அடிகள்—பிராமணர் - ஏமப்பேரூர் (சோ) - விளக்கெரித்தவர்; சமணர் பரிகசித்ததால் சிவனருள் பெற்று விளக்கெரித்தார்; தண்டி அடிகள் காலத்தவர்; கோவில் திருப்பணி செய்து வாழ்ந்தவர்; அப்பரால் பாடப் பெற்றவர் - கி. பி. 400 - 600.

48. நரசிங்க முனையரையர்—சிற்றரசர் - திருநாவலூர் (ந) - சுந்தரரை வளர்த்தவர்; சிவநெறி தழைக்க ஆண்டவர்; நூர்த்த வேடரான அடியார்க்குப் பொன்னும் உணவும் தந்தவர்; சுந்தரர் காலத்தவர் - கி. பி. 840 - 865.

49. நெடுமாற நாயனர்—பாண்டிய அரசர் - மதுரை (பா) - சமணர், சம்பந்தர் மடத்தைக் கொளுத்த இசைந்தவர்; பின் சைவரானர்; பல தலங்களைத் தரித்தவர் - கி. பி. 600-660.

50. நேச நாயனர்—சாலியர் - காம்பீலி (கு) - அடியார்க்குப் பல வகை ஆடைகளை நெய்து கொடுத்தவர் - கி. பி. 660 - 840.

51. புகழ்ச்சோழர்—பேரரசர் - உறையூர் (சோ) - கொங்கர், குடகர் திறைகட்ட ஆண்டவர்; பகைவர் தலைகளுள் சிறிய சடையுடைய தலை கண்டு, தம் வீரர் சிவனடியார் ஒருவரைக் கொன்றதாக எண்ணி வருந்தி நெருப்பிலே விழுந்தவர் - கி. பி. 400 - 600.

52. புகழ்த்துணை நாயனர்—ஆதிசைவர் - செருவிலிபுத்தூர் (சோ) - சிவாகம முறைப்படி அர்ச்சனை செய்தவர்; பஞ்சம்-பசி - உடல் மெலிவு - கலசம் திருமுடிமேல் விழத் தூங்கினர்; பஞ்சம் நீங்கும்வரை நாளும் ஒருகாசு சிவனருளால் கோவிலிற் கிடைக்கப்பெற்றுத் தொண்டு செய்தவர்; சம்பந்தரால் பாடப்பெற்றவர் - கி. பி. 400 - 600.

53. பூசலார் நாயனர்—பிராமணர் - திருநின்றவூர் (தொ) - மனத்

தால் கோவில் கட்டினவர் ; கயிலாசநாதர் கோவில் கட்டிய இராஜசிம்மன் காலத்தவர் - கி. பி. 685 - 720.

54. பெருமிழலைக் குறும்பர்—சிற்றரசர் - (குறும்பர்) -பெருமிழலை (சோ) - பஞ்சாக்ஷரத்தை ஜபித்தவர் ; சுந்தரர்காலத்தவர் ; சுந்தரர்க்குமுன் யோக முயற்சியால் உடலை விட்டுக் கயிலை சென்றவர் - கி. பி. 840 - 865.

55. மங்கையர்க்கரசியார்—இராணியார் - மதுரை (பா) - சோழன் மகளார்; கணவனைச் சைவன் ஆக்கினவர்; சம்பந்தர் காலத்தவர் - கி. பி. 600 - 660.

56. மானக்கஞ்சாறர்—வேளாளர் (சேனதிபதி) - கஞ்சாறு (சோ) - பரம்பரைச் சேனதிபதி ; ஏயர்கோன் மாமனர் - தம் ஒரே மகளான மணப்பெண் கூந்தலைச் சிவனடியார் கேட்க அரிந்தீந்தவர் - கி. பி. 840 - 865.

57. முருக நாயனர்—பிராமணர் - திருப்புகலூர் (சோ) - பூமாலைகள் தொடுத்தவர் ; சம்பந்தர் காலத்தவர் ; சம்பந்தர் திருமணத்தில் சோதியிற் கலந்தவர் - கி. பி. 600 - 660.

58. முனையடுவார்—வேளாளர் - திருநீடூர் (சோ)- தோற்றவர்க்காகப் போரிட்டுப் பணம் பெற்றுச் சிவன் அடியார்க்கு உதவி வந்தவர் - கி. பி. 660 - 840.

59. மூர்க்க நாயனர்—வேளாளர் - திருவேற்காடு (தொ)-மஹேஸ்வர பூசை செய்தவர் ; சூதாடி அடியார் சேவை செய்தார் ; சூதிலே மறுத்தவரைக் கத்தியால் குத்தினர்-கி.பி. 660-840.

60. மூர்த்தி நாயனர்—வணிகர் - மதுரை (பா) - சந்தனக்காப்புச் செய்தவர் ; பாண்டியனைக் கருநாடக (களப்பிர) அரசன் வென்று மதுரையை ஆண்டான்; சமண மன்னன்; மூர்த்தியார்கருச் சந்தனம் கிடைக்காதபடி செய்தான்; மூர்த்தியார் கையையே சந்தனக் கல்மீது தேய்த்தார் ; கை தேய்ந்தது; மூளை வந்தது. அரசன் இறக்க, வணிகர் சிவ வேடத்துடன் அரசர் ஆனர் - களப்பிரர் காலம் கி. பி. 400 - 600.

61. மெய்ப்பொருள் நாயனார்—சிற்றரசர் - திருக்கோவலூர் (ந) - முத்திநாதன் அடியார் வேடத்தில் வந்து இவரைக் கொன்றான் - கி. பி. 660 - 840.

62. வாயிலார் நாயனார்—வேளாளர் - மயிலாப்பூர் (தொ) - உள்ளத்தைக் கோயிலாக்கி மானத பூசை செய்தவர் - கி. பி. 660 - 840.

63. விறல்மிண்ட நாயனார்—வேளாளர் - செங்குன்றூர் (சே) - அடியார்களை வணங்குபவர்; அவர்களோடு இருந்தவர்; பல தலங்களைத் தரிசித்தவர்; சுந்தரரைத் தொகைபாடச் செய்தவர்.

# II. அறுபத்து மூவர் - பலவகைத் தொண்டர்

### கோயில் தொண்டு செய்தவர்—6 பேர்.

1. மூர்த்தி நாயனார் ... சந்தனககாப்பு.
2. நமிநந்தி அடிகள் ... விளக்கெரிப்பு.
3. கூற்றுவ நாயனார் ... பூசைகள் நடத்தினவர்.
4. கணம்புல்ல நாயனார் ... விளக்கெரிப்பு.
5. முருக நாயனார் ... பூமாலை கட்டியவர்.
6. திருநாளைப்போவார் நாயனார் ... தோலும், வாரும், நரம்பும், கோரோசனையும் கொடுத்து வந்தவர்; நந்தியை விலகச்செய்தவர்; தீ மூழ்கியவர்.

### பாடிப் பதம் பெற்றவர்—2 பேர்.

1. நீலகண்ட யாழ்ப்பாணர் ... யாழ்வாசித்துப் பாடினார்; மதுரைக் கோவிலுள் சிவனார் கட்டளைப்படி நுழைந்தவர்.

2. ஆனாய நாயனார் ... குழல்வாசித்து முத்திபெற்றவர்; பஞ்சாக்ஷரத்தைக் குழலில் வாசித்தவர்; சிவனால் ஆட்கொள்ளப்பட்டவர்.

## மனக்கோயில் கட்டியவர்—2 பேர்.

1. பூசலார் நாயனார் ... மனத்தால் கோயில் கட்டியவர்.
2. வாயிலார் நாயனார் ... மனக்கோயிலில் வழிபட்டவர்.

## மந்திரம் செபித்த அடியார்கள்—4 பேர்.

1. உருத்திர பசுபதியார் ... கழுத்தளவு நீரில் நின்று உருத்திர மந்திரம் செபித்தவர்.
2. சிறப்புலி நாயனார் ... பஞ்சாக்ஷரம் ஓதினவர்; யாகம் செய்தவர்.
3. சோமாசி மாறர் ... பஞ்சாக்ஷரம் ஓதினவர்; சிவனடியாரை ஆதரித்தவர்.
4. திருமூலர் ... 'திருமந்திரம்' பாடியவர்.

## அடியார்க்குத் தொண்டு செய்தவர்—10 பேர்.

1. அப்பூதி அடிகள் ... அப்பரை வழிபட்டவர்.
2. கணநாத நாயனார் ... சம்பந்தரை வழிபட்டவர்.
3. புகழ்த் துணை நாயனார் ... பொற்காசு பெற்றுத் தொண்டு செய்தவர்.
4. இடங்கழி நாயனார் ... நெல்தந்து அடியார்க்கு உதவியவர்.
5. நேச நாயனார் ... அடியார்க்கு ஆடை செய்து தந்தவர்.
6. நரசிங்கமுனையரையர் ... அடியார்க்கு அன்னமிட்டவர்.
7. பெருமிழலைக் குறும்பர் ... அடியார்க்கு அன்னமிட்டவர்; சுந்தரரையே வழிபட்டவர்; அவர்க்கு முன் கயிலை சென்றவர்.

8. சடையனார் ... சிறந்த அடியவர்
9. இசை ஞானியார் ...
10. கூற்றுவ நாயனார் ...

## சமணரோடு போரிட்டவர்—7 பேர்.

1. மூர்த்தி நாயனார் ... எலும்பும் தேயச் சந்தனம் அரைத்தவர்; சந்தனக் காப்பு; சமணர் துன்பம்; வட அரசன் தடை; அவன் இறக்க, இவர் அரசர் ஆனார்; இவரால் சைவம் பரவியது.
2. நமிநந்தி அடிகள் ... சமணர், 'நீரால் விளக்கெரி' என்றதும் அங்ஙனமே செய்து, சமணர் வாயை அடக்கியவர்.
3. தண்டி அடிகள் (கண் இல்லாதவர்) ... குளம்வெட்ட முயற்சி; சமணர் பரிகசிப்பு; கண் பெற்றுச் சமணரைத் திருவாரூரில் இருந்து விரட்டியவர்.
4. அப்பர் சமணராலும், மகேந்திரவர்மனாலும் பல துன்பங்கட்கு ஆளானவர்.
5. சம்பந்தர் ... சமணரை வாதிட்டுத் தோற்கடித்தவர்.
6. மங்கையர்க்கரசியார் ... சம்பந்தர்க்கு உதவி செய்தவர்.
7. குலச்சிறை நாயனார் ... சம்பந்தர்க்கு உதவி செய்தவர்.

## கோவில் கட்டிய அடியார்கள்—2 பேர்.

1. கோச்செங்கட் சோழர் பல கோவில்களைக்கட்டியவர்; சிதம்பரம் கோவிலைக் கட்டியவர்; தீக்ஷிதரை வரவழைத்து மாளிகை கட்டித் தந்தவர்.

2. காரி நாயனார் ... மூவேந்தர்மீது கோவை பாடிப் பணம் பெற்றுக் கோயில்கள் கட்டினார்.

## தலங்களைத் தரிசித்தவரும் பாடியவரும்—9 பேர்.

1. காரைக்கால் அம்மையார்...சிவனைப் பாடிக் கயிலாயம் சென்றவர்; பாடினவர்.
2. ஐயடிகள் காடவர்கோன்...பல தளிகள் தரிசித்து வெண்பாக்களைப் பாடினார்; தமிழிலும் வடமொழியிலும் வல்லவர்; மகனுக்கு முடி சூட்டித் தல யாத்திரை செய்தவர்.
3. கழற்சிங்க நாயனார் ... பலதளிகளுக்குத் தொண்டுசெய்தவர்; மனைவியார் கையை வெட்டியவர்.
4. அப்பர் ... பல தலங்களைத் தரிசித்து 3 திருமுறைகள் பாடினார்.
5. சம்பந்தர் ... ,,
6. யாழ்ப்பாணர் ... ,,
7. சுந்தரர் ... ,,
8. சேரமான் பெருமாள் நாயனார் ... ,,
9. விறல் மிண்டர் ... பலதலங்கள் தரிசித்து அடியாருடன் இருந்தார்; திருத்தொண்டத் தொகை பாடத் தூண்டியவர். (பாடாதவர்)

## சிவ வேடத்திற்கு மதிப்பீந்து இறந்தவர்—2 பேர்.

2. மெய்ப்பொருள் நாயனார்...பகைவன் முத்திநாதன் அடியாராக வந்து குத்திக் கொன்றான்.
2. ஏனாதி நாயனார் ... பகைவன் அதிசூரன் வீபூதி அணிந்து வந்து கொன்றான்.

## செயற்கரிய செய்தவர்—11 பேர்.

1. கண்ணப்ப நாயனார் ... கண்ணிடந்து அப்பினவர்.

2. புகழ்ச்சோழ நாயனார் ... பகைவர் தலைகளுள் ஒன்று அடியார் தலை எனக் கண்டதும் தீயில் வீழ்ந்து இறந்தார்.

3. சிறுத்தொண்ட நாயனார்...மகனை அறுத்து அமுது படைத்தவர்

4. குங்குலியக் கலய நாயனார்...தாலி விற்றுக் குங்குலியம் வாங்கியவர்; சாய்ந்த லிங்கத்தை நிமிர்த்தியவர்.

5. திருநீலநக்க நாயனார் ... லிங்கத்தின்மீது விழுந்த சிலந்தியை அப்புறப் படுத்திய மனைவி ஆசூயை செய்தனள் என்று அவளைத் துறந்து, பின் கடவுள் கூற, அவளை ஏற்றார்; சம்பந்தரோடு சோதியிற் கலந்தவர்.

6. கலிய நாயனார் ... திருவிளக்குப் பணி செய்தவர்; மனைவியை விற்க முனைந்தார்; உதிரத்தால் விளக்கு எரித்தார்.

7. சண்டேச நாயனார் ... மணலைப் பிடித்து லிங்கமாக வழிபட்டவர்; தந்தை காலை வெட்டியவர்.

8. கழற்சிங்க நாயனார் ... திருவாரூரில் தம் மனைவி பூ மோந்ததால் செருத்துணை நாயனார் மூக்கரிய, இவர் அவள் கையை வெட்டினார்.

9. அரிவாட்டாயர் (அரிவாள் தாய நாயனார்.) ... பிரசாதம் சிந்திப்போகக் கழுத்தை அரிய முயன்றவர்; அவர் கையைச் சிவனார் பற்றிக் கொண்டார்.

10. கலிக்கம்ப நாயனார் ... வேலையாள் பாதம் துலக்க நீர்விடத் தாமதித்த மனைவியின் கையை வெட்டியவர்.

11. கோட்புலி நாயனார் ... சிவநெல்லைத் தின்றதற்காக உறவின ரைக் கொன்றவர்; வாளோடு கயிலை சென்றவர்.

## சிவபிரானால் சோதிக்கப் பெற்றவர்—8 பேர்.

1. இயற்பகை நாயனார் ... மனைவியை அடியவருடன் அனுப்பிய வர்; தடுத்த உறவினரைக் கொன்றவர்.

2. திருநீலகண்ட நாயனார்... திருவோட்டுச் சண்டை; மனைவி யையும் இவரையும் சிவனார் கூட்டுவித்தார்.

3. இளையான்குடிமாற நாயனார் ... விதைத்ததைக் குற்றி வீட்டு உத்திரம் முதலியன கொண்டு சமைத்த வர்.

4. அமர்நீதி நாயனார் ... கோவணச் சண்டை; தராசில் அவர், மனைவி, மகன் ஏறி நின்றனர்.

5. திருக்குறிப்புத் தொண்டர்-அடியார்தந்த ஆடையை மழையால் மாலையில்உணர்த்திக் கொணரக் கூடாமையின் உயிரை மாய்க்க முயன்றவர்; சிவனார் அவரைப் பிடித்துக் காப்பாற்றினார்.

6. அதிபத்த நாயனார் ... முதல் மீன் சிவனுக்கென விட்டவர்; மீனே கிடைக்காமல் ஒரு பொன் மீனே முதலில் கிடைக்க அதையும் சிவனுக்கு விட்டவர்.

7. மானக்கஞ்சாறர் ... ஏயர்கோன் மாமனார்; ஒரே மகள் கூந்தலை அடியவர்க்கு அறுத்துக் கொடுத்தவர்.

8. ஏயர்கோன் கலிக்காம நாயனார் ... சூலைநோயால் வருந்திச் சுந்தரரைக் காண மறுத்துத் தற்கொலை செய்துகொள்ள முயன்றவர்; இறுதியில் சுந்தரரால் நோய் நீங்கப்பெற்று இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றவர்.

## அழுத்தமான சைவப்பற்றுடையவர்—6 பேர்.

1. எறிபத்த நாயனார் ... புகழ்ச் சோழர் யானை மாலையை அறுக்க, அதனைக் கொன்றவர்; பாகர் முதலியவரையும் கொன்றவர்.

2. சத்தி நாயனார் ... சிவனடியாரை இகழ்பவரின் நாவை அறுத்தவர்.

3. மூர்க்க நாயனார் ... சூதாடிப் பெற்ற பொருளைச் சிவனடியார்க்கு அமுதளிக்க உதவினார்; சூதாட்டத்தில் ஆடுபவரைக் குத்துபவர்; மூர்க்கர்.

4. சாக்கிய நாயனார் ... புத்தர் - காஞ்சி சென்று பல மதங்களைச் சோதித்துச் சைவராகிக் கல்லால் அர்ச்சித்து முத்தி பெற்றவர்.

5. நந்தனார் ... நந்தி விலகச் செய்தவர்; சிதம்பரத்தைத் தரிசித்தவர்.

6. முனையடுவார் நாயனார் ... போர் செய்து வந்த பணத்தைக் கொண்டு சிவன் அடியார்க்கு உணவு படைத்தவர்.

# III. அடியார் - அரசர் கால வரையறை

## சிவ ஸ்கந்தவர்மன் முதல் சிம்ம விஷ்ணுவரை

(கி. பி. 300 - 615)

**சோழர் :** —களப்பிரர் இடையீடு - கோப்பெருஞ் சோழர்- புகழ்ச் சோழர் - தண்டியடிகள் காலத்துச் சோழ அரசன் (பெரிய புராணம்).

**பாண்டியர் -** —களப்பிரர் இடையீடு - கடுங்கோன் (கி. பி. 575 - 600) - மாறவர்மன் அவனி சூளாமணி (கி. பி. 600 - 625).

**இக்கால நாயன்மார் :** — 1. கோச் செங்கட் சோழர், 2. புகழ்ச் சோழர், 3. சண்டீசர், 4. கண்ணப்பர், 5. காரைக்கால் அம்மையார், 6. திரு மூலர், 7. மூர்த்தி நாயனார், 8. கூற்றுவ நாயனார், 9. ஐயடிகள் காடவர்கோன், 10. கணம் புல்லர், 11. அரிவாள் தாயர், 12. நமி நந்தி அடிகள், 13. தண்டியடிகள், 14. சாக்கிய நாயனார், 15. எறி பத்தர், 16. அமர் நீதி நாயனார், 17. புகழ்த்துணை நாயனார்.

**இக்காலச் செய்திகள் :** —சங்ககாலத்திற்குப் பின் களப்பிரர் தொண்டை - சோழ - பாண்டிய நாடுகளைக் கைப்பற்றி யாண்டனர்; பல்லவர் காஞ்சியைக் கைப் பற்றி ஆண்டனர்; பல்லவர் பல முறை காஞ்சியைக் கை விட்டுத் தெலுங்கு நாட்டில் உறைந்தனர்; கோப் பெருஞ் சோழர் 70 மாடக் கோவில்களைக் கட்டியதும் சைவத்தை வளர்த்ததும் இக்காலத்தில்தான் என்று கூறலாம். ஏறக்குறையக் கி. பி. 575-ல் சிம்மவிஷ்ணு சோழனையும் களப்பிரரையும் வென்று காவரியாறுவரை மல்லவப் பெருநாட்டை ஏற்படுத்தினான்; அதேசமயத்தில் கடுங்கோன் என்னும் பாண்டியன் பாண்டிய நாட்டைக் களப்பிரரிடமிருந்து மீட்டான்; இவனுக்கு முற்பட்ட குழப்ப காலத்திற்றான் மூர்த்தி நாயனார் மதுரையை ஆண்டார் என்று பெரிய புராணம் கூறுகிறது.

## மகேந்திரவர்மன் I

## (கி. பி. 615 - 630)

**சோழன் :**— *மங்கையர்க் கரசியார் தந்தை* (பெரியபுராணம்)

**பாண்டியர் :** — *மாறவர்மன் அவனி சூளா மணி - சேந்த வர்மன்* (கி. பி. 625 - 640)

**இக்கால நாயனார் :** — *அப்பர்.*

**இக்காலச் செய்திகள் :** —*அப்பர் சமணத்திலிருந்து சைவ ரானார்; அரசனும் சைவனானான்; பல குகைக் கோவில்களை அமைத்தான்; சைவம் நன்கு பரவத் தொடங்கியது.*

## நரசிம்மவர்மன் I

## (கி. பி. 630 - 668)

**சோழன் :** — *மங்கையர்க் கரசியார் தந்தை அல்லது உடன்பிறந்தான்* (பெரியபுராணம்).

**பாண்டியன் :** — *நெடுமாறன்* (கி. பி. 640 - 680)

**இக்கால நாயன்மார் :** — 1. *அப்பர்,* 2. *சம்பந்தர்,* 3. *சிறுத் தொண்டர்,* 4. *யாழ்ப் பாணர்,* 5. *முருக நாயனார்,* 6. *நீலநக்கர்* 7. *நெடுமாறன்,* 8. *மங்கையர்க் கரசியார்,* 9. *குலச்சிறை,* 10. *குங்குலியக் கலயர்,* 11. *அப்பூதி அடிகள்.*

**இக்காலச் செய்திகள் :** — *சம்பந்தர் பாண்டியனைச் சைவ னாக்கினார்; அப்பரும் சம்பந்தரும் பல தலங்கட்குச் சென்று பதிகம் பாடிச் சைவத்தை நாடெங்கும் வேரூன்றச் செய்தனர்; சமணர் ஆதிக்கம் ஒழியப் பாடு பட்டனர்; சிறுத்தொண்டர் கி. பி. 642-ல் வாதாபிமீது படையெடுத்து வென்றார்.*

## பரமேசுவரன் I

## (கி. பி. 670 - 685)

**பாண்டியர் :** — *நெடுமாறன்.*

**இக்காலச் செய்திகள் :** —நெல்வேலிப்போர் - *நெடுமாறன்* + *சாளுக்கிய விக்கிரமாதித்தன்* I-*பெருவள நல்லூர்ப் போர் - பரமேசு வரன் + சாளுக்கிய விக்கிர மாதித்தன்* I.

## இராஜ சிம்மன் அல்லது நரசிம்ம வர்மன் II
(கி. பி. 685 - 720)

பாண்டியன் :—கோச்சடையன் இரணதீரன் (கி. பி. 680-710)

இக்கால நாயனார் : — பூசலார் நாயனார்

இக்காலச் செய்திகள் : — சாளுக்கிய விநயாதித்தன் படையெடுப்பு; பெரும் பஞ்சம் - காஞ்சி - கயிலாச நாதர் கோவில்; பூசலார் திரு நின்றவூரில் மனக்கோவில் கட்டினார்.

## பரமேசுவரவர்மன் II – பல்லவ மல்லன்
(720 - 790)

பாண்டியர் : —இராசசிம்மன் I (கி. பி. 710 - 765); நெடுஞ்சடையன் பராந்தகன் (கி பி. 765 - 790)

இக்காலச் செய்திகள் : — பரமேசுவரனது பட்டவர்த்தனம் என்ற யானை திரு முல்லை வாயிலில் முல்லைக் கொடியால் (சிவனருளால்) கட்டுண்டு மதம் அடங்கியது.

## தந்தி வர்மன்
(கி. பி. 790 - 840)

பாண்டியர் : — இராச சிம்மன் II (கி. பி. 790 - 800); வரகுணன் I (கி. பி. 800 - 830); சீமாறன் சீவல்லபன் (830 - 862)

இக்கால நாயன்மார் :—(680 - 840) 1. பூசலார், 2. காரியார், 3. அதி பத்தர், 4. கலிக்கம்பர், 5. கலியர், 6. சத்தியார், 7. வாயிலார், 8. முனையடுவார், 9. இடங் கழியார், 10. இயற்பகையார், 11. நேசர், 12. இளையான்குடி மாறர், 13. மெய்ப்பொருள் நாயனார், 14. திரு நாளைப் போவார், 15. ஏனாதி நாதர், 16. ஆனாயர், 17. உருத்திர பசுபதியார், 18. திருககுறிப்புத் தொண்டர், 19. மூர்க்கர், 20. சிறப் புலியார், 21. கண நாதர், 22. திரு நீல கண்டர்.

இவருள் மெய்ப்பொருள் நாயனார் திருக்கோவலூரை யாண்ட சேதிராயர் மரபினர்.

## நந்திவர்மன் III
(கி. பி. 840 - 865)

சேரர் :— சேரமான் பெருமாள்.

சோழன் :— சீமாறன் மருமகன் (பெரிய புராணம்)

பாண்டியர் :— சீமாறன் சீவல்லபன் (கி. பி. 830 - 862)-வரகுணன் II (கி. பி. 862 - 880)

இக்கால நாயன்மார் :— 1. சுந்தரர், 2. கழற்சிங்கர், 3. இசை ஞானியார், 4. சடையனார், 5. நரசிங்க முனையரையர், 6. விறன்மிண்டர், 7. கோட்புலியார், 8. ஏயர்கோன் கலிக்காமர், 9. மானக்கஞ்சாறர், 10. பெருமிழலைக் குறும்பர், 11. சேரமான் மாறர், 12. சேரமான் பெருமாள், 13. செருத்துணையார்.

இக்காலச் செய்திகள் :— மேற்கூறப் பெற்ற நாயன்மாருள் ஒருவர் சேரர்; மற்றொருவர் பல்லவர்; நரசிங்கர் திரு முனைப் பாடி நாட்டுச் சிற்றரசர்.

கழற்சிங்கர் (நந்தி வர்மன் III) இரட்ட அரசனை அமோக வர்ஷ நிருபதுங்கன் I என்பவன் மகளை மணந்தார்; தமிழரசர் மூவரையும் வென்று 'தெள்ளாறு எறிந்த நந்திவர்மன்' என்ற பெயர் பெற்றார்; இக்காலத்தில் சைவசமயம் தமிழகத்தில் நன்றாகப் பரவி இருந்தது.

# IV. அடியார் பெயர்கள்

| | | |
|---|---|---|
| 1. | காரணப் பெயர் கொண்டவர் | 38 பேர் |
| 2. | இயற் பெயரும காரணப்பெயரும் சேரக் கொண்டவர் | 7 ,, |
| 3. | இயற்பெயர் உடையவர் (?) | 18 ,, 63 பேர் |

### 1. காரணம் பற்றி வந்த பெயர்கள்

1. இயற்பகையார்—உலகஇயலுக்கு மாறுபட்டவர் (மனைவியைத் தந்தவர்; சுற்றத்தாரைக் கொன்றவர்).

2. திரு நீலகண்டர் - திருநீலகண்டத்தையே தொழுதமையால் வந்த பெயர் (S.4)

3. மெய்ப்பொருள் நாயனார் - 'சிவவேடமே மெய்ப்பொருள்' என நினைந்ததால் வந்த பெயர் (S.15).

4. ஏனாதி — மன்னர்க்கு வாள் ஆசிரியர்; பட்டப்பெயர். (S. 2-3)

5. திருக்குறிப்புத்தொண்டர் - அடியார் குறிப்புப்படி நடந்தவர்.(S.12)

6. திருமூலர்—(மூலன் என்ற இடையன் உடலிற் புகுந்து வாழ்ந்தவர்.) (S. 14)

7. மூர்க்கர் —சூதாடி; கத்தியால் குத்திய மூர்க்கர். (S. 9)

8. சாக்கியர் — புத்தமதம் பற்றி வந்த பெயர்(S. 1)

9. சேரமான் பெருமாள்-குடிபற்றிவந்தபெயர்; 'பெருமாள்' என்பது 'நாயர்' அரசர்க்கு வழங்கிய பெயர்.

10. கூற்றுவர்— பகைவர்க்கு யமன் போன்றார்.(S.8)

11. புகழ்ச் சோழர்—சைவ ஒழுக்கத்தால் புகழ்பெற்றவர்.

12. அதிபத்தர்—மிக்க பக்தி பூண்டவர். (S.9)

13. சத்தி நாயனார்—பகைவரை நா அரியும் சக்தி (வன்மை) உடையவர் (S. 3); இதனை இயற்பெயர் எனவும் கொள்ளலாம்.

14. ஐயடிகள் காடவர்கோன்—சிறப்புடைப் பெரியார் ஆகிய பல்லவ அரசர்.(S.1)பஞ்சபாத சிம்மன் என்பது வடமொழிப் பெயர்.

15. கணம்புல்லர்—கணம்புல்லை அறுத்து விற்று விளக்கெரித்தார். (S. 5)

16. நெடுமாறர்—' மாறர் '—பாண்டியர்; பெருமன்னர்—பாண்டியர். (S. 9)

17. வாயிலார் —சாதுவானவர்.

18. முனையடுவார் — போர்முனையில் அடுபவர்.

19. செருத்துணையர்— செரு(வில்)துணையாக நின்று போர் செய்பவர்.

20. புகழ்த்துணையார். — புகழைத் துணையாகக்கொண்டவர் —கடவுளிடம் காசுபெற்றுச் சிவனடியார்க்குத் துணைநின்றவர்.

21. கோட்புலியார் — (கோள் + புலி)— பகைவரைப் புலி போற் பாய்ந்து பற்றிக் கொல்பவர்.

22. நேச நாயனார்—சாலியர்—அடியாரிடம் நேசம் கொண்டவர்.

23. கோச் செங்கட் சோழர்—கோ—அரசர்; சிவந்த கண்ணினர்; சோழர்.

24. திருநாவலூரர்— ஊர்பற்றி வந்த பெயர்.

25. ஆனாயர்—இடையர், மரபு பற்றி வந்த பெயர்.

26. குறும்பர்— ,,

27. அமர்நீதியார்— கோவணச் சண்டை —நீதியை நிலை நிறுத்தியவர்.

28. எறிபத்தர் — (யானையையும்) பாகனையும் மழுவால் எறிந்த பத்தர்.

29. குங்குலியக் கலயர் —குங்குலிக்கலயம் வைத்துப் பூசனை செய்தவர்.

30. மானக் கஞ்சாறர்— பெருமைபொருந்திய 'கஞ்சாறு' என்னும் ஊரினர்; ஊர்பற்றி வந்த பெயர்.

31. கலிக்காமர்—வயர் தலைவர்;கலியையும் வரவேற்பவர்.— எமனையும் வரவேற்றுத் தற்கொலை செய்துகொண்டவர்.

32. சோமாசி மாறர் - பிராமணர் - சோமனது ஆசி பெற்ற மாறர்; சோமயாகம் செய்தவ ராகலாம். 'சோமயாஜி' என்ற பட்டம் 'சோமாசி' என மருவியதாகவும் கொள்ளலாம்.

33. சிறப்புலி - சிறப்புடைய புலிபோன்றவர்.

34. கழற்சிங்கர் - பல்லவ அரசர்; கழலை அணிந்தவர்; பகைவர்க்குச் சிங்கம் போன்றவர்.

35. மங்கையர்க் கரசியார் - சம்பந்தர் இட்டபெயராகலாம்; 'மானி' என்பது இயற்பெயர்.

36. இசை ஞானியார் - இசைஞானம் உடையவராகலாம்.

37. குலச் சிறையார் - தம் குலத்தைச் சமணத்தில் விழாமல் சிறை (தடுத்தல்) செய்தவர். (?)

38. கண நாதர் - கணங்களை (அடியார்களை)த் தயாரித்த தலைவர். (காரணப் பெயர்)

39. விறல் மிண்டர் - விறல்-வலிமை; மிண்டர்—மூடர்.

40. திரு நாளைப் போவார் - 'நாளைப் போவேன்' என்று சொல்லிவந்த காரணத்தால் வந்த பெயர்.

41. இடங்கழி - நாழி அல்லது படியின் பெயர்; அடியார்க்கு நெல் அளந்து கொடுத்தமையால் வந்த பெயராகலாம்.

## III. இயற் பெயர் - காரணப் பெயர்

1. திண்ணனார் (s. 17) — கண்ணப்பர் (s. 183)
2. தாயர் (s. 5) — அரிவாள் தாயனார் (s. 22)
3. விசார சருமர் (s. 12)—சண்டேசர் (s. 74)
4. புனித வதியார் (s. 2)—காரைக்கால் அம்மையார் (58)
5. ஆளுடைய பிள்ளையார் (s. 26)- சிவஞான சம்பந்தர்(69)
6. மருள் நீக்கியார் (s. 18) - நாவுக் கரசர் (s. 74)
7. பரஞ் சோதியார் (s. 2) - சிறுத் தொண்டர் (s. 15)

## II இயற் பெயர்

1. இளையான் குடி * (ஊர்)-மாறர்-மாறன் என்ற பட்டம் பெற்றவர்; மகன் கொடைக் குரிய வேளாளர் போலும்!
2. மூர்த்தி நாயனார் (s. 9)
3. முருகனார் (s. 5) - சங்க கால வழக்கு
4. பசு பதியார் (s. 3)

---

* இஃது 'இளையமாறன்குடி' எனக் கல்வெட்டுப் பெற்றது.

5. அப்பூதி அடிகள்
6. திரு நீல நக்கர் (S. 4) சிவனுர் பெயர்
7. நமி நந்தி அடிகள் பிராமணர் (S. 4)
8. தண்டி அடிகள்
9. சிறப் புலி (இயற் பெயரா ?)
10. நரசிங்க முனையரையர் - நரசிங்கர் - இயற்பெயர்
11. கலிக்கம்பர்
12. கலிய நாயனுர்
13. காரியார்
14. திரு நீலகண்டர் (யாழ்ப்பாணர்)
15. சடையனுர்
16. பூசலார்

# V. நாயன்மார் மரபுகள்

## அரச மரபினர் — 12 பேர்

1. மெய்ப் பொருள் நாயனுர்
2. பெரு மிழலைக் குறும்பர்
3. சேரமான் பெருமாள்
4. கூற்றுவ நாயனுர்
5. புகழ்ச் சோழ நாயனுர்
6. நரசிங்க முனை அரையர்
7. ஐயடிகள் காடவர் கோன்
8. நின்ற சீர் நெடுமாறர்
9. கழற் சிங்க நாயனுர்
10. இடங்கழி ,,
11. மங்கையர்க் கரசியார்
12. கோச் செங்கட் சோழர்

### இந்த அரச மரபினருள்—

1. சேரர் : — சேரமான் பெருமாள். 1
2. சோழர் : — கோச் செங்கட் சோழர் + புகழ்ச் சோழர். 2
3. பாண்டியர் : — நெடுமாறர் + மங்கையர்க் கரசியார். 2
4. பல்லவர் : — கழற் சிங்கர் + ஐயடிகள் காடவர் கோன் 2
5. களப்பிரர் — கூற்றுவ நாயனுர். 1

6. சிற்றரசர் : — (1) மெய்ப் பொருள் நாயனார் (நடு நாடு— திருக் கோவலூர்)

(2) நரசிங்க முனை யரையர் (நடு நாடு-திரு நாவலூர்)

(3) பெருமிழலைக் குறும்பர் (சோழ நாடு - பெரு மிழலை)

(4) இடங்கழி நாயனார் (கோனாடு - கொடும் பாளூர்)

12 பேர்

## அந்தணர் - 12 பேர்

1. குங்குலியக் கலயர்
2. முருக நாயனார்
3. உருத்திர பசுபதியார்
4. சண்டேசர்
5. அப்பூதி யடிகள்
6. திரு நீல நக்கர்
7. நமி நந்தி அடிகள்
8. சம்பந்தர்
9. சோமாசிமாற நாயனார்
10. சிறப்புலி நாயனார்
11. கண நாதர்
12. பூசலார் நாயனார்

தில்லைவாழ் அந்தணர்

## வணிகர் - 6 பேர்

1. இயற்பகையார்
2. அமர் நீதி நாயனார்
3. மூர்த்தி நாயனார்
4. காரைக்கால் அம்மையார்
5. கலிக்கம்ப நாயனார்
6. கலிய நாயனார்

## வேளாளர் - 13 பேர்

1. இளையான்குடி மாறர்
2. விறல் மிண்டர்
3. மானக் கஞ்சாறர்
4. அரிவாட்டாயர்
5. அப்பர் சுவாமிகள்
6. ஏயர்கோன் கலிக்காமர்
7. மூர்க்க நாயனார்
8. சத்தி நாயனார்
9. வாயிலார் நாயனார்
10. முனையடுவார் நாயனார்
11. செருத்துணை நாயனார்
12. சாக்கிய நாயனார்
13. கோட் புலி நாயனார்

